ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த

# ஸ்ரீ ர ங் க ரா ஜ ஸ் த வ த் தி ற் கு

## ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார் இயற்றிய தத்வார்த்த சிந்தாமணி யென்னும் வியாக்யானத்தின் அவதாரிகை.

हतावद्या हृद्या गुणगणसमृद्धा सुमधुरा गभीरा सौहार्दं मनसि विदधाना विजयते ।
यदीया श्रीसूक्तिः स खलु भगवान् भद्रचरितो गुरुः श्रीभट्टार्यो निवसतु मदीये हृदि सदा ॥
श्रीगोष्ठीनगरान्निवृत्तिसमये संतोषवैवश्यतः श्रीभट्टार्यगुरूत्तमो गुणनिधिः श्रीरङ्गराजस्तवम् ।
दिव्यं यं रचयाम्बभूव, विदुषां भोग्य स्सएष स्तवो जिह्वाग्रे मम दोषगन्धविधुरो नित्यं समुज्जृम्भताम् ॥
श्रीकाञ्चीपरवादि भीकरगुरु श्रीवंशलब्धोदयः दासः श्रीयुतवैष्णवांघ्रिनलिनेष्वण्णङ्गरार्याह्वयः ।
व्याचष्टे सकलात्महृद्यसरणौ श्रीरङ्गराजस्तवं दोषे दृष्टिमिह त्यजन्तु सुधियो निर्मत्सरा वत्सलाः ॥
Srivatsam
प्रतिपदमर्थनिरूपणमादौ विरचय्य तदनु तात्पर्यम् । विशदीकरवाणि तथा यथा नु जिज्ञासुहृदयमभिनन्देत् ॥

மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து நித்ய ஸம்ஸாரிகளாய்ப் போருகின்ற நாம் அந்தமில் பேரின்பம் பெறவேண்டில் அதற்கு எம்பெருமானுடைய முகமலர்த்தியை ஸம்பாதித்துக்கொள்வது தவிர வேறொருபாயமில்லை. திருவுள்ளம் உவந்தாலல்லது திருமுகம் மலராதாகையால், அத்திருவுள்ளவுகப்புக்கு இன்றியமையாதவுபாயம் அவனை ஸ்தோத்ரஞ்செய்வதேயாம். க்ருதயுகத்தில் த்யானிப்பது சிறந்ததென்றும், த்ரேதாயுகத்தில் யஜ்ஞயாகங்கள் செய்வது சிறந்ததென்றும், த்வாபரயுகத்தில் அர்ச்சனைகள் செய்வது சிறந்ததென்றும், இக்கலியுகத்தில் ஸ்துதிப்பது சிறந்ததென்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றமையாலும், எம்பெருமானைத் துதிப்பதற்கு இன்னார் உரியர் இன்னார் உரியரல்லர் என்னும் நிபந்தனையில்லாமைபற்றி இது ஸர்வாதிகாரமாகையாலும், எம்பெருமானை வசப்படுத்திக்கொள்ள மற்றும் பல உபாயங்கள் இருந்தாலும் துதிப்பதென்னுமிதுவே மிகச்சிறந்ததென்று ஸகல சாஸ்த்ர ஸம்மதமாயிருத்தலாலும் முமுக்ஷுக்களனைவரும் இவ்வுபாயத்தையே கைப்பற்றுதல் ப்ராப்தமாயிராநின்றது.

அறிவிலாமனிசரான நாமாகச் சில சொற்களைத் தொடுத்து ஸ்துதிசெய்வதிற் காட்டிலும் அறிவிற்சிறந்த ஆரியர்கள் அருளிய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு ஸ்துதி செய்வது நன்றாதலால், இந்த நன்மையை நாம் பெற்று எளிதில் உய்வதற்காகவே ஆளவந்தார் முதலிய நம் பூருவாசாரியர்கள் பேரருள் கொண்டு அமுதிலும் ஆற்ற வினிய பலபல ஸ்தோத்ரங்களை அருளிச்செய்தருளினர்.

http://acharya.org

அப்படிப்பட்ட ஒப்புயர்வற்ற ஸ்தோத்ரங்களுள் * வானிட்ட கீர்த்தி வளர்கூரத்தாழ்வான் திருக்குமாரரான ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவம் என்னுமிந்த ஸ்தோத்ரம் எப்படிப்பட்ட கல்நெஞ்சினரையும் நீர்ப்பண்டமாயுருக்குவதிலும், அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்களை அவலீலையாகவே எடுத்துரைப்பதிலும் ஒப்பற்றதென்பதை உணர்ப்பதற்கு நாமோ அதிகாரிகள்.

கவித்வ ஸாமர்த்தியத்தைக் காட்டுவதற்கென்றே சிலர் ஸ்தோத்ரங்கள் இயற்றுவது போலல்லாமல், ஸ்ரீரங்கநாதனிடத்துள்ள பக்திப் பெருங்காதல் புறவெள்ளமிட்ட ஸ்ரீஸூக்திகளிவை என்பது சொற்போக்கில் ஸ்பஷ்டமேயாம். இந்த ஸ்தோத்ரம் திருவவதரிக்க வேண்டிய காரணம் யாதெனில்; கேண்மின்:—

பட்டர் திருவரங்கம் பெரியகோயிலில் எம்பெருமானுருடைய ஸ்தானத்திலே வீற்றிருந்து தர்சநநிர்வாஹகராயிருக்கும் நாளிலே, அவ்விடத்து ஸப்தப்ராகாரங்களுள் ஆருவது ப்ராகாரமான திரிவிக்கிரமன் திருவீதித் திருமதிள் மிகவும் ஜீரணமாய்ச் சரிந்துவிழ அதனைச் சீர்படுத்திக் கட்டுவிக்கத் தொடங்கிய வீரஸுந்தரப்ரஹ்மராயன் அந்த மதிலின் நேர்மைக்கு மாருகப் $ பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய திருமாளிகை குறுக்கிட்டிருப்பது கண்டு முன் போல மதிலை ஒதுக்கிக்கட்டாமல் அவர்திருமாளிகையை இடித்து நேரொழுங்காகத் திருமதிள் கட்டுவிக்க முயன்றான். அதனையறிந்த பட்டர் அவ்வரசனை நோக்கி 'நீ கட்டுவிக்கிற திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம்? பாகவத சிகாமணியான பிள்ளைப்பிள்ளையாழ்வான் மஹாநுபாவராதலால் அவருடைய மங்களாசாஸநமன்றோ நம்பெருமாளுக்குப் பாதுகாப்பு; முன்பு திருமங்கையாழ்வார் நான்காவது ப்ராகாரங் கட்டுவிக்கிறபோது தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலைசேர்க்கிற இடமாகிய அடந்தை நடந்தை என்னும் பூஞ்சோலை நேர்பட, அவற்றை யழித்துக் குறுக்கி மதில்கட்ட மனங்கொள்ளாமல் ஒதுக்கி மதில் கட்டவில்லையா? அதுபோலவே இப்பொழுதும் பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய திருமாளிகையை விட்டு ஒதுங்கத் திருமதிள்கட்டுவிப்பதே தகுதி' என்று நல்லறிவு கூறினர். அதுகூறவுங் கேளாமல் வீரசுந்தரன் 'மஹானுன இவ்வாசிரியர் இங்ஙனம் நியமிக்கிறரே' என்று கௌரவங்கொள்ளாமல், தான் ஆழ்வான் திருவடிகளை ஆச்ரயித்தவனாயிருந்தும் ஆசார்யபுத்ரருடைய நியமநமன்றோ வென்றும் கணிசியாமல் பட்டர்வார்த்தையை உபேக்ஷித்து, பிள்ளைப்பிள்ளையாழ்வானது திருமாளிகையை இடித்துத்தள்ளி நேர்படத் திருமதிள் கட்டுவித்தான். இது காரணமாகப் பட்டர்க்கும் அவ்வரசனுக்கும் உண்டான மநஸ்தாபம் நாளடைவிலே மேலிட, வீரசுந்தரன் பட்டரை ஸ்ரீரங்கத்தில் வாழவொட்டாது மிகவும் உபத்ரவிக்க, பட்டர் யாரோடுஞ் சொல்லாது கோயிலினின்று புறப்பட்டுத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளலானர்.

இங்ஙனே திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கும்போது, திருவரங்கத்தையும் நம்பெருமாளையும் விட்டுப் பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் நொந்து * இடர் விளங்கு கரைப்பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனியம்மான் தன்னைக் கண்ணாரக்கண்டுகக்கும் காதல் இனைத்து, முன்பு குலசேகராழ்வார் "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரைக்

$ பிள்ளைப்பிள்ளையாழ்வானென்பவர் கூரத்தாழ்வானுடைய ப்ரிய சிஷ்யர்களிலொருவர்.

Srivatsam

http://acharya.org

கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங், கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என் கண்ணிணைகள் என்றுகொலோ களிக்குநாளே!'' என்றும், "களிமலர்சேர்பொழிலரங்கத்து உரகமேறிக் கண்வளருங் கடல்வண்ணர் கமலக்கண்ணும் ஒளிமதிசேர் திருமுகமுங் கண்டுகொண்டு என்னுள்ளம் மிக என்றுகொலோ உருகுநாளே" என்றும், "அணியரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும் நிறந்திகழு மாயோனைக் கண்டென் கண்கள் நீர்மல்க என்றுகொலோ நிற்குநாளே" என்றும் அரற்றினாற்போல, இவர் தாமும் *1. கதாபுநஸ் காவேரீதடபரிஸரே ரங்கநகரே * என்றுதியான சில ச்லோகங்களைச் சொல்லி அரற்றிக்கொண்டிருந்தனர்;

இங்ஙனமிருக்கையில் கடலைக்கலக்கினாற்போலே பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கிப் பாகவதவிரோதஞ் செய்தவனை அந்த வீரசுந்தரன் இறந்துபோக, அச்செய்தியைப் பட்டர்க்கு அறிவிக்க விரும்பிய பிள்ளைப்பிள்ளையாழ்வான் உடனே கோயிலினின்று திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளி நடந்த செய்தியைச் சொல்ல, இது கேட்டவளவிலே பட்டர் பாகவதவிரோதி தொலைந்தானென்று மகிழ்ச்சியுறக் கடவராயினும் அது செய்யாது, பிராட்டிபக்கல் பேரபராதத்தைச் செய்த இராவணன் இறந்தபின்பு பெருமாள் "போராற்றலை யுடையனான இவ்வரக்கன் தம்பியான விபீஷணன் போன்று தன்னைச் சரணமடைந்து உய்ந்தானில்லையே" என்பதைக்குறித்துத் திருவுள்ளமிரங்கினாப்போல, 'வீரசுந்தரன் பின்னை அபராத க்ஷாமணஞ் செய்துகொண்டு கடைத்தேறப்பெறாது போயினனே!' என்று சிந்தித்து, திருக்கோட்டியூரில் நின்றும் புறப்பட்டு ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளுங்காலத்துத் திருக்காவிரியாற்றினருகே வந்தவாறே, இத்திருப்பதியைச் சிலகாலம் பிரிந்திருக்க நேர்ந்த வருத்தமும் இப்போதுவந்து கூட நேர்ந்த மகிழ்ச்சியும் விரவி ச்லோகரூபமாக வெளிப்படத்தொடங்கவே, அத்திருக்காவேரியிற் படிந்தது முதலாகவே தம்முடைய அநுபவங்களை வெளியிடும் முறைமையிலே இந்த அற்புதமான ஸ்தோத்ரம் திருவவதரித்ததாயிற்று.

இவர் தம்முடைய திருத்தமப்பனாரான ஆழ்வான் திருவாக்கில் நின்றும் மிகச்சிறந்த பஞ்சஸ்தவங்கள் திருவவதரிப்பதற்கு மஹாத்ரோஹியான சோழனுடைய உபத்ரவமே மூலகாரணமானதுபோலே, இவருடைய திருவாக்கில் நின்றும் இந்த திவ்யஸ்தவம் திருவவதரிப்பதற்கும் ஒரு பாபியினுடைய உபத்ரவமே மூலகாரணமாக நின்றமையால் அப்பாவிகளும் ஒருவகையாலே நமக்கு உபதேசயாகளாவர் போலும்.

இந்தஸ்தவம்—பூர்வசதகமென்றும் உத்தரசதகமென்றும் இரண்டு பகுதிகளையுடையது. பூர்வசதகம் நூற்றிருபத்தேழு ச்லோகங்கள் கொண்டது; உத்தரசதகம் நூற்றைந்து ச்லோகங்கள் கொண்டது. நம்பூர்வாசார்யர்களின் ஸ்தோத்ர நூல்களெல்லாம் ரஹஸ்யார்த்த விவரணங்களாக அவதரித்தனவாதலால், மந்த்ரரத்நமென்னும் த்வயத்திற்கு விவரணமாகப் பிறந்த இந்தஸ்தவமும் பூர்வசதகத்தாலே த்வயத்தின் பூர்வவாக்கியப் பொருளையும் உத்தர சதகத்தாலே அந்த த்வயத்தின் உத்தரவாக்யப் பொருளையும் விவரிப்பதாகப் பெரியோர் நிர்வஹிப்பர்கள்.

---

1. இது முதலிய ஐந்தாறு ச்லோகங்கள் பட்டருடைய விடுதி ஸ்ரீஸூக்திகளென்று அநுஸந்திக்கப்பட்டுவரும், "ஸப்த ப்ராகார மத்யே" என்ற தொடக்க ச்லோகத்துடன் அநுஸந்திக்கப்பட்டு வருகிற ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரத்தில் இந்த ச்லோகங்கள் காணத்தக்கன.

http://acharya.org

இவற்றுள் பூர்வ சதகத்தில் ஆசார்ய பரம்பராஸ்துதி முன்னாக விழிந்து மங்களாசரணம் செய்து, அவைபடக்கம்கூறி, திருக்காவேரியாற்றில் நீராடினமையைப் பேசி, அங்குள்ள சோலைகளின் வாய்ப்பை வருணித்து, திருவரங்கமாநகரின் சிறப்பைப் பாடி, நகர பரிபாலகர்களை வணங்கி அவர்களிடத்து அநுமதிபெற்று உள்ளே புகுந்து, அங்குள்ள ஸகல சராசரங்களையும் நித்ய முக்தர்களின் திருவுருவமாகப் பாவித்து வணங்கி, கோபுர ப்ராகாரங்களோடு கூடின பெரியகோயிலின் நிலைமையை வருணித்து, திருமங்கையாழ்வார் ஏறியருளப்பண்ணின திருமண்டபங்களையும் திருமதில்களையுந் தொழுது, ஸந்நிதி த்வாரபாலகர்களை ஸேவித்து, ஆயிரக்கால் மண்டபத்தை மங்களாசாஸநம் செய்து, சந்த்ரபுஷ்கரிணியிற் குடைந்தாடினமை கூறி, ஆழ்வார்கள் பதின்மரையும் இறைஞ்சி, ப்ரணவாகார விமானத்தைக் கைதொழுது, மேட்டழகு சிங்கரை மேவிவணங்கி, திருப்புன்னைமரத்தைத் தாழ்ந்துகொழுது ஸேனை முதலியாரையும் பெரிய திருவடியையும் பரிவாரங்களுடன் ஸேவித்து, பஞ்சாயுதாழ்வார்கள் சிறிய திருவடி விபீஷணாழ்வான் என்னு மிவர்களையும் வாழ்த்தி, திருப்பிரம்பையும் திருமணத்தூணையும் வழிபட்டு கர்ப்பக்ருஹத்தை அநுபவித்து, திருவடிவருடும் பிராட்டிமார்களையும் சாமரம்பணிமாறும் மங்கைமார்களையும் துதித்து, ஆக இவ்வளவு அநுபவங்களையும் அறுபத்திரண்டு ச்லோகங்களாலே வரிசைக் கிரமமாக வகுத்துரைத்து, இவ்வளவாலே த்வயத்திலுள்ள நாராயணபதத்தின் அவயவமான நாரபதத்தின்பொருளை விரித்துரைத்தநுபவித்து, இப்படிப்பட்ட நாரங்களுக்கு அயநமாகவுள்ள ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளைச் சரணம் புகுகின்றேனென்பதாக மேலுள்ள பதங்களை விவரிக்கும் முகமாக அறுபத்துமூன்றும் ச்லோகந் தொடங்கி அழகிய மணவாளனை அநுபவிப்பாராய்ப் பூர்வசதகத்தைத் தலைக்கட்டிப் பூர்வ வாக்யார்த்த விவரணமும் செய்தருளினாராகிறார்.

"தேனே பாலே கன்னலே யமுதே" என்னும்படியாக அமைந்துள்ள இந்த திவ்ய ஸ்தோத்ரத்தை அர்த்தஜ்ஞானமின்றி வெறும் மூலமாத்திரம் உச்சரித்தாலும், உச்சரிப்பவர்களின் நெஞ்சு ஆநந்த முறுவதிலும் எம்பெருமான் திருவுள்ளமுவப்பதிலும் தடையில்லையாயினும், அர்த்தஜ்ஞாநமுமிருந்து அநுஸந்திப்பதில் விலக்ஷணமான ஆநந்தம் விளையுமாதலால் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவரும் இதன் பொருளையும் கருத்தையும் நன்கு அறியுமாறு பதவுரை, கருத்துரை, விசேஷார்த்தங்கள் அமைந்த இவ்வுரை எழுதப்படுகின்றது.

... *

---

ஸ்ரீ:

## ஸ்ரீரங்கராஜஸ்தவத் தனியன்.

[பட்டர் விஷயமாக நஞ்சீயரருளிச் செய்தது.]

श्रीपराशरभट्टार्यः श्रीरङ्गेशपुरोहितः । श्रीवत्साङ्कसुतः श्रीमान् श्रेयसे मेऽस्तु भूयसे ॥

ஸ்ரீபராசர பட்டார்ய: ஸ்ரீரங்கேச புரோஹித:

ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

ஸ்ரீரங்கேச புரோஹித: { நம்பெருமாளுக்குப் புராணம் வாசிக்கும் கைங்கரியமுடையவரும் | ஸ்ரீவத்ஸாங்க ஸுத: { கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரும்

Srivatsam

http://acharya.org

| | |
|---|---|
| ஸ்ரீமாந் | ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மி எப்போதும் பொருந்தப் பெற்றவருமான |
| ஸ்ரீபராசர பட்டார்ய: | ஸ்ரீபராசரபட்டர் |
| மே | — அடியேனுக்கு |
| பூயஸே | — மிகவும் அதிகமான |
| ச்ரேயஸே | — நன்மையின் பொருட்டு |
| அஸ்து | — ஆகுக |

[பட்டர் எனக்கு மிகவும் நன்மையளிக்க வேணுமென்கை ]

• • •—இந்த ஸ்தவமருளிச்செய்த பட்டரைப் போற்றும் தனியனுமிது. முன்பு தசரத சக்ரவர்த்திக்குப் புத்ரகாமேஷ்டியிற் கிடைத்த பாயஸத்தின் கூறுகளே ஸ்ரீராம லக்ஷ்மண பரதசத்ருக்நர்களின் திருவவதாரத்திற்குக் காரணமானதுபோல, ஒருநாள் அழகிய மணவாளன் ஆழ்வானுக்கு அனுப்பியருளின அக்காரவடிசிலில் ஆழ்வானும் அவரது திருத்தேவியாரும் ஏற்றுக்கொண்ட இரண்டு திரளைகளே **ஸ்ரீபராசரபட்டர்**, **ஸ்ரீவேதவ்யாஸபட்டர்** என்ற இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரிப்பதற்கு ஹேது வாயின வென்பது ப்ரஸித்தம்.

ஆசார்யபரதந்த்ரரான ஆழ்வான், எம்பெருமான் திருவருளாலே தமக்குப் பிறந்த இரண்டு பிள்ளைகளுக்கும் நாமகரணம்முதலியன செய்விப்பதற்கு உடையவர் தாம் கடவரென்று எண்ணித் தாம் ஒன்றுஞ் செய்யாதிருக்க, ஸ்ரீபாஷ்யகாரர் அக்குழந்தைகள் பிறந்த பதினோராநாளிலே சிஷ்யவர்க்கத்துடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளித் தமது பிரதானசிஷ்யர்களில் ஒருவரான எம்பாரைநோக்கி 'அக்குழந்தைகளை எடுத்துக்கொண்டுவாரும்' என்ன, அவர் அங்ஙனமே பிரபந்நகுலக் கொழுந்தான அக்குழந்தைகளை எடுத்துக்கொண்டு வந்தவளவிலே, எம்பெருமானார் அக்குழந்தைகட்குத் தம் திருக்கையாற் பஞ்சாயுதத்திருவாபரணம் சாத்தி, நாமகரண சமயத்திலே, பராசரபகவானது திருவவதாரமான மூத்தகுழந்தைக்கு 'பராசரபட்டர்' என்றும் வேதவ்யாஸரது திருவவதாரமான இளையகுழந்தைக்கு 'வேதவ்யாஸபட்டர்' என்றும் திருநாமஞ்சாத்தியருளினர் என்ற இதிஹாஸமும், வேதாந்த சாஸ்த்ரத்துக்கு உபகாரகர்களான வ்யாஸபராசரர்கள் பக்கல் நன்றியறிவு காட்ட வேண்டுமென்று ஆளவந்தார்க்கு இருந்ததொரு நினைவு இதனாற் பூர்த்திசெய்யப்பட்டதென்பதும் உணரத்தக்கன.

இவ்வாசிரியர், பெரிய பட்டரென்றும் பட்டரென்றும் வழங்கப்படுவர். 'பட்ட:' என்னும் வடசொல் வேதசாஸ்த்ரங்களை நன்கு கற்றுணர்ந்த வித்வானையும் ஸ்தோத்ரஞ்செய்யுந் தொழிலுடையவனையும் சொல்லும்; 'பட்டாரக:' என்னுஞ் சொல்லும் இத்திறத்ததே. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னுமாபோலே சிசுவாயிருக்குந் தன்மையிலேயே இவருடைய திறமையை நன்குணர்ந்த எம்பெருமானார் இவர்க்குப் பொருத்தமாக பட்டர் என்று திருநாமஞ் சாத்தினதும், அத்திருநாமத்திற்கு மிகப் பொருத்தமாகவே இவரும் ஸர்வஜ்ஞராய் விளங்கிப் புகழ்பெற்றதும் எம்பெருமானுடைய ஸத்யஸங்கல்பத்வத்தை ஸத்யமாக்கின போலும்.

**[ஸ்ரீரங்கேச புரோஹித:]** ஒருநாள் நடுப்பகலில் உச்சிவெய்யிலிலே எம்பெருமானார் தாமொருவராகத் திருவரங்கத்தமுதனார் க்ருஹத்துக்கெழுந்தருள, அமுதனாரும் 'இதுவென் இப்போது!' என்று விஸ்மயத்துடனே ஸேவித்துக்கேட்க, உடைய

http://acharya.org

வரும் 'உம்முடைய § பௌரோஹித்யத்தாணியை நமக்குத் தரவேணும்' என்ன, மஹா ப்ரஸாதமென்று உகந்து ஹிரண்யோதக தாராபூர்வகமாக ஆழ்வானை உத்தேசித்து ஸமர்ப்பித்தாரென்றும், அன்று தொடங்கி ஆழ்வானைப் பௌரோஹித்யத்துக்குக் கட்டளையிட்டு நித்யம் நம்பெருமாள் ஸந்நிதியிலே புராணம் விண்ணப்பஞ்செய்யுமாறு நியமித்தருளினரென்றும், இக்கைங்கரியம் இவரது திருக்குமாரரான பட்டர் பரம்பரையாக இன்றளவும் ஸந்ததியார்க்கு ப்ராப்தமாயிருக்கிறதென்றும் உணர்க. இது பற்றியே "ஸ்ரீரங்கேச புரோஹித:" என்றது.

[ஸ்ரீவத்ஸாங்க ஸுத:] 'ஸ்ரீவத்ஸாங்க:' என்பது எம்பெருமானது திருநாமம்; திருமறுமார்பனென்றபடி. அதுவே ஆழ்வானுக்குத் திருநாமமாயிற்று; ஆகவே, எம்பெருமானுடைய திருக்குமாரரென்றும் ஆழ்வானுடைய திருக்குமாரரென்றும் இரண்டுபொருள்களும் இதில் அடங்கும். பட்டரை இளங்குழந்தைப் பருவத்திலேயே ஸ்ரீரங்கநாதன் தனது புத்திரனாக அங்கீகரித்துத் தன்னுடைய ஸந்நிதியிலே திருமணத்தூணினருகே தொட்டிலிடுவித்து ஸ்ரீரங்கநாச்சியாரும் தானுமாகச் சீராட்டி வளர்க்க, அங்ஙனம் வளர்கிற அக்குழந்தை தவழ்ந்து சென்று, பெருமாள் அமுது செய்வதற்குத் திருமுன்பே கொணர்ந்து ஸமர்ப்பிக்கப்படுகிற அடிசிலைக் கைகளால் அள்ளியளைந்து துழாவ, பெருமாள் அதுகண்டு உகந்தருளி 1. 'அமிழ்தினுமாற்ற வினிதே தம்மக்கள், சிறுகையளாவிய கூழ்' என்றபடி அந்த இன்னடிசிலை மிகவும் பிரியமாக அங்கீகரித்தருள்வராம். இப்படி ஸ்ரீரங்கநாதன் தம்மை அபிமானித்துப் புத்ரஸ்வீகாரஞ் செய்தருளப்பெற்ற பாக்கியமுடைமையால் பட்டர் 'ஸ்ரீரங்கநாத புத்ரர்' எனப்படுவர்; 2. "வானிட்ட கீர்த்திவளர் கூரத்தாழ்வான் மகிழவந்த, தேனிட்டதார் நம்பெருமான் குமரர்........பட்டர்" என்று இவரது சிஷ்யரான பிள்ளைப்பெருமாளையங்கார் கூறியிருத்தலுங் காண்க. பட்டர்தாமும் இந்தஸ்தவத்திலேயே பதினேழாம் ச்லோகத்தில் "ஸ்ரீரங்கராஜ கமலாபத லாலிதத்வம்" என்றபதத்தினால் இதனை ஸ்பஷ்டமாக்கியருளினதும் உணர்க.

[ஸ்ரீமாந்] செல்வமுடையவர் என்றபடி. இங்குச்செல்வமாவது ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியாம். இலங்கைச்செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்து நின்ற விபீஷணாழ்வானை "அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்" என்றார் வான்மீகி முனிவர்; அப்போது அவ்விபீஷணனிடத்து இருந்த ஸ்ரீயாவது இராமபிரானைப் பணிந்துய்யவேணுமென்று கொண்ட ஆசையாகிற ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். இராமபிரான் பின்னே மண்வெட்டியுங் கூடையுமாய்க் காட்டுக்குப் புறப்பட்ட இளையபெருமாள் "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" எனப்பட்டார்; அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுமென்று கொண்ட பாரிப்பாகிற ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியேயாம். முதலையின் வாயிலே அகப்பட்டுத் துடியாநின்ற கஜேந்திராழ்வான் "ஸது நாகவர: ஸ்ரீமாந்" எனப்பட்டான்; அப்

§ பௌரோஹித்யமாவது—நம்பெருமான் ஸந்நிதியில் புராணம்வாசித்தலாகிற கைங்கரியம். வேதவிண்ணப்பம், திருமஞ்சனக்கட்டியம் சேவித்தல் முதலியனவும் இதில் அடக்கம்.

1 திருக்குறள்—புதல்வரைப் பெறுதல் 4.

2 திருவரங்கக்கலம்பகம்—காப்பு 4.

Srivatsam

http://acharya.org

போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது கையிற்பறித்த பூ செவ்வியழியாமே எம்பெருமான் திருவடிகளில் சாத்தப்பெறவேணுமென்று கொண்ட அபிநிவேசமாகிற ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியால் குறைவற்றவர் பட்டர் என்கிறது.

திரிபுவன வீரதேவராயனென்ற அரசன் பட்டர்வைபவத்தைக் கண்டும் கேட்டும் அவரிடத்து மதிப்புக்கொண்டு ஒருநாள் 'பட்டரே! நீர் நமது அரண்மனைக்கு ஒருகால் வந்துபோம்' என்றுசொல்ல, அதற்குப் பட்டர் சிறிதும் இணங்காமல் "நம்பெருமாள் அஞ்சலென்ற கை மறித்தாலும் அவர் வாசலொழிய வேறொரு போக்கிடமுண்டோ எமக்கு?" என்று சொல்லி மறுத்துவிட்டனர் என்பது ப்ரஸித்தம். சரணமடைந்தவர்கட்கு ஆவனவெல்லாஞ்செய்து அவர்களைப் பாதுகாத்தலையே விரதமாகக்கொண்டு அவர்களுக்குப் பயனளிப்பவனான பரமபுருஷனுக்கு அடிமைப்பட்ட நாம் சில சிற்றரசரின் வாசலிலே கிடந்து துவளக்கடவோமல்லோம் என்கிற அத்யவஸாயத்தைச் சிக்கனக் கொண்டிருந்ததனால் இவ்வுறுதியுடைமைகொண்டே ஸ்ரீமாந் என்கிறது.

இப்படிப்பட்ட ஆசார்யரே நமக்கு வேண்டிய எல்லா நன்மைகளையும் அளிக்கக்கடவரென்று முடிக்கிறது "ச்ரேயஸே மேஸ்து பூயஸே" என்று. *

## தனியன் உரை முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த

# ஸ்ரீரங்கராஜஸ்தவம்.

## பூர்வசதகம்.



श्रीवत्सचिह्नमिश्रेभ्यो नम उक्तिमधीमहे । यदुक्तयस्त्रयीकण्ठे यान्ति मङ्गलसूत्रताम् ॥१॥

ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்யோ நம உக்திமதீமஹே
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்களஸூத்ரதாம். (1)

| | | | |
|---|---|---|---|
| யத் உக்தய: | யாவரொரு ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகளானவை | யாந்தி | – அடைகின்றனவோ |
| த்ரயீகண்டே | வேதமாகிற ஒரு மாதின் கழுத்திலே | (தேப்ய:) ஸ்ரீவத்ஸ சிஹ்ந மிச்ரேப்ய: | (அந்த) பரமபூஜ்யரான ஆழ்வான் பொருட்டு |
| மங்கல ஸூத்ரதாம் | திருமங்கலியமாயிருக்குந் தன்மையை | நம உக்திம் | – நம: என்றசொல்லை |
| | | அதீமஹே | – ஓதுகின்றோம். |

"வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே ஆசார்யர்களை முன்னிட்டே எம்பெருமானைப் பணிதல் சாஸ்த்ரார்த்த

மாகையாலும் ஸ்வரூபாநுரூபமாகையாலும் முதலில் ஐந்தாறு ச்லோகங்களாலே ஆசார்ய வந்தநம் செய்தருளுகிறார்.

பட்டர் திருவவதரித்த பதிமூன்றா நாளிலே ஸ்ரீபாஷ்யகாரர் சிஷ்யவர்க்கத்துடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளித் தமது பிரதாந சிஷ்யர்களில் ஒருவரான எம்பாரைநோக்கி 'குழந்தையை எடுத்துக்கொண்டுவாரும்' என்ன, அவர் அங்ஙனமே எடுத்து வரும்போது த்ருஷ்டி தோஷாதிகள் தாங்காதபடி ரக்ஷையாக த்வயத்தை அநுஸந்தித்து வாழ்த்திக்கொண்டேவந்து குழந்தையை எம்பெருமானாருக்குக் காட்ட, அவர் மிக்க களிப்புடனே ஆநந்தக் கண்ணீர் துளிக்கத் தம் திருக்கண்களால் குளிரக் கடாக்ஷிக்கும்போது குழந்தையின் தேஜோவிசேஷத்தைக்கண்டு வியப்புக்கொண்டு 'எம்பாரே! குழந்தையினிடம் த்வயம் பரிமளிக்கின்றதே, இங்ஙனமாகுமாறு என்செய்தீர்?' என்று வினவ, எம்பார் 'குழந்தைக்குக் காப்பாக த்வயாநுஸந்தாநம் செய்து கொண்டு வந்தேன்' என்று சொல்ல, உடையவர் அப்படி எம்பார் காப்பிட்டதற்கு உகந்து அவரைப் பார்த்து 'இக்குழந்தை உய்யும் வகையை நாடிச் செய்வதற்கு நீர் முற்பட்டீராதலால் இக்குழந்தைக்கு நீரே ஆசார்யராகக் கடவீர்' என்று நியமித்தது காரணமாக பட்டர் எம்பாருடைய சிஷ்யரேயாகிலும், ஆழ்வானுடைய சிஷ்யருமாவர். எங்ஙனே யென்னில்; ஆழ்வான் திருக்குமாரர்கட்குத் திருவாய் மொழிப் பொருள் கற்பித்துவரும்போது "எண்பெருக்கந்நலத்தொண்பொருளீறில, வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே" என்கிற பாசுரத்தளவிலே வந்தவாறே அது திருமந்த்ரார்த்தத்தை விவரிக்கிற பாசுரமாகையாலும் மந்த்ரார்த்தம் ஆசார்யரிடத்திலேயே கேட்டறிய வேண்டியதாதலாலும் அதனை அவர்கட்குச் சொல்லாது நிறுத்தி 'இதனை உங்கள் ஆசாரியர் பக்கலிலே கேட்டுக்கொள்ளுங்கள்' என்று நியமிக்க, அதனை விரைவில் அறிந்து கொள்ளவேணும் என்னும் அவாவினால் உடனே அவர்கள் எழுந்து தம் ஆசார்யரான எம்பார் எழுந்தருளியிருக்குமிடத்தைக் குறித்துப் போகப்புக்கவளவில் ஆழ்வான் "மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள்" என்கிறபடியே யாக்கை நிலையாமையைத் திருவுள்ளத்திற்கொண்டு அவர்களையழைத்து 'இன்னபோது இன்னாரிருப்பார் இன்னார் போவாரென்று தெரியாது, ஆதலால் இருந்துகேளுங்கள்' என்று திருமந்திரத்தைச் சொல்லி அப்பாட்டின் பொருளையும் விவரித்து 'இப்பாசுரத்தைத் திருமந்திரத்தின் அர்த்தமாக நினைத்திருங்கள்' என்று பணித்தருளினமையால் திருக்குமாரர்க்கு ஆழ்வானும் ஒரு ஆசார்யராக அமைந்தருளினரென்று ஸம்பிரதாயம். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யமருளிச்செய்யும்போது ஆசார்யவந்தநம் செய்கிற முதல் ச்லோகத்தில் "வந்தே கோவிந்ததாதௌ—எம்பாரையும் திருத்தமப்பனாரையும் தொழுகின்றேன்" என்றருளிச்செய்ததும் உபய ஸம்பந்தமும் தமக்கு உண்டானது பற்றியேயாம்.

ஜந்மத்தாலும் வித்யையாலும் தமக்குக் குருவானதுபற்றி ஆழ்வானை முந்துற முன்னம் துதிக்கிறார். வேதத்திற்குத் தாலி போன்ற திவ்யஸூக்திகளை அருளிச் செய்த ஆழ்வானையே நாமெப்போதும் வணங்குவோமென்பது இதன் கருத்து.

இவருடைய ஸ்ரீஸூக்திகள் வேதாந்தத்தின் கழுத்தில் தாலி போன்றிருத்தலாவது என்னென்னில்:—உலகத்தில் பெண்களுக்குக் கணவனிருக்கிறானென்பதை நாம் எதைக்கொண்டு தெரிந்து கொள்ளுகிறோம்? பெண்களுக்குத் தாலி யில்லாத நிலைமை

Srivatsam

http://acharya.org

கள் இரண்டு; கன்னிகையா யிருக்கும் நிலைமை ஒன்று; நாலிழந்து விதவையா யிருக்கும் நிலைமை மற்றொன்று. இவற்றுள் கன்னிகைப் பருவத்தில் அப்பெண் பல நாயகர்களை யுடையளாயிருப்பள். ஏனெனில்; அவள் கழுத்தில் ஒரு கைப்பாடாகத் தாலி ஏறுமளவும் பெரும்பாலும் பிரமசாரிகளும் ஆவர்த்தநப்பேர்களும் ஒவ்வொருவரும் அவளைத் தம்மனைவியாகப் பாவித்திருக்கக் கூடும்; 'இப்பெண்ணுக்கு நானே கணவன்' என்று ஒவ்வொருவனும் நினைத்திருக்கக் கூடும். மற்றுள்ள விரக்தர்களும் க்ருஹஸ்தர்களும் அக்கன்னிகையைக்கண்டால் 'இவளுக்கு இன்னம் கணவன் நிச்சயிக்கப்படவில்லை' என்று ஸாதாரணமாக நினைத்துக்கொள்வர்கள். அப் பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிவிட்ட பின்பு, முன்பு தங்களுக்கென்று அபிமாநித்திருந்த பிரமசாரிகள் 'இனி இவள் அநந்யார்ஹை' என்று நிச்சயித்துத் தாங்கள் ஆசையற்றொழிவர். ஸாதாரணமாக நினைத்துக் கொண்டிருந்த மற்ற க்ருஹஸ்தர்களும் விரக்தர்களும் 'இவளுக்கு ஒரு கணவன் அமைந்துவிட்டான்' என்று நினைத்துப் போருவர்கள். இனி இரண்டாவதான வைதவ்ய நிலைமையில் ஸ்த்ரீயைப் பார்க்குமவர்கள் 'இவளுக்கு ஏற்பட்டிருந்த கணவன் இறந்தொழிந்தான், இனி இவளுக்கு எப்போதும் கணவன் ஏற்படப் போகிறதில்லை' என்று நிச்சயித்து விடுவர்கள்.

ஆகவே, மாதர்கள் மங்கலநூல் இல்லாத நிலைமைகளில் பல பர்த்தாக்களை யுடையவர்களாயும் ஒருபர்த்தாவையு முடையராகாதவர்களாயும் இருப்பர்களென்றதாயிற்று: அதுபோல, ஆழ்வான் ஸ்ரீஸூக்திகள் அவதரிப்பதற்குமுன்பு வேதங்கள் மங்கல நூல் இல்லாத மாதரின் இரண்டு வகையான நிலைமைகளையும் உடையனவாயிருந்தன. வேதத்துக்கு ருத்ரனைப் பதியாகச் சிலர் மயங்கி அபிமாநிப்பாகள்; பிரமனைப் பதியாகப் பேதையர் சிலர் பேணுவர்கள். இங்ஙனம் பாசுபதர் முதலிய மதாந்தரஸ்தர்களால் பலபல தெய்வங்கள் பதியாக அபிமானிக்கப்பட்டும் நிரீச்வரமீமாம்ஸகர்களால் 'நாயகனே கிடையாது' என்று மறுக்கப்பட்டுங் கிடந்தது. ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முதலிய திவ்யஸூக்திகள் திருவவதரித்தவுடனே 'தலையறுத்தவனும் தலை யறுப்புண்டவனும் மற்றுமெவரும் வேதத்துக்கு நாயகர் அல்லர்; நாயகனே கிடையாதென்றதும் தப்பு; நாயகனுண்டு; அவன் ஒருவனே; அவனுகிறான் ஸ்ரீமந்நாராயணனே, என்று கல் வெட்டாக நிஷ்கர்ஷம் ஏற்பட்டபடியால் இவருடைய ஸ்ரீஸூக்திகள் வேதமாதுக்கு மங்கல நூல்போன்றன. இதனால் ஸகல துர்மதங்களையும் நிரஸித்துப் பரதத்வநிர்ணயம் பண்ணவல்ல வாக் வைபவத்தையுடையவர் ஆழ்வான் என்றதாகிறது. இன்னும் பலவகையாகவும் இதற்குக் கருத்துரைக்கலாம்.

[ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்ய:.] 'திருமறுமார்பன்' என்பது தமிழ்த்திருநாமம். ஸாக்ஷாத் எம்பெருமானுடைய திருவவதார மென்பர். 'மிச்ர' என்பது பூஜ்யவாசகம். [நம உக்திம்] மாநஸிகமும் காயிகமுமான நமஸ்காரம் இல்லாவிடினும் வாசிகமாத்ரம் உண்டானாலும் போது மெனபது தோனிக்கும். [அதீமஹே.] வாயாற்சொல்லுகின்றோம் என்றபடி.

[த்ரயீகண்டே.] வேதத்தை ஒருகன்னிகையாக ரூபணம்பண்ணுகிறபடி தோற்ற 'த்ரயீ' என்று ஸ்த்ரீலிங்க நிர்த்தேசம் பண்ணிற்று. கண்டே—வேதத்தினுடைய மேல்பாகமாகிய வேதாந்தத்திலே என்னலாம்.

(1)

Srivatsam
http://acharya.org

रामानुजपदच्छाया गोविन्दाह्वाऽनपायिनी । तदायत्तस्वरूपा सा जीयान्मद्विश्रमस्थली ॥२॥

ராமாநுஜ பதச்சாயா கோவிந்தாஹ்வாநபாயிநீ,
ததாயத்த ஸ்வரூபா ஸா ஜீயாந் மத்விச்ரமஸ்தலீ. 2

| | | | |
|---|---|---|---|
| அநபாயிநீ | ஒருபோதும் விட்டு நீங்குத லில்லாத | கோவிந்த ஆஹ்வா | 'கோவிந்தபட்டர்' என்ற திருநாம முடைத்தாயு மிருக்கிற |
| ராமாநுஜ பதச் சாயா | எம்பெருமானாருடைய திரு வடி நிழலாயும் | ஸா | — அப்படிப்பட்ட |
| தத் ஆயத்த ஸ்வ ரூபா | அத்திருவடிகளுக்கு வசப்பட்ட ஸ்வரூபத்தை யுடைத்தாயும் | மத் விச்ரமஸ்தலீ | (தாபத்ரயதப்தனான) எனக்கு இளைப்பாறுமிடமான எம்பார் |
| | | ஜீயாத் | — பொலிக பொலிக. |

* * *:—நேரே ஸ்வாசார்யரான கோவிந்தபட்டரென்னும் எம்பாரைத் துதிக்கிறார். 'எம்பெருமானார்' என்னுந்திருநாமத்தின் சிதைவாக 'எம்பார்' என்று திருநாமம் சாத்தப்பட்டிருந்தாலும் இத்திருநாமச்சொல்லை 'எம், பார்' என்று பிரித்துப் பொருள் கொண்ட அழகு காண்மின். எம்—எம்முடைய, பார்—இடம் என்பது பொருள். நாம் தங்குமிடம் என்றபடி. நிழலானது வ்யக்தியை விட்டு நீங்காதிருப்பதுபோலே அவர் இராமாநுசன் தன்னிணையடியை விட்டு நீங்காதிருந்தமைபற்றி 'ராமாநுஜபதச்சாயா' என்னப்பெற்றிருந்தார். தாபாதுரர்களுக்கு நிழல் இளைப்பாறுமிடமாயிருப்பது போல ஸம்ஸார தாபதப்தரான தமக்கு இவ்வாசிரியர் இளைப்பாறு மிடமாக அமைந்ததனால் 'எம், பார்' என்று பிரித்துத் தாம்கொண்ட பொருள் நன்கு பொருந்திற்று.

"சுழலக் குடங்கள் தலைமீதெடுத்துக்கொண்டாடி அன்றத்தடங்கடலை மேயார் தமக்கு—நிழலும் அடிதாறுமானோம்" என்று (பெரிய திருவந்தாதியில்) எம்பெருமான் விஷயத்தில் ஆழ்வார் அநுஸந்தித்த நிலைமையை கோவிந்தபட்டர் எம்பெருமானார் திறத்திலே அநுஷ்டான பர்யந்தமாக்கிப் போந்ததனால் 'ராமாநுஜ பதச்சாயா' என்ற குணநாமம் அவர்க்கு அஸாதாரணமாக விளங்கிற்று. (2)

रामानुजमुनिर्जीयाद्यो हरेर्भक्तियन्त्रतः । कलिकोलाहलक्रीडामुधाग्रहमपाहरत् ॥३॥

ராமாநுஜமுநிர் ஜீயாத் யோ ஹரேர் பக்தியந்த்ரத:,
கலிகோலாஹல க்ரீடா முதாக்ரஹமபாஹரத். ... 3

| | | | |
|---|---|---|---|
| ய: | — யாவரொரு எம்பெருமானார் | கலி கோலா ஹல க்ரீடா முதாக்ரஹம் | கலிபுருஷனுடைய கோலாஹல விளையாட்டிலுண்டாகும் பிசாசை |
| ஹரே: பக்தி யந்த்ரத: | எம்பெருமானிடத்து உண்டான பக்தியாகிற யந்த்ரத்தினால் | அபாஹரத் | ஓட்டினாரோ, |
| | | (ஸ:) ராமாநுஜ முநி: ஜீயாத் | அந்த எம்பெருமானார் பல்லாண்டு பல்லாண்டு. |

* * *:—இதனால் ஜகதாசார்யரான எம்பெருமானாரை வாழ்த்துகிறார். "கலியும் கெடுங் கண்டுகொண்மின்" என்று மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார் ஸூசிப்பித்தபடியே இவ்வுலகில் திருவவதரித்துக் கலியின் கொடுமைகளைத் தொலைத்தருளின எம்பெருமானார் வாழ்க என்கை. "இராமாநுசன் மறை தேர்ந்துலகில் புரியும் நன்

Srivatsan

http://acharya.org

ஞானம் பொருந்தாதவரைப் பொருங்கலியே" என்கிறபடியே இராமாநுசன் திருவடி ஸம்பந்திகளைக் கலிபுருஷன் அணுகவும் மாட்டானென்பது அறியத்தக்கது. "இராமாநுசனித்தலத்துதித்து — ஆனது செம்மையறநெறி, பொய்ம்மையறுசமயம் போனது பொன்றி, இறந்ததுவெங்கலி" என்ற நூற்றந்தாதிப் பாசுரமுமிங்கே அநுஸந்திப்பது. கலியின் கோலாஹலம் நிரம்பிய விளையாட்டைப் பேயாடலாகப் பேசினதற்கேற்ப ராமாநுசனுடைய பகவத் பக்தியை ஒரு யந்த்ரமாக ரூபிக்கிறார். பிசாசு ஓட்டுதல் யந்த்ரஸாத்யமாகையாலே பகவத்பக்தியாகிற யந்த்ரத்தினால் கலிவிலாஸமாகிற பிசாசை ஓட்டினாரென்கிறது. "கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ் தஸ்ய க்ருதே யுகே—யஸ்ய ஹ்ருதயே யஸ்ய கோவிந்தோ யஸ்ய சேதஸி நாச்யுத:" என்றது காண்க. (எவனுடைய உள்ளத்தில் எம்பெருமான் ஸுப்ரதிஷ்டிதனாக வாழ்கிறானோ அவனுக்குக் கலியுகமே க்ருதயுகம்; எவனுடைய நெஞ்சில் எம்பெருமானில்லையோ அவனுக்குக் கிருதயுகமும் கலியுகமாம் என்கை.)

இரண்டாம் பாதத்தின் முடிவில், "யந்த்ரத:, யந்த்ரித:, யந்த்ரிதாத்" என்பன பாடபேதங்கள். ... (3)

विधाय वैदिकं मार्गमकौतस्कुतकण्टकम् । नेतारं भगवद्भक्तेर्यामुनं मनवामहे ॥४॥

விதாய வைதிகம் மார்க்கம் அகௌதஸ்குதகண்டகம்,
நேதாரம் பகவத்பக்தேர் யாமுநம் மநவாமஹை. 4

| | | | |
|---|---|---|---|
| வைதிகம் மார்க்கம் | —வைதிக நெறியை | பகவத்பக்தே: | — பகவத்பக்தியை |
| அகௌதஸ்குத கண்டகம் | துர்வாதிகளாகிற முள் அற்றதாக | நேதாரம் | —தலைத்தோங்கச் செய்தவரான |
| விதாய | — செய்தருளி | யாமுநம் | — ஆளவந்தாரை |
| | | மநவாமஹை | — தியானிக்கக்கடவோம். |

* * *:—இதனால் ஆளவந்தாரைத் துதிக்கிறார். ஆளவந்தார் திருவவதரிப்பதற்குமுன் வைதிகமார்க்கம் துர்வாதிகளால் மிகவுங் கெடுக்கப்பட்டு முள் மூடிக்கிடந்து பகவத்பக்தி தலையெடுக்கமாட்டாமலிருந்தது; இவர் திருவவதரித்து ஸித்தித்ரயம், ஆகமப்ராமாண்யம், ஸ்தோத்ர ரத்நம் முதலிய திவ்ய க்ரந்தங்களினால் வைதிகமார்க்க வித்வேஷிகளான அந்த துர்வாதிகளையெல்லாம் தொலைத்து பகவத்பக்தி ஓங்கும்படி செய்தருளினரென்கிறது.

கௌதஸ்குத—'குத:? குத:?—அது ஏன்? இது ஏன்?' என்று துராக்ஷேபங்கள் செய்துகொண்டிருக்கும் துர்வாதிகள் 'கௌதஸ்குதர்' எனப்படுவர். ஒருவழியில் முள் மிடைந்து கிடந்தால் அதில் யாரும் ஸஞ்சரிக்கவொண்ணாதது போல, இந்த துர்வாதிகளின் க்ஷேபத்தினால் வைதிகமார்க்கம் ஸாதுக்கள் பரிபாலிக்க முடியாதபடியிருந்ததனால், இவர்கள் முள்ளாக ரூபிக்கப்பட்டனர். ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரான யமுனைத் துறைவரைச் சிந்திக்கக்கடவோம் என்றதாயிற்று. ... (4)

नौमि नाथमुनिं नाम जीमूतं भक्त्यवग्रहे । वैराग्यभगवत्तत्त्वज्ञानभक्त्यभिवर्षुकम् ॥५॥

நௌமி நாதமுநிம் நாம ஜீமூதம் பக்த்யவக்ரஹே,
வைராக்ய பகவத் தத்வஜ்ஞாநபக்த்யபிவர்ஷுகம். ... 5

Srivatsam

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| பக்தி அவஸந்நே | பக்தியானது தீர்த்தம் அருமைப் பட்டிருந்த தார்ப்பிக்ஷகாலத்தில் | நாதமுநிம் நாம | ஸ்ரீமந்நாதமுனிகளென்று ப்ரஸித்தமான |
| வைராக்ய பகவத்தத்வ ஜ்ஞாந பக்தி அபிவர்ஷகம் | விரக்தியென்ன, எம்பெருமானைப் பற்றின ஜ்ஞாந பக்திகளென்ன ஆகிய இவற்றை எங்கும் வர்ஷிக்கவல்ல | ஜீமூதம் | — மேகத்தை |
| | | நௌமி | — துதிக்கின்றேன். |

...:—ஆழ்வார்களுடைய காலத்துக்குப் பிறகு ஸ்ரீமந்நாதமுனிகளின் காலத்துக்கு இடையில் ஜ்ஞானபக்தி விரக்திகள் மிகவும் அருமைப்பட்டுக் கிடந்தன; அப்படிப்பட்ட நிலைமையில் ஸ்ரீமந்நாதமுனிகள் திருவவதரித்து க்ரந்தமுகமாகவும் உபதேசமுகமாகவும் ஜ்ஞானபக்திவிரக்திகள் உலகமெங்கும் தழைத்தோங்குமாறு செய்தருளினார்; அன்னவரைத் துதிக்கிறேனென்கிறது இதனால். ... ... (5)

ऋषिं जुषामहे कृष्णतृष्णातत्त्वमिवोदितम् । सहस्रशाखां योऽद्राक्षीद्द्राविडीं ब्रह्मसंहिताम् ॥६॥

ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம்,
ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம். ... 6

| | | | |
|---|---|---|---|
| ய: | — யாவரொரு ஆழ்வார் | (தம்) | — அப்படிப்பட்டவராய் |
| ஸஹஸ்ர சாகாம் | ஆயிரம் பாசுரங்களையுடையதாய் | உதிதம் | — உருவெடுத்துவந்த |
| த்ராவிடீம் | — தமிழாலாகிய | க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வம் இவ (ஸ்திதம்) | எம்பெருமான்திறத்துக் காதலின் உண்மை போன்றவரான |
| ப்ரஹ்ம ஸம்ஹிதாம் | (திருவாய்மொழியாகிற) உபநிஷத்தை | ரிஷிம் | — நம்மாழ்வாரை |
| அத்ராக்ஷீத் | — ஸாக்ஷாத்கரித்தாரோ; | ஜுஷாமஹே | — ஸேவிக்கிறோம். |

...:—ப்ரபந்நஜநகூடஸ்தரான நம்மாழ்வாரைத் துதிப்பது இது. 'எம்பெருமான் விஷயமான ஆசைப்பெருக்கே ஆழ்வாராக வடிவெடுத்து வந்ததோ' என்னலாம்படி பகவத் விஷயத்தில் அளவிறந்த காதல்கொண்டவரும், 'த்ரமிடோபநிஷத்' என்னப்பட்ட திருவாய்மொழியை இந்நிலவுலகிலிருள் நீங்க வெளியிட்டருளினவருமான நம்மாழ்வாரைப் பணிவோம் என்பதாம்.

வடமொழியிலாகிய உபநிஷத்துக்களில், அநேக சாகாபேதங்கள் இருப்பது போல த்ரமிடோபநிஷத்திலும் அநேக சாகாபேதங்களுண்டென்று காட்டவேண்டி 'ஸஹஸ்ரசாகாம்' என்றார். திருவாய்மொழியின் ஒவ்வொரு பாசுரத்தையும் ஒவ்வொரு சாகையாகத் திருவுள்ளம் பற்றினரென்க. 'அத்ராக்ஷீத்' என்றதனால், எம்பெருமான் சிலசில ரிஷிகளைக்கொண்டு சிலசில வேதசாகைகளை ப்ரவர்த்திப்பித்தது போல ஸ்ரீசடகோப முனிவரைக்கொண்டு திருவாய்மொழியை ப்ரவர்த்திப்பித்தானென்பது விளங்கும்.

இந்த ச்லோகம் ஆழ்வாரிடத்திலும் திருவாய்மொழியினிடத்திலும் பட்டர்க்கு அமைந்துள்ள அதிப்ரமாணமான பக்திவைலக்ஷண்யத்தை அழகிதாகப் புலப்படுத்தும். இங்கு விவரித்துரைக்கவேண்டியவையெல்லாம் ஆசார்யஹ்ருதயஸாரத்திலே பண்ணியுரைத்தோம். அங்கே கண்டுகொள்வது.

(6)

http://acharya.org

नमः श्रीरङ्गनायक्यै यद्भ्रूविभ्रमभेदतः । ईशेशितव्यवैषम्यनिम्नोन्नतमिदं जगत् ॥७॥

நம: ஸ்ரீரங்கநாயக்யை யத்ப்ரூவிப்ரமபேதத:,
ஈசேசிதவ்ய வைஷம்ய நிம்நோந்நத மிதம் ஜகத். 7

| | |
|---|---|
| இதம் ஜகத் | — இவ்வுலகமானது |
| யத் ப்ரூவிப்ரம பேதத: | எந்தப் பிராட்டியினது புருவ நெறிப்பின் வாசியினாலே |
| ஈச ஈசிதவ்ய வைஷம்ய நிம்ந உந்நதம் | மேற்பட்டவர்கள், கீழ்ப்பட்டவர்கள் என்னும்படியான பேதங்களினால் மேடுபள்ளமா யிருக்கின்றதோ, |
| (தஸ்யை) | — அந்த |
| ஸ்ரீரங்கநாயக்யை | — ஸ்ரீரங்கநாச்சியாருக்கு |
| நம: | — நமஸ்காரம். |

* * *—ஸ்ரீரங்கநாச்சியாரை வணங்குகிறார் இதனில். இவ்வுலகமானது செல்வம் மிக்க மஹான்களாலும் ஏழைமை பூண்ட எளியவர்களாலும் மேடுபள்ளமா யிராநின்றது; இப்படி விஷம நிலைமையாயிருப்பதற்குக்காரணம் பெரிய பிராட்டியாரின் புருவ நெறிப்பின் வாசியேயாம். அவளுடைய அநுக்ரஹத்துக்குப் பாத்ரமானவிடம் மேடாகவும், அவளுடைய நிக்ரஹத்துக்குப் பாத்ரமானவிடம் பள்ளமாகவு மிராநிற்கும். ஆக விப்படி தன்னுடைய நிக்ரஹாநுக்ரஹங்களாலே சிலரைக் கீழ்ப்பட்டவர்களாகவும் சிலரை மேம்பட்டவர்களாகவும் வ்குக்கின்ற பிராட்டியை வணங்குவோமென்றாராயிற்று. இங்கு உரைக்க வேண்டிய பூர்வபக்ஷ ஸமாதானங்கள் அந்யத்ர. (7)

श्रीस्तनाभरणं तेजः श्रीरङ्गेशयमाश्रये । चिन्तामणिमिवोद्वान्तमुत्सङ्गेऽनन्तभोगिनः ॥८॥

ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ: ஸ்ரீரங்கேசய மாச்ரயே,
சிந்தாமணி மிவோத்வாந்தம் உத்ஸங்கே நந்தபோகிந:. 8

| | |
|---|---|
| ஸ்ரீஸ்தந ஆபரணம் | பிராட்டியின் திருமுலைத்தடத்திற்கு அலங்காரமானதும் |
| அநந்த போகிந: | — ஆதிசேஷனுடைய |
| உத்ஸங்கே | — மடியிலே |
| உத்வாந்தம் | — கக்கப்பட்ட |
| சிந்தாமணிம் இவ | — சிந்தாமணிபோன்றதும் |
| ஸ்ரீரங்கேசயம் | திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருப்பதுமான |
| தேஜ: | (பெரிய பெருமாளென்னும்) ஒரு தேஜஸ்ஸை |
| ஆச்ரயே | — அடைகிறேன். |

* * *—குருபரம்பரைக்குத் தலைவரான பெரிய பெருமாளைப் போற்றுமிந்த ச்லோகம் முதலாக மேலுள்ளதெல்லாம் ஸ்ரீரங்கநாதனுடைய ஸ்தவமாய்ச் செல்லுகிறது. "தேஜஸாம்ராசி மூர்ஜிதம்" என்றும் "குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள்ளத்தினுள்ளே • எழுவதோருரு" என்றுஞ் சொல்லுகிறபடியே தேஜ: புஞ்ஜந்தானே ஒரு வடிவெடுத்ததென்னலாம்படியுள்ள பெருமான் திருவனந்தாழ்வானுடைய மடியிலே திகழ்வதைக்கண்டால், 'அந்தத் திருவனந்தாழ்வான் கக்கி வெளியிட்ட மணிதானோஇது' என்னலாம்படி யிருக்கிறதென்கிறார். மணியாகில் மங்கைமார் கொங்கைக்கு ஆபரணமாயிருக்குமே; இந்த மணிதானும் பெரிய பிராட்டியாருடைய திருமுலைத்தடத்திலே அழுத்தின மணியாயிருக்கும். "அணியார் பொழில்சூழரங்கநகரப்பா! —மணியே மணிமாணிக்கமே மதுசூதா" என்கிற மணியைப் பணிகின்றேனென்றாராயிற்று. ஸ்ரீரங்கேசயம்—ஸ்ரீரங்கநாதனைகிற; தேஜ:—தேஜஸ்ஸை என்று முரைக்கலாம்.

http://acharya.org

மூன்றாவது பாதத்தில் [உத்பாந்தம்] என்று சிலர் பாடமோதுவர்; உத்பாந்தம்—
பிரகாசிக்கிற, என்று பொருள். இப்பாடம் நம் ஆசார்யர்கள் உகந்ததன்று, ஸரஸமு
மன்று. அமலனாதிபிரானுக்கு வியாக்யான மருளிச்செய்த அழகியமணவாளப்பெரு
மாள் நாயனார் 'ஆலமாமரத்தினிலைமேல்' என்னும் பாசுரத்தில் "அரவினணையான்"
என்றவிடத்து—"படுக்கையான. இவன்தான் *சிந்தாமணிமிவோத்வாந்தம்* என்கிற
படியே ஜகதுபாதானமாயிருப்பதொரு சிந்தாமணியை உமிழ்ந்து இத்தை யாரேனு
மொருவர் இருஞ்சிக்கொள்ளில் செய்வதென் என்று தன்மடியிலே வைத்துக் காண்டக
மிட்டுக்கொண்டு கிடக்கிறபோலேயிருக்க" என்றருளிச்செய்திருக்கையாலே "உத்
வாந்தம்" என்னும்பாடமே உள்ளது. 'உமிழப்பட்ட' என்று பொருள்.

"உத்வாந்தம் மணிம்" என்னுமளவே போதுமாயிருக்க **'சிந்தாமணிம்'** என்றது எம்பெருமானுடைய ஔதார்ய விசேஷத்தையும் கூடவே விளக்குவதற்காகவாம். சிந்தித்த பொருள்களை யெல்லாம் கொடுக்கும் மணி சிந்தாமணியெனப்படும். ... (8)

अस्ति वस्त्विदमित्थन्त्वप्रसंख्यानपराङ्मुखम् । श्रीमत्यायतने लक्ष्मीपदलाक्षैकलक्षणम् ॥९॥

அஸ்தி வஸ்த்விதமித்தந்த்வ ப்ரஸங்க்யாந பராங்முகம்,
ஸ்ரீமத்யாயதநே லக்ஷ்மீபதலாக்ஷைகலக்ஷணம். ... 9

| | | | |
|---|---|---|---|
| இதந்த்வ இத்தந்த்வப்ரஸங்க்யாந பராங்முகம் | இன்னதென்றும் இத்தன்மையதென்றும் அறுதியிடக்கூடாததாய் | வஸ்து | — பரம்பொருளானது |
| லக்ஷ்மீபதலாக்ஷா ஏக லக்ஷணம் | பிராட்டியின் திருவடியிலிட்ட செம்பஞ்சுச் சாறுதன்னையே அடையாளமாகவுடையதான | ஸ்ரீமதி ஆயதநே | திருவரங்கம் பெரிய கோயிலிலே |
| | | அஸ்தி | — உள்ளது. |

***—யாதொரு பரதத்வத்தினுடைய ஸ்வரூப ஸ்வபாவங்கள் ஒருவராலும் அறியமுடியாததோ, *வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி* என்றுப்போலே ஸம்போகவிலாஸ காலங்களில் பிராட்டியின் திருவடிகளில் அலங்காரமாகச் சாத்தப்பட்டிருந்த செம்பஞ்சுச் சாறானது யாதொரு பரதத்வத்தின் திருமேனியிலே சுவடுபட்டிருக்கின்றதோ. அந்தப்பரதத்வம் (ஸ்ரீரங்கநாதரூபேண) கோயிலில் நித்யஸந்நிதி பண்ணியிராநின்றதென்கிறார்.

இதில் அழகிய மணவாளனை 'வஸ்து' என்கிற ஸாமாந்ய சப்தத்தினால் குறித்தது ஒருவகைக் கவிஸம்ப்ரதாயம். விசேஷணங்களே விசேஷ்யத்தை அறுதியிடக் கடவன. (9)

लक्ष्मीकल्पलतोत्तुङ्गस्तनस्तबकचञ्चलः । श्रीरङ्गराजभृङ्गो मे रमतां मानसाम्बुजे ॥१०॥

லக்ஷ்மீ கல்பலதோத்துங்க ஸ்தந ஸ்தபக சஞ்சல:,
ஸ்ரீரங்கராஜப்ருங்கோ மே ரமதாம் மாநஸாம்புஜே. ... 10

| | | | |
|---|---|---|---|
| லக்ஷ்மீ கல்பலதா உத்துங்க ஸ்தந ஸ்தபக சஞ்சல: | பிராட்டியாகிற கற்பகக் கொடியினுன்னதமான திருமுலைத்தடமாகிற பூங்கொத்தில் சுழன்றிடாநின்ற | ஸ்ரீரங்கராஜ ப்ருங்க: | ஸ்ரீரங்கநாதனாகிற வண்டு |
| | | மே | — அடியேனுடைய, |
| | | மாநஸ அம்புஜே | — நெஞ்சாகிற தாமரைப்பூவில் |
| | | ரமதாம் | — உவந்து வாழ்ந்திடுக. |

Srivatsam

http://acharya.org

...—ஸ்ரீரங்கநாதனை ஒருவண்டாக ரூபிக்கிறார். வண்டானது கொடிகளில் பூங்கொத்துக்களில் சுழலாநிற்கும்; இந்த ரங்கராஜனாகிற வண்டோவென்னில், பிராட்டி என்கிற ஒரு கல்பவல்லியிலுள்ள ஸ்தநமாகிற பூங்கொத்திலே "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா" என்னுமாபோலே காமுகமாயிருக்கும். இப்படிப்பட்ட வண்டானது அடியேனுடைய ஹ்ருதயபுண்டரீகத்திலே விரும்பி வாழுந்திடுக வென்கை. உலகில் வண்டானது பூங்கொத்துக்களைக் கண்டால் அவற்றைச் சுற்றிச் சுழலாநிற்கும்; தாமரை மலரைக்கண்டால் உள்புகுந்து படிந்து ரமியாநிற்கும்; இது தோன்ற இங்கு "ஸ்தபக சஞ்சல:" என்றும் "அம்புஜே ரமதாம்" என்றும் சொல்லிற்று. ... ... (10)

स्वस्ति श्रीस्तनकस्तूरीमकरीमुद्रितोरसः। श्रीरङ्गराजाच्छरदश्शतमाशास्महेतमाम् ॥११॥

ஸ்வஸ்தி ஸ்ரீஸ்தந கஸ்தூரீ மகரீ முத்ரிதோரஸ:,
ஸ்ரீரங்கராஜாத் சரதச் சத மாசாஸ்மஹே தமாம். 11

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீஸ்தந கஸ்தூரீ மகரீ முத்ரித உரஸ: | பிராட்டியின் திருமுலைத்தடத்தில் கஸ்தூரியினால் இயற்றப்பட்ட மகரிகாபத்ரங்களினால் முத்திரை செய்யப்பட்ட திருமார்பை யுடைய | ஸ்ரீரங்க ராஜாத் | — ஸ்ரீரங்கநாதனிடத்தில் நின்று |
| | | ஸ்வஸ்தி | — நன்மையை |
| | | சதம் சரத: | — நீடூழிகாலம் |
| | | ஆசாஸ்மஹே தமாம் | மிகவும் விரும்புகின்றோம். |

...—எம்பெருமான் பிராட்டியை அழுந்த அணைக்கும்போது அவளுடைய திருமுலைத்தடத்திலுள்ள கஸ்தூரி மகரிகாபத்ரங்கள் இவனது திருமார்விலே ஊன்றி இலச்சினைபட்டுக் கிடக்குமிறே. அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாதன் நீடூழிகாலம் நமக்கு மங்களங்களை அளித்தருளவேண்டுகின்றோமென்கை. பிராட்டியின் நித்ய ஸம்ச்லேஷத்தாலே இந்த மநோரதம் பலிக்கத் தட்டில்லையென்று தம்மில்தாம் தேறியிருக்கின்றமையைக்காட்டும் விசேஷணம்.

கஸ்தூரீமகரியாவது—கஸ்தூரியைக்குழைத்துச் சுறுமீன்வடிவமாகக் கொங்கையில் எழுதும் அலங்கார விசேஷம். சதம் சரத:—பலவருஷங்கள் இடையறாமல் என்கை. "காலாத்வநோரத்யந்தஸம்யோகே த்விதியா" என்பது வியாகரணம். (11)

पातु प्रणतरक्षायां विलम्बमसहन्निव। सदा पञ्चायुधीं बिभ्रत्स नः श्रीरङ्गनायकः ॥१२॥

பாது ப்ரணதரக்ஷாயாம் விலம்பமஸஹந்நிவ,
ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ ந: ஸ்ரீரங்கநாயக:. 12

| | | | |
|---|---|---|---|
| ப்ரணதரக்ஷாயாம் | — ஆச்ரிதரைக் காப்பாற்றுவதில் | பஞ்சாயுதீம் | — பஞ்சாயுதங்களை |
| விலம்பம் | — காலதாமதத்தை | பிப்ரத் | — ஏந்திக்கொண்டிருக்கிற |
| அஸஹந் இவ | — ஸஹிக்கமாட்டாதவர்போல் | ஸ: ஸ்ரீரங்கநாயக: | — அந்த ஸ்ரீரங்கநாதர் |
| ஸதா | — எப்போதும் | ந: பாது | — நம்மைக் காத்தருள்க. |

...—ஸ்ரீரங்கநாதர் அழகுக்குடலாகப் பஞ்சாயுதங்களை அநவரதம் அணிந்துகொண்டிருக்கிறார்; அதற்கு ஒரு ஹேதுவை உத்ப்ரேக்ஷிக்கிறாரிதில். திடீரென்று ஆச்ரிதர்களைக் காத்தருளவேண்டிய ஆபத்காலம் நேர்ந்துவிட்டால் அப்போது

Srivatsam

http://acharya.org

இவ்வாயுதங்களைத் தேடநேர்ந்தால் ஆச்ரிதரக்ஷணத்தில் சிறிது காலவிளம்பமேற்பட்டுவிடுமேயென்று அஞ்சி, ஆபத்துவந்தவப்போதே சடக்கென ரக்ஷிப்பதற்காகத் இவ்வாயுதங்களை ஒருநொடிப்பொழுதும் கைவிடாது அணிந்துகொண்டிருக்கிறார் போலு மென்கிறார். "எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்" என்ற பெரியதிருவந்தாதிப் பாசுரத்தை இங்கு அநுஸந்திப்பது.

பஞ்சாயுதங்களாவன — திருவாழி, திருச்சங்கு, கதை, சார்ங்கம், உடைவாள். (12)

**अमतं मतं मतमथामतं स्तुतं परिनिन्दितं भवति निन्दितं स्तुतम् ।**
**इति रङ्गराजमुदजूघुषत्त्रयी स्तुमहे वयं किमिति तन्न शक्नुमः ॥१३॥**

அமதம் மதம் மதமதாமதம் ஸ்துதம் பரிநிந்திதம் பவதி நிந்திதம் ஸ்துதம்,
இதி ரங்கராஜமுதஜூகுஷத் த்ரயீ ஸ்துமஹே வயம் கிமிதி தம் ந சக்நும: 13

| | |
|---|---|
| அமதம் | "பரப்ரஹ்மமானது அறியமுடியாதது என்று எண்ணப்பட்டால் |
| மதம் பவதி | (அப்போது அது) அறியப்பட்டதாகிறது; |
| அத | — பின்னையும், |
| மதம் | பரப்ரஹ்மமானது அறியக்கூடியது என்று கருதப்பட்டால் |
| அமதம் பவதி | — அறியப்படாததாகிறது; |
| ஸ்துதம் | பரப்ரஹ்மமானது துதிக்கமுடிக்கத்தக்கதென்று கருதப்பட்டால் |
| பரிநிந்திதம் பவதி | அது இகழப்பட்டதாக ஆகிறது; |

| | |
|---|---|
| நிந்திதம் | உள்ளபடி ஸ்துதிக்க முடியாததென்று கருதப்பட்டால் |
| ஸ்துதம் பவதி | — துதிக்கப்பட்டதாக ஆகிறது; |
| இதி | — என்று இவ்விதமாக |
| த்ரயீ | — வேதமானது |
| உதஜூகுஷத் | (எம்பெருமான் திறத்தில்) முறையிட்டுக் கூறுகிறது; (இப்படியிருக்க) |
| தம் ரங்கராஜம் | — அந்த ஸ்ரீரங்கநாதனை |
| வயம் | — அறிவிலிகளான நாம் |
| கிம் இதி | — என்னவென்று |
| ஸ்துமஹே | — துதிக்க இழிகிறோம்; |
| ந சக்நும: | — துதிக்கவல்லோமல்லோம். |

• • •— இதுமுதல் ஏழுச்லோகங்களாலே— தமக்கு இந்த ஸ்தோத்ரம் இயற்றுவதில் அதிகாரமில்லையென்று சங்கித்து அதிகாரமுண்டென்று தலைக்கட்டுகிறார்.

நான் ஸ்ரீரங்கநாதனைத் துதிப்பதாக இழிகின்றேனே, இது எங்ஙனே கூடும்? ஒருவனைத் துதிப்பதென்றால் அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை நன்குணர்ந்து துதிக்கவேணும். எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களோ ஆர்க்கும் அறியக்கூடியவையல்ல. *யஸ்யா மதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:* என்று ஓதப்பட்டுள்ளது. அதாவது:— எம்பெருமானைத் தெரிந்துகொண்டோமென்று எவன் நினைக்கிறானோ அவன் தெரிந்துகொள்ளாதவனே; எவன் 'நாம் தெரிந்துகொண்டிலோம்' என்று நினைக்கிறானோ அவனே தெரிந்து கொண்டவனாவன் என்கை. இதனால்— எம்பெருமான் ஒருவராலும் பரிச்சேதித்து அறியவொண்ணாதபடி எல்லை கடந்த வைபவம் வாய்ந்தவன் என்பதும், இப்படி அவனை அறிவதே அறிந்தவாறாம் என்பதும் சொல்லிற்றாம். இந்த வேதவாக்யத்தையே இங்கு "அமதம் மதம் மதமதாமதம்" என்றுமளவால் குறிப்பிட்டார்.

இனி "ஸ்துதம் பரிகிருதம் பவதி கிந்துதம ஸ்துதம்" என்பதற்றிய வேத வாக்ய முன்னிதோ வென்னில்; இங்ஙனே தமிழ்வேதத்திலுள்ளதைத் திருவுள்ளம் பற்றி யருளிச்செய்கிறார். பெரியதிருவந்தாதியில் (இரண்டாம்பாட்டு) "புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்" என்றது இங்கு விவக்ஷிதம். அதாவது—திருமாலே! தேவரீரை நான் புகழ்கிறதனில் பழித்தவனாவேன் (என்னுடையபுகழ்ச்சி உமக்குப் பழிப்பேயாம்); நான் தேவரீரைப் புகழாதிருக்கிறபக்ஷத்தில் பழித்தவனாக ஆக மாட்டேன்—எனப்பட்டது. திருவாய்மொழியிலும் (3—1—7) "ஒட்டுரைத்திவ்வுல குன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ" என்றார்; அப்பாசுரமும் இங்கு விவக்ஷிதமாகலாம். "மாசூணா வான் கோலத்தமரர்கோன் வழிப்பட்டால், மாசூணாவுன பாதமலர்ச்சோதி மழுங்காதே" (திருவாய்மொழி, 3—1—8) என்றபாசுரமும் காண்க. ஆகவிப்படி ஸம்ஸ்க்ருத, த்ராவிட உபயவேதத்திலும் சொல்லியிருப்பதைத் திருவுள்ளம்பற்றி "இதி த்ரயீ உத ஜகுஷத்" என்கிறார். இவர்தாமே அடுத்தபடியாக "ஸ்வம் ஸம்ஸ்க்ருதத்ராவிட வேதஸூக்தைர் பாந்தம்" என்றருளிச்செய்கிறாராகையாலே இங்கு 'த்ரயீ' என்றது தந்த்ரேண உபயவேதவாசகமாகக் குறையில்லை.

இப்படி அறிய முடியாதவனென்றும், ஸ்துதிக்கமுடியாதவனென்றும் வேதங்களில் விளம்பப்பட்ட பெருமானை நான் எப்படி ஸ்துதிக்கவல்லேன்? ஸ்துதிக்க மாட்டேன் என்றாராயிற்று. 'வயம்' என்ற பஹுவசனம் கவிமரபு. (13)

Srivatsam

यदि मे सहस्रवदनादिवैभवं निजमर्पयेत्स किल रङ्गचन्द्रमाः ।
अथ शेषवन्मम च तद्वदेव वा स्तुतिशक्त्यभावविभवेऽपि भागिता ॥१४॥

**யதி மே ஸஹஸ்ரவதநாதிவைபவம் நிஜமர்ப்பயேத் ஸ கில ரங்கசந்த்ரமா:,**
**அத சேஷவந் மம ச தத்வதேவ வா ஸ்துதிசக்த்யபாவவிபவேபி பாகிதா. (14)**

| | | | |
|---|---|---|---|
| ஸ: ரங்கசந்த்ரமா: | — அந்த ஸ்ரீரங்கநாதன் | | (அல்லது) |
| நிஜம் | — தன்னுடையதான | தத்வத் எவ வா | அந்தஎம்பெருமான் தனக்குப் போலவேயோ |
| ஸஹஸ்ர வதந ஆதி வைபவம் | ஆயிரம்வாயுடைமைமுதலான வைபவத்தை | மம ச | — அடியேனுக்கும் |
| மே | — அடியேனுக்கு | ஸ்துதி சக்தி அபாவ விபவே அபி | ஸ்தோத்திரம்செய்வதில் சக்தியில்லாமையாகிற ஒருபெருமையிலும் |
| அர்ப்பயேத் யதி | — தந்தருள்வனேயாகில் | பாகிதா | — பங்கானது |
| அத | — அதற்குப்பிறகு | (ஸ்யாத்) | — உண்டாகும். |
| சேஷவத் | — ஆதிசேஷனுக்குப் போலவோ | | |

* * *—கீழ் ச்லோகத்தில் "ஸ்துமஹே வயம் கிமிதி தம் நசக்நும:" என்று—அழகிய மணவாளனை ஸ்தோத்ரம்பண்ண என்னாலாகாது என்றார். அந்த வார்த்தை சொல்வதற்கும் எனக்கு யோக்யதை இல்லை யென்கிறாரிதில். "ப்ரஸக்தஸ்யைவ ஹி ப்ரதிஷேத:" என்பதாக சாஸ்திரங்களில் ஒரு நியாயமுண்டு. அதாவது:—ஏதேனு மொன்றை நிஷேதிக்க வேணுமானால் ப்ரஸக்தியுண்டானாலன்றி நிஷேதம் ஸம்பவிக்க மாட்டாது என்கை. 'வேதமோதுவதற்கு எனக்கு சக்தியில்லை' என்று ஒருவன் சொல்லவேணுமானால், முன்னே அவனுக்கு வேதாத்யயநம் செய்ய அதிகாரமிருந்தாக வேண்டும். வேதத்தில் சிறிதும் அதிகாரமற்ற சூத்ரன் 'எனக்கு வேதமோத சக்தி



http://acharya.org

யில்லை' யென்று வாய்திறக்க ப்ரஸக்தியேயில்லை யன்றோ அதுபோல, 'எம்பெருமானைத் துதிக்க என்னால் முடியாது' என்று சொல்லவேண்டில், ஸ்துதிப்பதற்குச் சிறிதேனும் யோக்யதை யிருந்தாலன்றோ இந்த வார்த்தைசொல்ல ப்ரஸக்தி யுண்டாகும். திருவனந்தாழ்வான்போலவோ அந்த எம்பெருமான் போலவேயோ நானும் ஆயிரம் வாய்படைத்திருந்தேனாகில் ஸ்துதிப்பதற்கு அதிகாரம் எனக்கு ப்ரஸித்தமாகலாம்; அதன்பிறகு "ஸ்துமஹோ வயம் கிமிதி தம் நசக்நும:" என்று அதனை மறுத்துக் கொள்ளவும் இடமுண்டாகலா மென்கிறார்.

"ஆயிரம் சுடர்வாயரவணை" என்று திருவனந்தாழ்வானுக்கு ஆயிரம் வாய் உள்ளது போல எம்பெருமானுக்கும் "ஸஹஸ்ர சீர்ஷா புருஷ:" இத்யாதி ச்ருதிகளினால் ஆயிரம் வாயுடைமை ப்ரஸித்தம்; ஆனதுபற்றியே "நிஜம் ஸஹஸ்ரவதநாதி வைபவம்" என்றார். ஆதிசேஷனைப் போலவோ எம்பெருமானைப்போலவோ நானும் ஆயிரம் வாய் பெற்றபின்புதான் 'ஸ்தோத்ரம் பண்ண என்னாலாகாது' என்று சொல்வதற்கு ப்ரஸக்தியுள்ளதென்று சொன்னாராயிற்று. "ஒன்றிரண்டு கண்ணினனும் முன்னையேத் தவல்லனே" "தனக்கும் தன் தன்மை யறியவரியான்" இத்யாதிப்படியே ஸர்வஜ்ஞர்கட்கும் எட்டாதது பகவத வைபவம் என்றவாறு. ... (14)

सो अङ्ग वेद यदि वा न किलेति वेदः संदेग्ध्यनर्घविदमात्मनि रङ्गनाथम् ।
स्थाने तदेष खलु दोषमलीमसाभिः मद्वाग्भिरैश मतिशायनमावृणोति ॥१५॥

ஸோ அங்க வேத யதிவா ந கிலேதி வேத: ஸந்தேக்த்யநர்க்கவிதமாத்மநி ரங்கநாதம்,
ஸ்தாநே ததேஷ கலு தோஷமலீமஸாபி: மத்வாக்பிரைச மதிசாயந மாவ்ருணோதி: (15)

| | | | |
|---|---|---|---|
| வேத: | — வேதமானது | தத் ஸ்தாநே | — அப்படி ஸந்தேஹிப்பது தகும்; |
| ஸ: அங்க வேத யதிவா நவேத இதி | 'அந்த எம்பெருமான் தானும் தன் பெருமையை அறிந்தானோ இல்லையோ!' என்று சொல்லி | ஏஷ: | — இந்த பெரியபெருமாள் |
| | | தோஷமலீமஸாபி: | தோஷங்களால் அழுக்கேறின |
| | | மத் வாக்பி: | — எனது சொற்களைக்கொண்டு |
| அநர்க்கவிதம் ரங்கநாதம் | சிறந்த ஞானத்தையுடைய (ஸர்வஜ்ஞரான) பெருமானைக் குறித்தும் | ஐசம் | தனது ஸர்வேச்வரத்வத்துக்கு உரிய |
| ஆத்மநி | — தனக்குள்ளே | அதிசாயநம் | — அதிசயத்தை |
| ஸந்தேக்தி | — ஸந்தேஹப்படாநின்றது; | ஆவ்ருணோதி | — மறைத்துக் கொள்ளுகிறார். |

* * *:—தைத்திரிய ப்ராஹ்மணத்தின் (இரண்டாவது அஷ்டகம்—எட்டாம் ப்ரச்நம் ஒன்பதாம் அநுவாகத்தில்) § அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந், ஸோ அங்க வேதயதி வா ந வேத: என்று ஓதப்பட்டுள்ளது. தன் பெருமையை அந்த ஸர்வேச்வரன் தானு மறிந்தானோ இல்லையோ வென்று வேதபுருஷன் தானும் ஸந்தேஹப்படாநிற்க அறிவிலியான நான் நன்கறிந்தவன்போல ஸ்துதிக்க இழிவது தகுதியன்று.

§ இந்த வேதவாக்யத்தின் அர்த்தமாவது:—

ய: = யாவனொரு எம்பெருமான், அஸ்ய — இந்த ப்ரபஞ்சத்திற்கு, அத்யக்ஷ:— ஈச்வரனாய்க்கொண்டு, பரமே வ்யோமந்—பரமபதத்தில் வாழ்கிறானோ, ஸோ அங்க = அவன் தானும், (தன்பெருமையை) வேத = அறிந்தானோ, யதிவா நவேத = அல்லது அறிந்திலனோ? என்கை. ("தனக்கும் தன் தன்மை யறிவரியானை" என்னும் அருளிச்செயல்களிலுள்ளது.)

Srivatsam

http://acharya.org

ஆனாலும், ஸம்ஸ்க்ருதத்ராவிட வேதவாக்குகளாலே மாசேறிக்கிடக்கிற என்வாக்கைக்கொண்டு அவன் தானே தன்பெருமையைமறைத்துக்கொள்ளுகிறானே, நான் என்செய்வேன்! என்கிறார்.

முதல் பாதத்தில், கில—பாதபூரணமான அவ்யயம். [அநர்க்கவிதம்] ஸர்வஜ்ஞனை எம்பெருமானுடைய நிஸ்ஸங்கோசமான ஜ்ஞானமும் முட்டுப்படும்படியாயன்றோ அவன் வைபவமிருப்பது என்றுகாட்டினபடி.

"அதிசாயனே தமபிஷ்டனௌ" என்ற பாணினி ஸூத்ரநிர்த்தேசத்தை உட்கொண்டு 'அதிசாயநம்' ப்ரயோகிக்கப்பட்டது; அதிசயமென்றபடி. (15)

**स्वं संस्कृतद्राविडवेदसूक्तैर्भान्तं मदुक्तैर्मलिनीकरोति ।**
**श्रीरङ्गकम्रः कलभं क एव स्नात्वाऽपि धूलीरसिकं निषेद्धा ॥१६॥**

**ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிட வேத ஸூக்தை: பாந்தம் மதுக்தைர் மலிநீகரோதி,**
**ஸ்ரீரங்ககம்ர: கலபம் க ஏவ ஸ்நாத்வாபி தூளீரஸிகம் நிஷேத்தா.** **(16)**

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்க கம்ர: | கோயில் வாஸத்தில் விருப்ப முடையரான பெரியபெருமாள் | மதுக்தை: | — எனது உக்திகளினால் |
| ஸம்ஸ்க்ருத த்ராவிட வேத ஸூக்தை: | வடமொழி தென்மொழி வேத வாக்குகளாலே | மலிநீகரோதி | — மலினமாக்கிக் கொள்ளுகிறார்; |
| | | ஸ்நாத்வா அபி | — ஸ்நாநம் பண்ணினபின்பும் |
| | | தூளீரஸிகம் | புழுதியளைவதில் ஆசைகொண்ட |
| பாந்தம் | — விளங்காநிற்கிற | கலபம் | — யானையை |
| ஸ்வம் | — தம்மை | க: ஏவ | — எவன் தான் |
| | | நிஷேத்தா | — தடைசெய்யவல்லான்? |

* * *:—ஸ்ரீரங்கநாதன் வடமொழி வேதங்களாலும் அருளிச்செயல்களாலும் நன்கு விளங்காநிற்கச் செய்தேயும் என்னுடைய இளைய புன்கவிதைகளால் தன்னை மாசேறும்படி செய்துகொள்ளுகிறான்; யானையானது நன்கு நீராடியிருந்தாலும் புழுதி மண்ணிலே அளைந்து தன்னுடம்பைப் புழுதிபடுத்திக்கொண்டால் அதனை விலக்குவார் ஆரேனு முண்டோ? அதுபோல ஸ்வதந்த்ரனை ஸர்வேச்வரனும் செய்வன செய்து கொள்க. அதனை விலக்கப்போகாது என்கை. (16)

**किन्तु प्रपत्तिबलतारितविष्णुमायमद्वंश्यराजकुलदुर्ललितं किलैवम् ।**
**श्रीरङ्गराजकमलापदलालितत्वं यद्वाऽपराध्यति मम स्तुतिसाहसेऽस्मिन् ॥१७॥**

**கிந்து ப்ரபத்திபலதாரிதவிஷ்ணுமாய**
**மத்வம்ச்யராஜகுலதுர்லலிதம் கிலைவம்,**
**ஸ்ரீரங்கராஜகமலாபதலாலிதத்வம்**
**யத்வாபராத்யதி மம ஸ்துதிஸாஹஸேஸ்மிந்.**

**(17)**

| | | | |
|---|---|---|---|
| கிந்து | — ஆனாலும், | மத் வம்ச்ய- | —எனது முன்னோர்களினுடைய |
| ப்ரபத்திபல- | — ப்ரபத்தியின் மிடுக்கினால் | ராஜகுல துர்லலிதம் | சிறந்தகுலத்திற் பிறந்ததனாலுண்டான செருக்கு |
| தாரித- | — தாண்டுவிக்கப்பட்ட | | |
| விஷ்ணுமாய- | எம்பெருமானுடைய மாயையை உடையவர்களான | ஏவம் கில | இப்படி ஸ்தோத்ரத்தில் கைவைக்கும்படியாயிற்றன்றோ; |

Srivatsam
http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| யத்வா | — அல்லது, | லாலிதத்வம் | — சீராட்டி வளர்க்கப்பெற்றமை |
| ஸ்ரீரங்கராஜ- | — ஸ்ரீரங்கநாதனென்ன | மம | — எனக்குண்டானால் |
| கமலா- | — பெரியபிராட்டியாரென்ன (இவர்களுடைய) | அஸ்மின் ஸ்துதி ஸாஹஸே | இந்த ஸ்தோத்ரமாகிற துணிச்சலான காரியத்திலே |
| பத- | — திருவடிகளிலே | அபராத்யதி | — குற்றவாளியாகின்றது. |

* * *:—கேட்பாரற்ற ஸ்வதந்த்ரனை எம்பெருமான் தம்மைக்கொண்டு இந்த ஸ்தோத்ரம் செய்வித்துக்கொள்ளுகிறானாகக் கீழ் ச்லோகத்தில் அநுஸந்தித்தார். அதுவன்றியும், * வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் கூரத்தாழ்வானுடைய திருவம்சத்தில் பிறக்கப்பெற்றோமென்கிற செருக்கும், நம்பெருமாளும் ஸ்ரீரங்கநாச்சியாரும் சீராட்டி வளர்க்க வளர்ந்தோமென்கிற செருக்கும் இப்படி தைரியமாக ஸ்தோத்ரம்பண்ண இறங்குவதாகிற குற்றத்திற்குக் காரணமாகின்றன வென்கிறார்.

"மம மாயா துரத்யயா" என்று சொல்லப்பட்ட பகவன்மாயையை * மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே * என்கிறபடியே ப்ரபத்தி பலத்தாலே வென்றவர்களாம் ஆழ்வான்முதலானோர். அன்னவர்களுடைய திருவம்சத்திற் பிறந்தவர்கள் தைரியமாக எம்பெருமானை ஸ்துதிக்கலாமிறே; துர்லலித மென்பதும் தௌர்லலித்ய மென்பதும் பர்யாயம்; துஷ்டசேஷ்டித மென்றபடி. இது வொரு சமத்காரவார்த்தை.

ஸ்ரீரங்கராஜ கமலாபத லாலிதத்வம் என்றதன் விவரணம் கீழ் தனியன் வியாக்யானத்தில் 'ஸ்ரீவத்ஸாங்கஸுத:' என்றவிடத்துக் கண்டுகொள்வது.

இந்த ச்லோகத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்னில்; ஆழ்வான் எம்பார் எம்பெருமானார் முதலான நம் முன்னோர்களைக் கடாக்ஷித்து நம்மை க்ஷமிக்கக்கூடுமென்கிற தைர்யத்தினாலும், நம்மைப் புத்ர ஸ்வீகாரம் செய்துகொண்டு சீராட்டிவளர்த்த ஸ்ரீரங்கநாதனுக்கும் ஸ்ரீரங்க நாச்சியாருக்கும் நம்முடைய மழலைச் சொற்கள் இனிதாகவேயிருக்குமென்கிற நிச்சயத்தினாலும் எம்பெருமானை ஸ்துதிப்பதாகிற இக்குற்றத்திலே நான் கூசாது இழியலாயிற்று என்கை. ... ... (17)

नाथस्य च स्वमहिमार्णव पारदृश्व विज्ञानवाग्विलसितं सहते न वेदः ।
आपेक्षिकं यदि तदस्ति ममापि तेन श्रीरङ्गिणः स्तुतिविधावह मध्यकार्षम् ॥१८॥

நாதஸ்ய ச ஸ்வமஹிமார்ணவ பாரத்ருச்வ
விஜ்ஞாந வாக்விலஸிதம் ஸஹதே ந வேத:,
ஆபேக்ஷிகம் யதி ததஸ்தி மமாபி தேந
ஸ்ரீரங்கிண: ஸ்துதிவிதாவஹ மத்யகார்ஷம். ... ... (18)

| | | | |
|---|---|---|---|
| வேத: ச | — வேதமும் | தத் ஆபேக்ஷிகம் யதி | 'அவனைவிட இவன் சக்தன்' என்னும்படியான சக்தி விசேஷம் அந்த உண்டென்னில்; |
| நாதஸ்ய | — எம்பெருமானுக்கு | | அதனாலே அதை அது எனக்குமுண்டு; |
| ஸ்வ மஹிமார்ணவ பாரத்ருச்வ விஜ்ஞாந வாக்விலஸிதம் ந ஸஹதே | தன்வைபவக் கடலின் கரைகண்ட ஜ்ஞாந விருப்பதாகச் சொல்லமாட்டாமல் நிற்கிறது; | தேந | — அதனால் |
| | | ஸ்ரீரங்கிண: | — பெரிய பெருமாளை |

ஸ்துதி விஷயே — ஸ்தோத்ரம் செய்வதில்
அஹம் — அடியேன்
அத்யகார்ஷம் — அதிகாரியானேன் [அன்வயித்தேன்].

* * *:—கீழே தமக்கு ஸ்தோத்ரம் செய்வதில் அதிகாரமில்லையென்று பன்னியுரைத்தவிவர், வேதபுருஷன் முதலானவர்களும் எம்பெருமானை ஸ்துதிக்க அநதிகாரிகளா யிருக்கச் செய்தேயும் அதில் அதிகரித்தாப்போலே நானும் அதிகரிக்கக் குறையென்? என்கிறார் கீழ், பதினைந்தாம் ச்லோகத்தில் உதாஹரிக்கப்பட்ட "ஸோ அங்க வேத யதிவா ந வேத" என்கிற வேதவாக்யம் இங்கு விவக்ஷிதம். 'ஸர்வஜ்ஞனான எம்பெருமானுக்கே தன் பெருமைதெரியாது' என்று சொல்லுகிற வேதபுருஷன அப்படிப்பட்ட பகவானைத் தான் ஸ்தோத்ரம் பண்ண ஸ்வதராம் அதிகாரியல்லவென்று தெரிந்துவைத்தும் 'நமக்குக் கீழ்ப்பட்டவர்களைக்காட்டிலும் நாம் சிறிது அதிகமாகவே தெரிந்துகொண்டு ஸ்துதிக்கலாம்' என்றிறே ப்ரவர்த்தித்தது; குறையறப் பரிபூர்ணமாக ஸ்துதிக்க முடியாமை யென்பது வேதபுருஷனோடு என்னோடு வாசியற எல்லார்க்கும் ஒக்குமாகை பின்பு 'அவரையபேக்ஷித்து நான சகதன' என்று கொள்ளுகிற ஆபேக்ஷிக சக்தி எனக்கும் ஒருபடியாலே குறைவற்றிருக்கையாலே நானும் ஸ்தோத்திரத்திலே கைவைத்தேனென்கிறார்.

ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் "யத்வா ச்ரமாவதி" என்ற ச்லோகத்தின் கருத்தை அடியொற்றியதாமிது.

(18)

अन्यत्रातद्गुणोक्ति र्भगवति न तदुत्कर्षचौर्यैः परेषां
स्तुत्यत्वाद्यावदर्था फणितिरपि तथा तस्य निस्सीमकत्वात् ।
आम्नायानामसीम्नामपि हरिविभवे वर्षबिन्दोरिवाब्धौ
सम्बन्धात् स्वात्मलाभो ननु कबलनतः स्तोतुरेवं न किं मे ॥१९॥

அந்யத்ராதத்குணோக்திர் பகவதி ந ததுத்கர்ஷசௌர்யை: பரேஷாம்
ஸ்துத்யத்வாத் யாவதர்த்தா பணிதிரபி ததா தஸ்ய நிஸ்ஸீமகத்வாத்,
ஆம்நாயாநா மஸீம்நாமபி ஹரிவிபவே வர்ஷபிந்தோரிவாப்தௌ
ஸம்பந்தாத் ஸ்வாத்மலாபோ நநு கபளநத: ஸ்தோதுரேவம் ந கிம் மே. ... 19

அதத்குண உக்தி: — துதிக்கத்தக்கவனிடத்தில் இல்லாத குணங்களை ஏறிட்டுச் சொல்வதாகிற ஸ்தோத்ரமானது
அந்யத்ர — எம்பெருமான் தவிர மற்ற வ்யக்திகளில் ஆகும்;
பகவதி — குணக்கடலாகிய எம்பெருமானிடத்தில்
ந — (இல்லாததை ஏறிட்டுச்சொல்வதாகிற அந்தஸ்தோத்ரம்) அஸம்பாவிதம்;
(ஏனென்றால்)
தத் உத்கர்ஷ சௌர்யை: — அந்த எம்பெருமானுடைய பெருமைகளைக் களவுசெய்து
பரேஷாம் ஸ்துத்யத்வாத் — மற்றையோரை ஸ்துதிக்க வேண்டி யிருக்கையாலே;
(மேலும்)
யாவத்அர்த்தா பணிதி: அபி — பெருமைகள் உள்ள வளவும் சொல்லி முடிக்கையாகிற ஸ்தோத்ரமும்
ததா — எம்பெருமானிடத்தில் அஸம்பாவிதம்;

http://acharya.org

(ஏனென்றால்)

தஸ்ய நிஸ்ஸீம மகத்வாத் — (எம்பெருமானுடைய) அப்பெருமை எல்லையற்றதாகையாலே;

(ஆகில், வேதங்கள் பகவத் குணங்களை எங்ஙனே ஸ்துதித்தனவென்னில்)

அஸீம்ஸாம் — அளவிறந்த

ஆம்நாயாநாம் அபி — வேதங்களுக்கும்

வர்ஷபிந்தோ: அப்தௌ இவ நிபதிதஸ்ய — மழைத்துளியானது கடலிலே விழுவதனால் தான் ஸத்தை பெறுவதுபோல

ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப: — பகவத் வைபவஞ் சொல்லுவதிலே அவ்வேதங்களும் மாத்திரம் தான் நிறம்பெறுமத்தனையன்றி

ந து கபளநே: — (பகவத் வைபவத்தை) விளாக்குலை கொள்ளுதலன்று;

ஸ்தோது: மம — ஸ்தோத்ரம்பண்ணப் புகுந்த எனக்கும்

ஏவம் ந கிம் — இப்படி ஸம்பந்தாத் ஸ்வாத்மலாபமாகாதோ?

* * *:—எல்லைகடந்த வைபவமுடையவனை எம்பெருமானை ஸ்துதிப்பதென்பது ஒருவர்க்கும் ஒருபடியாலும் ஸம்பாவிதமன்று என்பதை ஸ்தாபித்து, அவரவர்கள் தங்கள் வாக்கு நிறம் பெறுவதற்காக பகவத் ஸ்தோத்திரத்தில் இழிகிறார்களே யன்றி பகவத் குணங்களை முழுதும் கண்டறிந்து பேசிவிடலாமென்று இழிகிறார்களில்லை; அப்படியே நானும் ஸத்தை பெறுவதற்காக ஸ்துதிக்க இழியலாமிறே என்று நிகமிக்கிறார்.

உலகில் ஸ்தோத்ரமென்பது இரண்டுவிதம்: ஒருவனிடத்தில் இல்லாத குணங்களை வேறிடத்திலிருந்து கொணர்ந்து ஏறிட்டுப் புகழ்வதை ஸ்தோத்ரமாகச் சொல்லுகிற பக்ஷம் ஒன்றுண்டு; (ஒருகற்றை நெல் பெறுவதற்காக ஒரு மொட்டைத்தலையனை "குழலழகரே! குழலழகரே"!, என்று புகழ்வது காண்க.) ஒருவனிடத்திலுள்ள குணங்களை உள்ளபடி சொல்லிப்புகழ்வதும் ஸ்தோத்ரமாகும், இவ்விரண்டுவகையான ஸ்தோத்திரங்களுள் ஒருவகையும் எம்பெருமானிடத்தில் செய்யப்போகாது;* உயர்வற உயர்நலமுடையவனை எம்பெருமானிடத்தில் பிறருடைய குணங்களை ஏறிட்டுச்சொல்வதென்பது அஸம்பாவிதம். எம்பெருமானுடைய குணங்களைத் திருடிப் பிறரிடத்து ஏறிட்டுப் புகழ்வதுண்டேயன்றி வேறில்லை. இனி, உள்ள குணங்களை உள்ளபடியே சொல்லிப்புகழ்வதாகிற ஸ்தோத்ரவகையும் செய்யப்போகாது; அளவிறந்த கல்யாண குணங்களில் ஒருசிறுபகுதியும் எண்ணிப்பேசவொண்ணாதிறே. இப்படியாகில், வேதங்களெல்லாம் எம்பெருமானை ஸ்துதிக்கின்றனவே, அஃது எப்படி என்னில்; ஒன்றுபாருங்கள்;—மேகமானது மற்றவிடங்களில் மழை பெய்வதுபோல் கடலிலும் பெய்கிறது. அந்த மழைத்துளியினால் கடலுக்குச் சிறிதும் ஆதிக்யமுண்டாவதில்லை; பின்னை என்னென்னில்; மண்ணிலே மழைபெய்தால் அந்த மழைத்துளியானது ஸ்வஸ்வரூபங்கெட்டு மண்ணாய்ப்போகிறது; கடலிற்பெய்தால் அப்படி உருமாறாதே ஸ்வரூபலாபத்துடனே கிடக்கிறது; அதுபோல, எல்லாவாக்குக்களும் பகவத்வைபவம் தவிர மற்று விஷயங்களில் சென்றால் ஸ்வரூபங்குலைந்து கெடும்; பகவத் வைபவத்தைப் பேசப் புகுந்தால் வாக்கும் நிறம் பெற்றிருக்கும் என்கிற இவ்வளவேயன்றி, பகவத் வைபவத்தைக் காணிக்கை வேதங்களுக்கும் அஸாத்யம். ஆகவே, அவரவர்களுடைய வாக்கு நிறம் பெறுவதற்காகவே பகவத் விஷயத்தில் இழிகிறதென்று தேறினபின்பு, நானும் என் வாக்கு நிறம்பெறுமே ஸ்துதிக்க இழிகின்றேன். என் இது கூடாது.

பகவத் குணங்களை எல்லாம் கண்டுபேச முடியாவிட்டாலும் நான் ஸ்வரூபஸத்தை பெறுவதற்காக ஏதோ சில சொல்லப் புகுகின்றேனென்றாராயிற்று. (19)

कावेरीमवगाहिषीय भगवद्भोगान्तरायीभवत्कर्मक्लेशफलाशयप्रशमनोद्वेलामलस्रोतसम् ।
जन्तोस्संसरतोऽर्चिरादिसरणिव्यासङ्गभङ्गाय या लोकेऽस्मिन् विरजेव वेल्लितजला श्रीरङ्गमालिङ्गति ॥२०॥

காவேரீ மவகாஹிஷீய பகவத் போகாந்தராயீ பவத்
கர்மக்லேச பலாசய ப்ரசமநோத்வேலாமல ஸ்ரோதஸம்,
ஜந்தோஸ் ஸம்ஸரதோர்ச்சிராதிஸரணி வ்யாஸங்க பங்காய யா
லோகேஸ்மிந் விரஜேவ வேல்லிதஜலா ஸ்ரீரங்க மாலிங்கதி. (20)

| | | | |
|---|---|---|---|
| யா | — யாதொரு காவிரியானது | அந்தராயீ பவத் | — இடையூறாயிருக்கின்ற |
| ஸம்ஸரத: | — ஸம்ஸாரியான | கர்ம | புண்யபாப ரூப கருமங்களென்ன |
| ஜந்தோ: | — ப்ராணிக்கு | க்லேச | அவித்யை முதலிய கஷ்டங்களென்ன |
| அர்ச்சிராதி ஸரணி வ்யாஸங்க பங்காய | அர்ச்சிராதி மார்க்கத்தில் அலைச்சல்படுவதைப் போக்குவதற்காக | பல | — கருமபலன்களென்ன, |
| அஸ்மிந்லோகே | — இவ்வுலகத்தில் | ஆசய | வாஸனையென்ன ஆகிய இவற்றை |
| வேல்லிதஜலா | அலைக்கப்பட்ட நீர்த்தத்தையுடைய | ப்ரசமந | — போக்குகின்றதும் |
| விரஜா இவ | — விரஜாநதிபோன்று | உத்வேல, | — கரையை மீறியிருப்பதும் |
| ஸ்ரீரங்கம் | — திருவரங்கத்தை | அமல | — நிர்மலமாயிருப்பதுமான |
| ஆலிங்கதி | அணைத்துக் கொண்டிராநின்றதே | ஸ்ரோதஸம் | — ப்ரவாஹத்தையுடைத்தான |
| தாம் | — அப்படிப்பட்டதாய் | காவேரீம் | — காவேரியை |
| பகவத்போக | எம்பெருமானுடைய அநுபவத்திற்கு | அவகாஹிஷீய | — குடைந்து ஆடக்கடவேன். |

* * *:—ஆகக் கீழ்ச் சென்ற ச்லோகங்களெல்லாம் இந்த நூலுக்கு முகவுரை போலும். பட்டர் திருக்கோட்டியூரில் நின்றும் மீண்டெழுந்தருளுகிற ஸமயத்திலே இந்த ஸ்தவம் அருளிச்செய்யப்படுவதாகையாலே வழியடைவே பேசுகிறாராய் இது முதல் ஐந்து ச்லோகங்களினால் காவேரீவர்ணநம் பண்ணுகிறார். இதில் திருக்காவேரியில் குடைந்தாடுகிறேனென்கிறார். ஸ்ரீவைஷ்ணவர்கள் நாடோறும் நீராடுவது எவ்விடத்திலானாலும் இது முதலான ஐந்து ச்லோகங்களை அநுஸந்திப்பது நியமம்.

பரமபதத்துக்குப் போகும் வழியிலுள்ள விரஜாநதியே இவ்வுலகில் காவேரியாக வடிவெடுத்து ஸகல ஜனங்களுக்கும் அநுகூலமாகத் திருவரங்கம் பெரியகோயிலைச் சூழ்ந்திருப்பதாக அருளிச் செய்கிறாரிதில். விரஜை தன்னிடத்தை விட்டு இங்கு வருவானேன்? என்னில்; விரஜையில் நீராடாதவர்கட்குப் பரமபதப்ராப்தியில்லை. அர்ச்சிராதி மார்க்கத்தாலே மிகவருந்திச் சென்று அவ்விரஜையில் நீராடவேண்டியிருப்பதால் அவ்வருத்தமின்றி எளிதாக ஸம்ஸாரிகளெல்லாம் விரஜாஸ்நாநம் பெற வேணுமென்கிற விசாலமான எண்ணங்கொண்டு காவேரியாக ஆயிற்றும்; இத்தால்—கோயிலுக்குச் செல்லும் மார்க்கமே அர்ச்சிராதி மார்க்கமென்றும், ஸ்ரீரங்கமந்திரமே வைகுண்டமென்றும் ஸ்ரீரங்கநாதனே பரவாஸுதேவனென்றும் ஸூசிப்பிக்கப் பட்ட

http://acharya.org

தாயிற்று. "காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்—ஸ வாஸுதேவோ ரங்கேச: ப்ரத்யக்ஷம் பரமம் பதம்." என்றது காண்க.

விரஜைக்கு உள்ள குணங்கள் காவேரிக்கும் குறையற்றதென்கிறார் 'பகவத் போகாந்த ராயிபவத்' இத்யாதியால். எம்பெருமானுக்கு நித்ய கைங்கரியம் பண்ணுவதற்கு இடையூறான இரு வினைகளையும் அவித்யை முதலான க்லேசங்களையும் கரும பலன்களையும் மேன்மேலும் கருமங்களில் கைவைப்பதற் குறுப்பான வாஸனையையும் போக்கவல்ல தீர்த்தமுடைய தென்கை. (20)

दुग्धाब्धिर्जनको जनन्यहमियं श्रीरेव पुत्री वरः श्रीरङ्गेश्वर एतदर्हमिह किं कुर्यामितीवाकुला ।
चञ्चच्चामरचन्द्रचन्दनमहामाणिक्यमुक्तोत्करान् कावेरी लहरीकरैर्विदधती पर्येति सा सेव्यताम् ॥२१॥

துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம் ஸ்ரீரேவ புத்ரீ வர:
ஸ்ரீரங்கேச்வர ஏததர்ஹமிஹ கிம் குர்யாமிதீவாகுலா,
சஞ்சச்சாமர சந்த்ரசந்தந மஹாமாணிக்ய முக்தோத்கராந்
காவேரீ லஹரீகரைர் விதததீ பர்யேதி ஸா ஸேவ்யதாம். (21)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| துக்த அப்தி: | — | திருப்பாற்கடலானது | ஆகுலா இவ | — | வியாகுலப் பட்டவள்போல, |
| ஜநக: | — | தந்தை; | சஞ்சத் | — | விளங்காநின்ற |
| அஹம் | | (அக்கடலின் மனைவியாகிய) நான் | சாமர | — | சாமரங்களென்ன |
| ஜநநீ | — | தாய்; | சந்த்ர | — | பச்சைக் கருப்பூர மென்ன |
| இயம் ஸ்ரீ: ஏவ | — | இந்த ஸ்ரீரங்கநாயகியே | சந்தந | — | சந்தனமரங்களென்ன |
| புத்ரீ | — | மகள்; | மஹாமாணிக்ய | — | சிறந்த ரத்னங்களென்ன |
| ஸ்ரீரங்கேச்வர: | — | அழகிய மணவாளன் | முக்தா | | முத்துக்களென்ன இவற்றி னுடைய |
| வர: | — | மணவாளப்பிள்ளை; | உத்கராந் | — | குவியல்களை |
| இஹ | — | இப்படியிருக்கையில் | லஹரீகரை: | — | அலைகளாகிற கைகளினால் |
| ஏதத் அர்ஹம் | | இந்தமகளுக்கும் மணவாளப் பிள்ளைக்கும் தகுதியாக | விதததீ ஸதீ | — | எந்திக்கொண்டு |
| கிம் குர்யாம் | | என்னசிறப்பு செய்யக்கடவேன்?' | பர்யேதி | — | பெருகுகின்றது; |
| இதி | — | என்று | ஸா | — | அப்படிப்பட்ட காவிரியானது |
| காவேரீ | — | காவிரியானவள் | ஸேவ்யதாம் | | (ஜநங்களால்) நீராடப்பெற வேணும். |

* * *:—"தெளிவிலாக் கலங்கல் நீர் சூழ் திருவரங்கம்" என்கிறபடியே காவிரிநீர் கலக்கமாகப் பெருகுவதற்கு ஒரு ஹேதுவை உத்ப்ரேக்ஷிக்கிறார். உலகத்தில் ஸம்பந்தி வர்க்கங்கள் ஸாமாந்ய ஜனமாயிருந்தால் சீர்சிறப்புகள் எப்படியிருந்தாலும் குற்றமில்லை; [illegible]வே யிருக்கலாம்; ஸம்பந்தி வர்க்கம் மிகச்சிறந்ததாயிருந்தால் அதற்கீடாகச் [illegible]த்திருக்கவேண்டும்; இது லோகப்ரஸித்தம். நிற்க. பிராட்டி திருப் [illegible] றும் தோன்றினவளாதலால் அவளுடைய தகப்பனாரோ ஸாக்ஷாத் [illegible] களுக்கெல்லாம் கடலே கணவனாகச் சொல்லப்படுவதால் காவிரி [illegible] ருக்கின்றாள்; மகளோ ஸாக்ஷாத் லக்ஷ்மியாயிராநின்றாள்; மண [illegible] கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் [illegible] திருவரங்கச் செல்வனாயிருக்கின்றார். ஆக

லிப்படி நம் பெண்ணுக்குப் புக்கவிடமும் பிறந்தவிடமுமாகிய உபயவர்க்கமும் சீரியதாயிருக்கையாலே இந்தச்சீர்மைக்குத் தகுந்தபடியாக நாம் என்னசிறப்புச் செய்யவல்லோம் என்று மணமகளின் தாயாகிய காவிரியாறு கலக்கமுற்றதாம்:

ஒருவாறு மனந்தேறிச் சில சிறப்புப் பொருள்களை ஸமர்ப்பிக்கும்படியைப் பின்னடிகளில் பேசுகிறார்; "ஆளரியாலலைப்புண்ட யானை மருப்புமகிலும் அணிமுத்தும் வெண்சாமரையோடு, பொன்னி மலைப்பண்டமண்டத் திரையுந்து" என்றும், "சந்தினொடு மணியுங்கொழிக்கும் புனல் காவிரி" என்றும், "வேயின்முத்தும் மணியுங் கொணர்ந்து ஆர்புனற் காவிரி" என்றுஞ்சொல்லுகிறபடியே சாமர சந்த்ர சந்தந மலயமாணிக்ய முக்தாராசிகளைத் திரைக்கைகளாலே உந்திவருகின்றதாம். இப்படிப்பட்ட காவிரியிற் படிந்து குடைந்தாடுமின் என்றாராயிற்று. (21)

तीर्थं शुन्धति पाति नन्दनतरून् रथ्याङ्गणान्युक्षति स्नानीयार्हणपानवारि वहति स्नातः पुनीते जनान् ।
श्यामं वेदरहो व्यनक्ति पुलिने फेनैर्हसन्तीव तत् गङ्गां विष्णुपदीत्वमात्रमुखरां हेमापगा हन्त्यघम् ॥२२॥

தீர்த்தம் சுந்ததி பாதி நந்தநதரூந் ரத்யாங்கணாந்யுக்ஷதி
ஸ்நாநீயார்ஹணபாந வாரி வஹதி ஸ்நாத: புநீதே ஜநாந்,
ச்யாமம் வேதரஹோ வ்யநக்தி புளிநே பேநைர் ஹஸந்தீவ தத்
கங்காம் விஷ்ணுபதீத்வமாத்ரமுகராம் ஹேமாபகா ஹந்த்யகம். (22)

| | | | |
|---|---|---|---|
| ஹேம ஆபகா | பொன்னி என்கிற காவேரியானது | புநீதே | — சுத்தி செய்கிறது; |
| தீர்த்தம் | தீர்த்தமென்று பெயர்பெற்ற புண்ணியஜலங்களையும் | ச்யாமம் | — நீலநிறத்ததாய் |
| சுந்ததி | — பரிசுத்தமாக்குகின்றது; | வேதரஹ: | வேதங்களின் ரஹஸ்யப் பொருளான எம்பெருமானை |
| நந்தநதரூந் | திருநந்தவனத்திலுள்ள மரங்களை | புளிநே | — (தனது) மணற்குன்றிலே |
| பாதி | — காப்பாற்றுகின்றது; | வ்யநக்தி | — ஸேவை ஸாதிப்பிக்கின்றது; |
| ரத்யா அங்கணாநி | திருவீதிகளையும் நாற்சந்திகளையும் | தத் | — ஆகையினாலே |
| உக்ஷதி | — நனைக்கிறது; | விஷ்ணு பதீத்வ மாத்ரமுகராம் | 'பெருமானுடைய திருவடியில் நின்றும் பிறந்தது' என்கிற மாத்திரத்தால் (அஹங்காரங் கொண்டு) கர்ஜிக்கின்ற |
| ஸ்நாநீய அர்ஹண பாநவாரி | திருமஞ்சனத்திற்கும் திருவாராதனத்திற்கும் அமுது செய்திக்கும் யோக்யமான தீர்த்தத்தை | கங்காம் | — கங்கையை |
| வஹதி | — வஹித்திராநின்றது; | பேநை: | — நுரைகளினால் |
| ஸ்நாத: | — நீராடுகிற | ஹஸந்தீ இவ ஸ்திதா | சிரிப்பதுபோலிராநின்ற அக்காவிரியாறானது |
| ஜநாந் | — ஜனங்களை | அகம் | — (நமது) பாபத்தை |
| | | ஹந்தி | — போக்கடிக்கக் கடவது. |

* * *:—ஐப்பசி மாதத்தில், ஸகல புண்ய தீர்த்தங்களும் தங்களைப் பாபிஷ்டஜநங்கள் தீண்டியுண்டாக்கின பாபம் தொலையக் காவேரியில் அவகாஹித்துத் தூய்மைபெறுகின்றனவாகத் துலாகாவேரீ மாஹாத்மியத்தில் சொல்லியிருத்தலால் "தீர்த்தம் சுந்ததி" எனப்பட்டது. தீர்த்தம் என்றது ஜாத்யேக வசநம்; ஸகல புண்ய தீர்த்தங்களையும் என்றபடி. அன்றியே, தீர்த்தம்— நம்பெருமாள் தீர்த்தம் ஸாதிக்கும் துறையை, சுந்ததி—பரிசுத்தமாக்குகிறது என்று முரைப்பர்.

Srivatsam

http://acharya.org

"கங்கையிற் புனிதமாய காவிரி" என்கிற பாட்டுக்கு விவரணமாயிருக்கும் இந்த ச்லோகம். கங்கையானது ஏதோவொரு ஸமயத்தில் எம்பெருமானுடைய திருவடி ஸம்பந்தம்பெற்றது என்றவளவேயன்றி, "தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடி வருட" என்னும்படியாகக் காவேரிபோலே நித்யஸம்பந்தம்பெற்றதன்றே. அது வன்றியும் காவேரிக்குள்ள அதிசயங்கள் பலபலவுண்டு; தீர்த்தங்களையும் புனிதமாக்கு கின்றது; "ஆராமஞ்சூழ்ந்தவரங்கம்" என்கிறபடியே கோயிலைச் சூழ்ந்திருக்கின்ற சோலைகளைவளர்க்கின்றது; கோயில்திருவீதி திருமுற்றங்களிலே பெருகுகின்றது; அழகிய மணவாளனுடைய திருமஞ்சனம் முதலியவற்றிற்கும் பாங்காகப் பயன் படுகின்றது: தன்னிற் குடைந்தாடுமவர்களைத் தூயராக்குகின்றது; வேதாந்தவிழுப் பொருளின்மேலிருந்த விளக்காகிய கருமணியைக் கோமளத்தை [ஸ்ரீரங்கநாதனை]த் தன்நடுவுபாடே ஸேவைஸாதிப்பிக்கின்றது. ஆக இவ்வளவு அதிசயங்களுள்ளதனால் 'அடீ கங்காநதியே! என்முன்னே உனக்கு வாய் திறக்க வழியுண்டோ?' என்று சிரிப்பதுபோலே நுரைகளைக் காட்டிக்கொண்டிருக்கிறதாம். இப்படிப் பட்ட கங்கை யிற் புனிதமாய காவிரியானது* நமது பாவங்களைப் பாற்றவேணுமென்றாராயிற்று. (22)

अगणितगुणावद्यं सर्वं स्थिरत्रसमप्रतिक्रियमपि, पयःपूरैराप्याययन्त्यनुजाग्रती ।
प्रवहति जगद्धात्री भूत्वेव रङ्गपतेर्दया शिशिरमधुरागाधा सा नः पुनातु मरुद्वृधा ॥२३॥

அகணிதகுணவத்யம் ஸர்வம் ஸ்திரத்ரஸமப்ரதி
க்ரியமபி, பய:பூரைராப்யாயயந்த்யநுஜாக்ரதி,
ப்ரவஹதி ஜகத்தாத்ரீ பூத்வேவ ரங்கபதேர் தயா
சிசிரமதுராகாதா ஸா ந: புநாது மருத்வ்ருதா. (23)

May You Purify us

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (யா) | — | யாதொரு காவிரியானது | ரங்கபதே: | — | அழகிய மணவாளனுடைய |
| அப்ரதிக்ரியம் அபி | } | ப்ராயச்சித்த யோக்யதை கூட இல்லாத | தயா இவ | — | திருவருள்போல |
| ஸ்திரத்ரஸம் ஸர்வம் | } | ஸ்தாவர ஜங்கமப் பொருள் களையெல்லாம் | ஜகத் தாத்ரீ பூத்வா | } | உலகுக்கெல்லாம் உபமாதா வாகி |
| அகணிதகுண அவத்யம் (யதாததா) | } | குண தோஷங்களை ஆராயாதபடி | ப்ரவஹதி | — | வெள்ளமிடா நின்றதோ, |
| | | | ஸா | — | அப்படிப்பட்ட |
| பய: பூரை: | — | ஜல ப்ரவாஹங்களாலே | சிசிரமதுர அகாதா | } | குளிர்ந்தும் மதுரமாயும் ஆழமாயுமுள்ள |
| ஆப்யாயயந்தீ ஸதீ | } | த்ருப்திபடுத்தா நின்று கொண்டும் | மருத்வ்ருதா | — | காவேரியானது |
| அநு ஜாக்ரதீ | } | கூடவே விழித்திரா நின்று கொண்டும் | ந: | — | நம்மை |
| | | | புநாது | — | பரிசுத்தப்படுத்துக. |

* ——ஸ்ரீரங்கநாதனுடைய கருணாரஸமே திருக்காவேரியாக உருவெடுத்துப் பெருகிநின்ற தென்கிறார். பகவத்க்ருபை பெருகத் தொடங்கிவிட்டால் 'இன்னான் நல்லன், இன்னான் குணசாலி' என்று குணதோஷங்களை ஆராயாமல் ஸகல சராசரங் களையும் ஏறிப்பாய்ந்து போஷிக்குமிறே; திருக்காவேரியும் அப்படியே குணகுண நிரூபணம் பண்ணாமல் ஸ்தாவரஜங்கமப்பொருள்களெல்லாவற்றிலும் பாய்ந்து செழிப்பை யுண்டுபண்ணுகின்றது. சிசுக்களை முலைப்பால் கொடுத்து வளர்க்கும் தாய்

Srivatsam
http://acharya.org

பொன்றிருத்தல் பகவத் க்ருபைக்கும் காவேரிக்கும் ஒக்கும். குளிர்ந்து மதுரமாய் கம்பீரமாயிருக்குந் தன்மைகளும் ஒக்கும். ஆக இப்படிகளாலே பகவத்க்ருபைக்குப் போலியாயிருக்கின்ற திருக்காவேரி நம்மைப் புனிதமாக்கவேணு மென்றாராயிற்று.

**அப்ரதிக்ரியமபி** = ப்ரதீகாரமாவது-தோஷங்களுக்குப் பரிஹாரம்பெற யோக்ய மாயிருத்தல். "சரீரஜை: கர்மதோஷை: யாதி ஸ்தாவரதாம் நர:" [உடம்பினால் செய்யும் பாபங்களின் பலனாக ஸ்தாவரஜன்மம் உண்டாகின்றது] என்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறபடியே காயிக பாபங்களுக்குப் பலனாகக் கல்லாகவும் மரமாகவும் ஸ்தாவரப்பிறவிகள் பெற்றிருக்குமவற்றுக்கு வேறொரு ப்ரதீகாரமில்லையிறே. அவை யும் காவேரீ தீர்த்த மஹிமையினால் உஜ்ஜீவிக்கக் குறையில்லை யென்கிறது.

**அநுஜாக்ரதீ** = முலைப்பால் கொடுக்குந்தாய் குழந்தையுடன் கூடவே விழித்துக் கொண்டிருப்பள்; பகவத்க்ருபையும் ஓயாதே உறங்காதேயிருந்து காரியம் செய்யும். திருக்காவேரியும் வெள்ளங்கோத்தபடியே யிருக்கும்.

**மருத்வ்ருதா** = காற்றடிக்க வடிக்கக் காவிரிநீர்ப்பெருக்கு அபிவ்ருத்தியடையுமாத லால் மருத்வ்ருதா என்று இப்பெயராயிற்று. **मरुता वर्धत इति मरुद्वृधा ॥** .... (23)

**तरलतनुतरङ्गैर्मन्दमान्दोल्यमान स्वतटविटपिराजीमञ्जरीसुप्तभृङ्गा ।**
**क्षिपतु कनकनाम्नी निम्नगा नारिकेल क्रमुकजमकरन्दैः मांसलापा मदंहः ॥२४॥**

**தரளதநுதரங்கைர் மந்தமாந்தோள்யமாந**
**ஸ்வதடவிடபிராஜீ மஞ்ஜரீஸுப்தப்ருங்கா,**
**க்ஷிபது கநகநாம்நீ நிம்நகா நாரிகேள**
**க்ரமுகஜமகரந்தைர் மாம்ஸலாபா மதம்ஹ:** **(24)**

| | | | |
|---|---|---|---|
| தரள தநு தரங்கை: | சஞ்சலமாயும் சிறிதாயுமிருக் கிற அலைகளாலே | நாளிகேர க்ரமுகஜ மகரந்தை: | தெங்குகளில் நின்றும் பாக்கு களில் நின்று முண்டான மகரந்தங்களினால் |
| மந்தம் | — மெல்ல | மாம்ஸலாபா | — நிரம்பிய நீரை யுடையதான |
| ஆந்தோள்யமாந— | அலைக்கப்படா நின்ற | கநக நாம்நீ | — பொன்னியென்கிற |
| ஸ்வதடவிடபி ராஜீ | தன்கரையிலுள்ள சோலை களினுடைய | நிம்நகா | — (காவேரி) நதியானது |
| மஞ்ஜரீ | — பூங்கொத்துகளிலே | மத் அம்ஹ: | — என்னுடைய பாபத்தை |
| ஸுப்த | — உறங்குகின்ற | க்ஷிபது | — தொலைத்திடுக. |
| ப்ருங்கா | — வண்டுகளையுடையதும் | | |

• • •—காவிரியின் கரையிலே பல சோலைகள் உள்ளன; காவிரியின் சிறிய அலை கள் அச்சோலைகளிலே சென்று மோத, அதனால் பூங்கொத்துகளிலே வண்டுகள் இனி தாகக் கண்வளர்கின்றனவாம். அன்றியும், தெங்கு கமுகு முதலியவற்றில் நின்றும் பெருகின மதுவெள்ளமும் காவிரியில் சேர்ந்து வெள்ளம் இரட்டித்திருக்கின்றதாம். இப்படிப்பட்ட திருக்காவேரி என் பாபங்களைப் போக்கவேணு மென்றாராயிற்று.

Srivatsam
http://acharya.org

கநகநாம்நீ—காவேரியானது "பொன்னும் பொன்னி கொணர்ந்தலைக்கும்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே பொன்களைக் கொழித்துக்கொண்டு பெருகுவதனால் தமிழில் பொன்னி யென்று பெயர் பெறும்; அதுபற்றி 'கநகநாம்நீ' எனப்பட்டது. 'ஹேமாபகா' என்றதும் இதுபற்றியே. (24)

Island of Srirangam

कदलवकुल जम्बूपूगमाकन्दकण्ठद्वयससरसनीरामन्तरा सह्यकन्याम् ।
प्रबलजलपिपासालम्बमानाम्बुदौघ भ्रमकरतरुवृन्दं वन्द्यतामन्तरीपम् ॥२५॥

Let us worship the island of Srirangam

கதளவகுள ஜம்பூபூகமாகந்தகண்ட த்வயஸஸரஸநீராமந்தரா ஸஹ்யகந்யாம்,
ப்ரபலஜலபிபாஸா லம்பமாநாம்புதௌக ப்ரமகர தருப்ருந்தம் வந்த்யதாமந்தரீபம். (25)

| | | |
|---|---|---|
| கதள | — | வாழைமரங்களென்ன |
| வகுள | — | மகிழ்மரங்க ளென்ன |
| ஜம்பூ | — | நாவல்மரங்களென்ன |
| பூக | — | பாக்குமரங்களென்ன |
| மாகந்த | { | தேன்மாமரங்களென்ன இவற்றினுடைய |
| கண்டத்வயஸ | — | கழுத்தளவாகவுள்ளதும் |
| ஸரஸ | — | மாதுர்யத்தோடுகூடினதுமான |
| நீராம் | — | நீர்த்தத்தை யுடைத்தான |

| | | |
|---|---|---|
| ஸஹ்யகந்யாம் அந்தரா | } | காவேரியின் நடுவே |
| ப்ரபலஜல பிபாஸா | } | அதிகமான தாஹத்தினால் |
| லம்பமாந | — | கீழேயிறங்கி யிருக்கின்ற |
| அம்புத ஓக | — | மேகஸமூஹத்தினுடைய |
| ப்ரமகர | — | ப்ரமத்தை யுண்டுபண்ணுகின்ற |
| தருப்ருந்தம் | — | சோலைகளை யுடைத்தான |
| அந்தரீபம் | — | தீவானது |
| வந்த்யதாம் | — | வணங்கப்படட்டும். |

* * *—கீழ் ஐந்து ச்லோகங்களாலே திருக்காவேரியை வருணித்துப் பேசினாராய், "இடர்விளங்கு கரைப்பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கம்" என்கிறபடியே திருக்காவிரியின் இடைத்தீவாகிய ஆராமஞ் சூழ்ந்த வரங்கத்தைப் பேசுகிறார் மேலிரண்டு ச்லோகங்களாலே.

வாழை, மகிழ், நாவல், கமுகு, தேன்மா முதலிய மரங்களின் கழுத்தே கட்டளையாக வெள்ளமிட்டிரா நின்ற திருக்காவேரியினிடையே [உபய காவேரீ மத்யத்திலே], 'அளவற்ற தாஹத்தினால் தண்ணீர் குடிக்கவந்து கழுத்தளவும் தண்ணீர்குடித்து நகரமாட்டாமல் தொங்குகின்ற மேகங்களே இவை!, என்று ப்ரமிப்பதற்குரிய வ்ருக்ஷ ஸமூஹங்களை யுடைத்தான த்வீபத்தை வணங்குமின்.

கழுத்தளவும் தண்ணீரில் அமிழ்ந்திருக்கின்ற மரங்களானவை மேலே தலையும் இலையும் கப்பும் கிளையுமான பாகங்கள் மாத்திரமே கண்ணுக்குத் தோற்றும்படி யிருப்பதாலும் அவை கறுத்துத்தோற்றுவதாலும் காளமேகங்களோடு ஒப்பிட்டுக் கூறப்பட்டன.

இங்கு "ஜலபிபாஸாலம்பமாநாம்புத" என்றது 'நீர் பருகுவதற்காக வந்த மேகங்கள்' என்று பொருள்படுதலால் அந்த மேகங்கள் வெண்ணிறமாகவே யிருக்குமாதலால் அவை பசிய மரங்களுக்கு எங்ஙனே உவமையாகும்? என்று சிலர் சங்கிப்பர்; நீர் கொண்டெழுந்த காளமேகங்களே இங்கு விவக்ஷிதம்; மூலத்தில் "பிபாஸாலம்பமாந" என்றது என்னெனில்; மேகங்கள் காவேரிக்கரையில் வருவதற்குக் காரணம் கூறினவத்தனை. விடாயைத் தீர்த்துக்கொள்ள வந்தவையென்கை. வந்து விடாய் கெட நீர் பருகின மேகங்களே இங்கு விவக்ஷிதம். (25)

यद्विष्णोः परमतमः परोरजोऽग्र्यं मुक्तानामनुविरजं विदीप्रमाहुः ।
तत्पुण्यं पुलिनमिदन्तयाऽद्य मध्येकावेरि, स्फुरति तदीक्षिषीय नित्यम् ॥२६॥

யத் விஷ்ணோ: பதமதம: பரோரஜோऽக்ர்யம் முக்தாநாமநுவிரஜம் விதீப்ரமாஹு:,
தத் புண்யம் புளிநமிதந்தயாத்ய மத்யேகாவேரி ஸ்புரதி ததீக்ஷிஷீய நித்யம். (26)

| | | | |
|---|---|---|---|
| அநுவிரஜம் | — விரஜா ஸமீபத்திலே | புளிநம் | (விரஜாநதியின்) மணற்குன்றான |
| அதம: | — தமோகுணமற்றதும் | அத்ய | — இந்த ஸம்ஸாரதசையிலும் |
| பரோரஜ: | — ரஜோகுணமற்றதும் | இதந்தயா | 'இதம்' என்று ப்ரத்யக்ஷமாகக் காட்டலாம்படியாய் |
| அக்ர்யம் | — ச்ரேஷ்டமுமான | மத்யேகாவேரி | — திருக்காவேரியின் இடையே |
| யத் விஷ்ணோ: பதம் | யாதொரு பரமபதத்தை | ஸ்புரதி | — விளங்காநின்றது; |
| முக்தாநாம் விதீப்ரம் ஆஹு: | முக்தர்களுக்கு விளக்குமதாக (வைதிகர்கள்) சொல்லுகின்றனரோ, | தத் | — அப்படிப்பட்ட இவ்விடத்தை |
| தத் | — அந்த | நித்யம் | — இடைவிடாமல் |
| புண்யம் | — பவித்திரமான | ஈக்ஷிஷீய | கண்டுகொண்டிருக்கக்கடவேன். |

Srivatsam * * *—விரஜா நதியின் கரையிலே, ரஜஸ்தமோ குணங்களுக்கு எட்டாததாய் மிகச்சிறந்ததாய் நித்ய முக்தர்களுக்கு ஸ்வயம் ப்ரகாசமான யாதொரு பரமபத மிருப்பதாக வைதிகர்கள் ஓதுகின்றனரோ, அப்படி பரிசுத்தமான விரஜையினது மணற்குன்றென்னலாம்படியான அந்தப்பரமபதமே இப்போது திருக்காவேரியினிடையே மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கும் விஷயமாய்க்கொண்டு விளங்காநின்றது; இந்த காவேரீ த்வீபத்தை நான் ஸதாபச்யந்தி பண்ணக்கடவேன். ... (26)

त्रय्यन्तप्रहतिमतीषु वैष्णवानां प्राप्यासु प्रचुरभवश्रमापहासु ।
कावेरीपरिचरितासु पावनीषु श्रीरङ्गोपवनतटीषु वर्तिषीय ॥२७॥

த்ரய்யந்தப்ரஹதிமதீஷு வைஷ்ணவாநாம், ப்ராப்யாஸு ப்ரசுரபவச்ரமாபஹாஸு,
காவேரீபரிசரிதாஸு பாவநீஷு ஸ்ரீரங்கோபவநதடீஷு வர்த்திஷீய. (27)

| | | | |
|---|---|---|---|
| த்ரய்யந்தப்ரஹதிமதீஷு | உபய வேதாந்தங்களின் நிரந்தரமான அப்யாஸங்களையுடையவையாயும் | ப்ராப்யாஸு | — புகலிடமாயும் |
| ப்ரசுர- | — ப்ரபலமான | காவேரீ பரிசரிதாஸு | காவிரியாறுது (அலைக்காற்று முதலிய வற்றால்) இஞ்சித் கரிக்கப் பெற்றவையாயுமிருக்கிற |
| பவ ச்ரம- | — ஸம்ஸார தாபங்களை | | |
| அபஹாஸு | — ஆற்றுமவையாயும் | ஸ்ரீரங்க உபவந தடீஷு | சோலைப் புறங்களிலே |
| பாவநீஷு | — பரிசுத்தங்களாயும் | | |
| வைஷ்ணவாநாம்— | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு | வர்த்திஷீய | — வாழக்கடவேன். |

* * *—இது பரமபதமாகில் * ஏதந் ஸாம காயந்நாஸ்தே * என்கிறபடியே இங்கு ஸாமகாநம் நடக்கிறதோ வென்ன, அதற்கொரு குறையில்லை யென்கிறது; [த்ரய்யந்த ப்ரஹதிமதீஷு] ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸாமகோஷம் நித்யமாய்ச் செல்லா நின்றதிங்கு.

http://acharya.org

ப்ரவாஹியாவது இடைவிடாதே ஓதுகை. [வைஷ்ணவாநாம் ப்ராப்யாஸ:] இவ்விடத்து வாழ்ச்சியையே வாழ்ச்சியாகப்பேணிஞர்களிறே ஆழ்வார்கள். ஸ்ரீவைஷ்ணவர்கட்குப் புகலிடம் இதுவாயிருக்கும். [ப்ரசுர பவ ச்ரமாபஹாஸ:] நதீமத்யத்தில் அவகாஹித்தால் தேஹதாபமொன்றே தீரும்; இங்கு தாபத்ரயமும் தீருமிறே. [காவேரீ பரிசரிதாஸ:] திருக்காவேரி தான் தனது அலைக்காற்றுகளாலே சிசிரோபசாரங்கள் செய்யாநிற்குமே. இப்படிப்பட்ட பரமபவித்ரங்களான திருவரங்கத்தின் புறச்சோலைகளிலே வர்த்திக்கக் கடவேனென்றுராயிற்று. ... (27)

स्फुरितशफरदीर्णनालिकेरीगुलुच्छ प्रसृमरमधुकुल्यावर्धितानोकहानि ।
रतिमविरति रङ्गारामरम्यस्थलानि क्रमुकपनसमोचामेचकानि क्रियासुः ॥२८॥

ஸ்புரிதசபரதீர்ண நாளிகேரீகுளுச்ச, ப்ரஸ்ருமரமதுகுல்யாவர்த்திதாநோகஹாநி;
ரதிமவிரதி ரங்காராமரம்யஸ்தலாநி, க்ரமுகபநஸமோசாமேசகாநி க்ரியாஸு: (28)

| | | | |
|---|---|---|---|
| ஸ்புரித சபர தீர்யத் | துள்ளிப்பாய்ந்த மீன்கள்பட்டு உடைத்த | பநஸ | — பலாமரங்களென்ன |
| நாளிகேரீ குளுச்ச | — தென்னங் குலைகளினின்றும் | மோசா | — வாழைமரங்களென்ன |
| | | | (ஆகிய இவற்ருல்) |
| ப்ரஸ்ருமர | — பெருகின | மேசகாநி | — கறுத்திருப்பவையுமான |
| மது | — இளநீர் விஸறந்த | ரங்க ஆராம ரம்ய ஸ்தலாநி | கோயிலைச் சேர்ந்த ஆராமங்களின் அழகிய நிலங்கள் |
| குல்யா | — வாய்க்கால்களினுல் | அவிரதி | - இடைவீடின்றி |
| வர்த்தித | — போஷிக்கப்பட்ட | ரதிம் | - மகிழ்ச்சியை |
| அநோகஹாநி | — மரங்களையுடையனவும் | க்ரியாஸு: | - செய்யக்கடவன. |
| க்ரமுக | — பாக்குமரங்களென்ன | | |

* * *—ஆராமஞ்சூழ்ந்த வரங்கமாகையாலே ஆராமங்களை யநுபவித்துப் பேசுகிறுர். திருக்காவேரியிலுள்ள பெருமீன்கள் துள்ளித்துள்ளி யெழும்பித் தென்னங் குலைகளின்மேற்பாய, அதனுல் காய்கள் உடைந்து இளநீர்கள் பெருகி வாய்க்காலாக ஓட, அதனுல் மரங்கள் செழித்து வளர்கின்றனவாம்; அப்படிப்பட்ட பாக்கு, பலா, வாழை முதலிய மரங்கள் செறிந்து பசுகு பசுகென்றிரா நின்ற திருவரங்கச் சோலைப் புறங்கள் நம்மை மகிழ்விக்கக் கடவன வென்கை. (28)

अधिपरमपदं पुरीमयोध्याम् अमृतवृतामपराजितामुशन्ति ।
पुलिनमुपरि रङ्गराजधानी पिशितदृशामपि सा पुरश्चकास्ति ॥२९॥

அதிபரமபதம் புரீமயோத்யாம் அம்ருதவ்ருதாமபராஜிதாமுசந்தி.
புளிநமுபரி ரங்கராஜதாநீ பிசிதத்ருசாமபி ஸா புரச் சகாஸ்தி. (29)

| | | | |
|---|---|---|---|
| அதிபரமபதம் | - பரமபதத்திலே, | அபராஜிதாம் | 'அபராஜிதா' என்று பெயருடையதாய் |
| அம்ருத வ்ருதாம் | விரஜா தீர்த்தத்தால் சூழப்பட்டதாய் (அல்லது) நித்ய முக்தஸமூஹபரிவ்ருதமாய் | யாம் புரீம் | - யாதொரு பட்டணத்தை |
| அயோத்யாம் | 'அயோத்யா' என்று பெயருடையதாய் | உசந்தி | உள்ளதாக வைதிகர்கள் சொல்லுகிருர்களோ, |
| | | ஸா | - அந்த திவ்ய நகரியானது |

Srivatsam

| | | | |
|---|---|---|---|
| ரங்கராஜதாநீ | - ஸ்ரீரங்கநகரியானது | | |
| புளிநம் உபரி | - காவேரீ ஸைகதத்திலே | புர: | - கண்ணெதிரே |
| பிசிதத்ருசாம் அபி | மாம்ஸக் கண்ணினரான நம் போலியர்க்கும் | சகாஸ்தி | - விளங்குகின்றது. |

* * *—* யோவை தாம் ப்ரஹ்மணோ வேத, அம்ருதேநாவ்ருதாம்புரீம் * என்றும் * தேவாநாம் பூரயோத்யா * புரம் ஹிரண்யமயீம் ப்ரஹ்மா, விவேசாபராஜிதா * என்றும் வேதத்திற் சொல்லுகிறபடியே—அம்ருதமயமான விரஜாதீர்த்தத்தாலே சூழப்பட்டதாயும் 'அயோத்யா, அபராஜிதா' என்னுந் திருநாமங்களை யுடையதாயும் யாதொரு திவ்ய நகரம் பரமபதந்தன்னிலுள்ளதாக வைதிகர்களால் சொல்லப்படுகின்றதோ, அதுதானே இங்கே திருவரங்கமா நகராய்க்கொண்டு திருக்காவிரியின் மணற்குன்றிலே மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களான நம்போலியர்க்கும் கண்ணெதிரே விளங்காநின்றதென்கை. ... ... ... ... (29)

भवपदमपि दिव्यधाम कर्तुं तदुभयतन्त्रित हर्म्यमालिकेव ।
भवनमणितलैर्विजृम्भमाणा जयतितरामिह रङ्गराजधानी ॥३०॥

பவபதமபி திவ்யதாம கர்த்தும் ததுபயதந்த்ரிதஹர்ம்யமாலிகேவ,
Srivatsam
பவநமணிதலைர் விஜ்ரும்பமாணா ஜயதிதராமிஹ ரங்கராஜதாநீ (30)

| | | | |
|---|---|---|---|
| பவபதம் அபி | - ஸம்ஸார மண்டலத்தையும் | பவந மணிதலை: | திருமாளிகைகளின் மணித் தலங்களினால் [ரத்னத் களிழைத்த மேல் தளங் களினால்] |
| திவ்யதாம | - நித்யவிபூதியாக | | |
| கர்த்தும் இவ | - பண்ணுவதற்குப்போல | விஜ்ரும்பமாணா | — வ்ருத்தியடையாநிற்கிற |
| தத் உபய தந்த்ரித | அவ்வுபயவிபூதிகளிலும் ஒருங்கே ஸம்பந்திக்கப் பெற்ற | ரங்கராஜதாநீ | — திருவரங்கமாநகர் |
| | | இஹ | — இவ்விபூதியில் |
| ஹர்ம்ய மாலிகா | மாடமாளிகைத் திரள்களை யுடைத்தாய்க் கொண்டு | ஜயதிதராம் | மிகவும் சீர்மைபெற்றிருக் கின்றது. |

* * *—திருவரங்கத்திலுள்ள திருமாளிகைகளின் மாடங்கள் விண்ணளவும் வீங்கி ஓங்கியிருக்கையாலே, இந்த லீலா விபூதியையும் நித்யவிபூதியாக்குவதற்குப் பரமபதத்தையளாவுகின்றதோ ! என்னும்படி விளங்காநின்றதென்கிறார். (30)

मणिमकररुचीर्वितत्य पाशान् विसृमरकेतुकरैर्मृगं हिमांशोः ।
श्रिय इव नवकेलये जिघृक्षुः सुखयति रङ्गपुरी चकासती नः ॥३१॥

மணிமகரருசீர் விதத்ய பாசாந் விஸ்ருமரகேதுகரைர் ம்ருகம் ஹிமாம்சோ:,
ச்ரிய இவ நவகேளயே ஜிக்ருக்ஷு: ஸுகயதி ரங்கபுரீ சகாஸதீ ந:. (31)

| | | | |
|---|---|---|---|
| மணிமகரருசீ: | ரத்நமயங்களான மகரதோரணங்களின் காந்திகளை | விஸ்ருமரகேது கரை: | மேலேபரவியிருக்கின்றத்வஜங்களாகிறகைகளினால் |
| பாசாந் | — வலைக்கயிறாக | ஹிமாம்சோ: | — சந்திரனுடைய |
| விதத்ய | — பரப்பி, | ம்ருகம் | — மானை |

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| ச்ரிய: | — பெரியபிராட்டியாருடைய | | |
| ஸவ கேளயே | அபூர்வமான விளையாட்டிற்காக | ரங்கபுரீ | — திருவரங்கமாநகர் |
| ஜிக்ருக்ஷு: இவ | — பிடிக்க விரும்பினது போல் | ந: | (சப்தாதி விஷயப்ரவணரான) நம்மையும் |
| சகாஸ்தி | — விளங்காநின்றன்ன | ஸூசயதி | — மகிழ்விக்கின்றது. |

* * *—கோயில் திருவீதிகளில் ரத்நப்ரசுரங்களான மகரதோரணங்கள் கட்டப் பட்டுள்ளன; அவற்றின் கிரணங்கள் கயிறு கயிறாக மேலே திகழ்வதைப் பார்த்தால், ஸ்ரீரங்கபுரியாகிற ஒரு காமினியானவள் மேலே அலைகின்ற த்வஜங்களாகிற கைகளினால் மகரதோரண கிரணங்களாகிற வலைகளை வீசி சந்திரனது மடியிலுள்ள மான் குட்டியைப் பெரிய பிராட்டியாரின் லீலார்த்தமாகப் பிடிக்க விரும்புகின்றனளோ! என்னலாம்படி யிருக்கின்றதாம்.

சந்திரமண்டலத்தினிடையே கறுத்துத் தோன்றுவதை மான்குட்டியென்று சிலரும் மற்றும் பலர் பலவிதமாக உல்லேகிப்பதுண்டு; மான்குட்டியென்கிற ஸமாதி இங்குக்கொள்ளப்பட்டது. "ஸூசயது" என்றபாடம் மிகவழங்கும். (31)

जनपदसरिदन्तरीपपुष्यत् पुरपरिपालननित्यजागरूकान् ।
प्रहरणपरिवारवाहनाढ्यान् कुमुदमुखान् गणनायकान्नमामि ॥३२॥

ஜநபதஸரிதந்தரீபபுஷ்யத் புரபரிபாலநநித்யஜாகரூகாந்,
ப்ரஹரணபரிவாரவாஹநாட்யாந் குமுதமுகாந் கணநாயகாந் நமாமி. (32)

| | | | |
|---|---|---|---|
| ஜநபத | ஜநங்களுக்கு வாஸஸ்தானமாய்க்கொண்டு | ப்ரஹரண | — ஆயுதங்களோடும் |
| ஸரித் அந்தரீப | — காவேரீத்வீபத்திலே | பரிவார | — பரிஜனங்களோடும் |
| புஷ்யத் | — வளர்கின்ற | வாஹந | — வாஹநங்களோடும் |
| புர | — ஸ்ரீரங்கநகரத்தை | ஆட்யாந் | — கூடினவர்களாயுமிருக்கிற |
| பரிபாலந | — காப்பதில் | குமுதமுகாந் | — குமுதன்முதலிய |
| நித்ய ஜாகரூகாந் | இடைவிடாத நோக்கமுடையவர்களாயும் | கணநாயகாந் | — கணநாதர்களை |
| | | நமாமி | — வணங்குகிறேன் |

* * *—நகரபரிபாலகர்களான குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், ஸர்ப்பநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டிதன் என்னும் கணாதிபதிகளை வணங்கும் முகத்தாலே அவர்களுடைய நியமனம் பெறுகிறார். அவர்களை ஆயுதங்களோடும் பரிஜனங்களோடும் வாஹனங்களோடுங்கூட வணங்கினராயிற்று. (32)

अहतसहजदास्यास्सूरयः स्रस्तबन्धाः विमलचरमदेहा इत्यमी रङ्गधाम ।
महितमनुजतिर्यक्स्थावरत्वाः श्रयन्ते सुनियतमिति ह स्म प्राहुरेभ्यो नमः स्तात् ॥३३॥

அஹதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா:
விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம,
மஹிதமநுஜதிர்யக்ஸ்தாவரத்வா: ச்ரயந்தே
ஸுநியதமிதி ஹஸ்ம ப்ராஹுரேப்யோ நமஸ் ஸ்தாத்.

Srivatsan

http://acharya.org

Residents etc of Srirangam =

அஸ்ருத ஸஹஜ தாஸ்யா: — இயற்கையான சேஷத்வம் குன்றாத
ஸூரய: — நித்யஸூரிகளும்,
ஸ்ரஸ்த பந்தா: — ஸம்ஸாரபந்தம் கழலப்பெற்ற முக்தர்களும்
விமல சரம தேஹா: — பாவங்களெல்லாம் தொலைந்து 'இனிமேல் தேஹஸம்பந்தமில்லை' யென்னலாம்படி முடிவான தேஹமுடையவர்களான முமுக்ஷுக்களும்
இதி அமீ — ஆகிய இவர்கள்

மனுஜ - மனுஜ திர்யக் ஸ்தாவராத்மனா — மானிடப்பிறவியையும் பசு பக்ஷிப் பிறவியையும் ஸ்தாவரப்பிறவியையும் உடையவர்களாய்க் கொண்டு
ரங்கதாம — ஶ்ரீரங்கத்தை
ஸந்ததம் — எப்போதும்
ச்ரயந்தே — பற்றியிருக்கிறார்கள்
இதிஹ ப்ராஹு: ஸ்ம — என்று பௌராணிகர்கள் சொல்லி வைத்தார்கள்;
தேப்ய: — இப்படிப்பட்ட மநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களின் பொருட்டு
நம: — நமஸ்காரம்
ஸ்தாத் — ஆகுக.

* * *— கோயிலிலுள்ள மநுஷ்யர்களையும் பசு பக்ஷிகளையும் கல்மரம் முதலியவற்றையும் ஸாமாந்யமாக அந்தந்த வஸ்துக்களாகவே பெரியோர் பிரதிபத்தி பண்ண மாட்டார்கள்; நித்யஸூரிகளும் முக்தர்களும் முமுக்ஷுக்களும் இங்ஙனே மநுஷ்யதிர்யக் ஸ்தாவரங்களாக வடிவெடுத்து வாழ்வதாகவே ப்ரதிபத்தி பண்ணுவார்கள். அங்ஙனமே இவரும் ப்ரதிபத்தி பண்ணித் திருவரங்கத்திலுள்ள ஸ்தாவர ஜங்கமப்பொருள்களையெல்லாம் வணங்குகிறாரிதில்.

நான்காமடியில் "இதி யே ஸ்ம ப்ராஹு:" என்ற பாடம் பெரும்பான்மையாக வழங்கும்; ஸம்ஸ்க்ருதவ்யாக்யாதாவும் அப்பாடத்தை ஆதரித்தார். "நித்யமுக்த முமுக்ஷுக்களே கோயிலில் ஸ்தாவரஜங்கமங்களாக வடிவெடுத்திருப்பதாய் யார் சொன்னார்களோ அவர்களுக்கு நமஸ்காரம்" என்று அப்போது பொருளாகும்.

"இதிஹஸ்ம ப்ராஹு:" என்ற பாடமே கற்றுணர்ந்த பெரியோர் ஸம்ப்ரதாயமாக அநுஸந்திப்பதாகும். இதிஹ—ஒரு முழுச் சொல்லான அவ்யயம்; ஐதிஹ்யமென்ற சொல் இதில் நின்றும் பிறந்ததாகும்.

நித்யஸூரிகள் ஒருநாளும் ஸம்ஸாரப்பற்று இன்றியே இயற்கையான கைங்கரியம் குன்றாதவர்களாதலால் 'அஸ்ருத ஸஹஜதாஸ்யா:' எனப்பட்டனர். முக்தரென்பார்-சில நாள் வரையில் ஸம்ஸாரபந்தமுள்ளவர்களாயிருந்து பிறகு அது கழலப்பெற்றவர்களாதலால் 'ஸ்ரஸ்தபந்தா:' எனப்பட்டனர். முமுக்ஷுக்களென்பார்- கீழ்க்கழிந்த காலங்களில் பலபல யோனிகளில் சரீர ஸம்பந்தம் பெற்றிருந்தாலும் 'இனி இவர்களுக்கு ஸம்ஸாரபந்த ப்ரஸக்தியில்லை' என்னும்படியாக வுள்ளவராதலால் 'விமலசரம தேஹா:' எனப்பட்டனர். ஸந்ததம்—திண்ணம் என்றுமாம். (33)

**श्रीरङ्गदिव्यभवनं भुवि गोपुराणाम् प्राकारितेन निकरेण गरुत्मतेव।**
**पार्श्वप्रसारितपतत्रपुटेन भक्त्या नानातनूर्भिरुपगूढमुपाश्रयामः ॥३४॥**

**ஶ்ரீரங்கதிவ்யபவநம் புவி கோபுராணாம் ப்ராகாரிதேந நிகரேண கருத்மதேவ,**
**பார்ச்வப்ரஸாரிதபதத்ரபுடேந பக்த்யா நாநாதநூபிருபகூடமுபாச்ரயாம:, (34)**

Srivatsam

| | | | |
|---|---|---|---|
| ப்ராகாரிதேந | (இருபக்கங்களிலும்) திரு மதிள்களைக் கொண்டிருக்கிற | பக்த்யா | — பக்தியோடு |
| கோபுராணாம் மிஷேண | கோபுரங்களின் வ்யாஜத்திலே | புவி | — பூலோகத்தில் |
| (சூழப்பட்டிருப்பதைப் பார்த்தால்) | | நாநாதநுரபி: | — பலவடிவுகளைக் கொண்டு |
| பார்ச்வ ப்ரஸாரித பதத்ர புடேந | இரண்டுபக்கங்களிலும் விரிக்கப்பட்ட சிறகுகளையுடைய | உபகூடம் இவ ஸ்திதம் | மறைத்துக் காக்கப்பட்டது போன்றுள்ள |
| கருத்மதா | — பெரிய திருவடியினால் | ஸ்ரீரங்க திவ்ய பவநம் | திருவரங்கம் பெரிய கோயிலை |
| | | உபக்நயாம: | பற்றுக்கோடாகக் கொள்ளுகிறோம். |

* * *—கீழ்ச்லோகத்தி லருளிச்செய்ததை ஒருவாறு மூதலிக்கிறாரிதில். நித்ய ஸூரிகளில் தலைவனை பெரிய திருவடி தான் பல வடிவுகள் கொண்டு திருக்கோபுரங்களாகவும் திருமதிள்களாகவும் கோயிலைக் காத்துக்கொண்டிருப்பதாக அருளிச் செய்கிறார். * ஸ ஏகதா பவதி த்விதா பவதி த்ரிதா பவதி * என்று உபநிஷத்தில் ஓதியிருக்கிறபடியே நித்ய ஸூரிகள் கைங்கர்யார்த்தமாகப் பல வடிவுகள் கொள்ள சக்தியுடையராதலால் 'நாநாதநுரபி:' என்றார். கோயிலில் பல திருக்கோபுரங்களுள்ளது பற்றி இங்ஙனே சொல்லப்பட்டது. ஒவ்வொரு கோபுரத்தின் இரண்டு பக்கங்களிலும் திருமதில்கள் பரம்பியிருப்பதைப் பார்த்தால் பெரிய திருவடி தனது சிறைகளைப் பரப்பிக்கொண்டிருப்பதாகச் சொல்லத்தகும். (கோபுரம்—கருடன்; மதில்—சிறகு.)

உபக்நயாம:= கொடிக்கு ஆதாரமாக நாட்டப்படும் கொள்கொம்பு 'உபக்நம்' எனப்படும்; இங்கு, ஆச்ரயமாகக் கொள்ளுகிறோமென்றவாறு. (34)

प्राकार मध्याजिरमण्डपोक्त्या सद्वीपरत्नाकररत्नशैला ।
सर्वंसहा रङ्गविमानसेवाम् प्राप्तेव तन्मन्दिरमाविरस्ति ॥३५॥

ப்ராகாரமத்யாஜிரமண்டபோக்த்யா ஸத்வீபரத்நாகரரத்நசைலா,
ஸர்வம்ஸஹா ரங்கவிமாநஸேவாம் ப்ராப்தேவ தந்மந்திரமாவிரஸ்தி, (35)

| | | | |
|---|---|---|---|
| (யத்ர) | யாதொரு ஸ்ரீரங்க மந்திரத்தில் | ஸர்வம்ஸஹா | — பூமிப் பிராட்டியானவள் |
| ப்ராகார மத்ய அஜிர மண்டப உக்த்யா | திருமதில்களை, இடைகழி, திரு மண்டபங்களென்னும் வியாஜத்தினால் | ரங்கவிமாந ஸேவாம் | ஸ்ரீரங்கவிமான ஸேவையை |
| ஸத்வீப ரத்நாகர ரத்நசைலா | ஸப்தத்வீபங்களோடும் ஸப்த ஸாகரங்களோடும் மஹா மேருவோடுங்கூடின | ப்ராப்தா இவ | — அடைந்தவள் போலும்; |
| | | தத் மந்திரம் | — அந்த ஸ்ரீரங்கமந்திரம் |
| | | ஆவிரஸ்தி | கண்ணுக்கு நேரே காட்சிதருகின்றது. |

* * *—ஸ்ரீரங்கமந்திரம் பூமிப்பிராட்டி போன்றிருக்கிறதென்கிறார். ஸ்ரீரங்கவிமானத்தை ஸேவிப்பதற்காகப் பூமிப்பிராட்டி தன் பரிவாரங்களோடு இங்கு வந்து சேர்ந்திருக்கிறது போலும். கடல்களும் கடலிடைத்தீவுகளும் சிறந்த மலைகளும் பூமிப்பிராட்டியின் பரிவாரங்களாம். கோயிலைச் சுற்றி ஸப்தப்ராகாரங்கள் இருப்பது ஸப்த ஸாகரங்களென்கிறது; ஒவ்வொரு திருமதிலுக்கும் இடையிலுள்ள அவகாசம் ஸப்த த்வீபங்கள் போலும். திரு மண்டபங்கள் பர்வதங்கள் போலும். ஆக இப்படி

Srivatsam
http://acharya.org

வாரங்களுடனே பூமிப்பிராட்டி வந்து சேர்ந்து ஸ்ரீரங்க விமானஸேவையைப் பெற்றிருப்பதுபோல் மந்திரம் தோன்றுகின்றதென்றாராயிற்று.

திருமதிள்களை ஸமுத்ரமாக ரூபணம் செய்வது நாற்புறமும் சூழ்ந்திருப்பது பற்றி. இங்கு ப்ராகாரஸ்தாநத்தில் ஸமுத்ரத்தை வைத்து உரைத்தால் யதாக்ரமமாக அந்வயம் தட்டுகின்றதே யென்று சங்கிக்கவேண்டா; அங்ஙனே நிர்ப்பந்தமில்லையிறே. 'ஏகாநேகஸ்வரூபாய ஸ்தூலஸூக்ஷ்மாத்மநே நம:' (1—2—3) என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும் "த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகது:க்கங்கள்" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலும் பிறவிடங்களிலும் பிரயோகங்கள் காண்க. (35)

जित बाह्यजिनादिमणिप्रतिमा अपि वैदिकयन्निव रङ्गपुरे।
मणिमण्डपवप्रगणान् विदधे परकालकविः प्रणमेमहि तान् ॥३६॥

ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா: அபி வைதிகயந்நிவ ரங்கபுரே,
மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந். ... (36)

| | | | |
|---|---|---|---|
| பரகால கவி: | — திருமங்கைமன்னன், | ரங்கபுரே | — திருவரங்கமாநகரில் |
| ஜித பாஹ்ய ஜிந ஆதி மணிப்ரதிமா: அபி | (தம்மால்) ஜயிக்கப் பட்ட வேத பாஹ்யர்களான ஜைநர் முதலானவர்களின் ஸ்வர்ண விக்ரஹங்களையும் | மணி மண்டப வப்ர கணாந் | சிறந்த திருமண்டபங்களையும் திரு மதிள்களையும் |
| வைதிகயந் இவ | வைதிகங்களாகச் செய்பவர் போன்று | விததே | — நிர்மாணம் செய்தார்; |
| | | தாந் | — அந்த மண்டப ப்ராகாரங்களை |
| | | ப்ரணமேமஹி | — வணங்கக்கடவோம். |

•••—ஆழ்வார்களுடைய திருவவதாரம் அவைதிகர்களையும் வைதிகர்களாக்குவதற்காக; திருமங்கையாழ்வாருடைய திருவவதாரத்தினால் இவ்வர்த்தம் நன்கு விளங்கும். அவைதிகங்களான ஜைந பௌத்த விக்ரஹங்களையும் இவர் வைதிகங்களாக ஆக்கிவிட்டார். பகவத் பகாவத விஷயத்தில் கிஞ்சித்கரிக்கப்பெறுவதே வைதிகத்வமாகும். (இங்கு உணரவேண்டிய வரலாறு:) திருமங்கையாழ்வார் திவ்ய தேசயாத்ரையாக எழுந்தருளும்படைவிலே திருவரங்கத்தைச்சேர்ந்து நம்பெருமாள் பக்கலிலே மிக்க ஈடுபாடுகொண்டு பல பதிகங்கள்பாட, அதுகேட்டுத் 'திருவுள்ளமுவந்து அப்பெருமான் திருமுகமலர்ச்சியோடு ஆழ்வாரைக் குளிரநோக்கி 'நமக்கு விமானம் மண்டபம் கோபுரம் பிராகாரம் முதலிய கைங்கரியங்களைச் செய்யும்' என்று கட்டளையிட்டருள, ஆழ்வார் அவ்வாணையைச் சிரமேல் தாங்கி அங்ஙனமே திருப்பணி புரியவிரும்பித் தமக்கு அந்தரங்கரான மந்திரிகள் நால்வரையும் அழைத்து ரஹஸ்யமாகவிருந்து 'ஸ்ரீரங்கநாதனுக்குத் திருமதிள் திருமண்டபங்கள் தொடக்கமான கைங்கர்யங்களைப் பண்ணுதற்குப் பொருளீட்டுமாறு என்ன உபாயம் செய்யலாவது?' என்று ஆலோசிக்கிறவளவிலே, மந்திரிகள் 'நாகப்பட்டினத்தில் பொன்மயமானதொரு புத்த விக்ரஹம் பௌத்தர்களால் அமைக்கப்பட்டதோராலயத்தில் அவர்கள் கொண்டாட்டத்துக்கு இலக்காயுள்ளது: அதனைக் களவாடிக்கொண்டு வந்திடுவோமாயின் பல திருப்பணிகளையும் நடத்தி முடிக்கச் சிறிதும் பொருட்குறைபாடு இராது' என்று உபாயங்கூறவே ஆழ்வார் அங்ஙனமே வெகு தந்திரமாக அவ்விக்ரஹத்தை அபஹரித்து உருக்கி அந்தப் பொன்னை விலைப்படுத்திப் பெற்ற பொருளால் பல திருப்பணிகளை நிறைவேற்றியருளினர் என்பதாம்.

Srivatsam
http://acharya.org

இங்கு "மணிப்ரதிமா:" என்று பஹுவசநப்ரயோகம் பண்ணியிருப்பதால், மற்றும்பல பாஹ்யர்களுடைய ஸ்வர்ணவிக்ரஹங்களையும் இங்ஙனே அபஹரித்துத் திருப்பணியிலே அந்வயிப்பித்தருளினமை அறியலாகிறது.

வைதிகயந் இவ = திருமதில் திருமண்டபம் முதலியவற்றில் திருவாழி திருச்சங்கு திருமண்காப்பு முதலிய வைதிக லக்ஷணங்கள் அமைக்கப்பட்டிருத்தலால் அவைதிகங்களுக்கும் ஒருவாறு வைதிகத்வத்தை உண்டாக்கினர் போலும் ஆழ்வார்; அப்படிப்பட்ட ஆழ்வாருடைய திருப்பணிகளான மணிமண்டபங்களையும் திருமதிள்களையும் தொழுவோமென்றாராயிற்று. (36)

स्मेराननाक्षिकमलैर्नमतः पुनानान् दंष्ट्रागदाभ्रुकुटिभिर्द्विषतो धुनानान् ।
चण्डप्रचण्डमुखतः प्रणमामि, रङ्ग द्वारावलीषु चतसृष्वधिकारभाजः ॥३७॥

ஸ்மேராநநாக்ஷிகமலைர் நமத: புநாநாந்
தம்ஷ்ட்ராகதாப்ருகுடிபிர் த்விஷதோ துநாநாந்,
சண்டப்ரசண்டமுகத: ப்ரணமாமி-ரங்க
த்வாராவளீஷு சதஸ்ருஷ்வதிகாரபாஜ: (37)

| | | | |
|---|---|---|---|
| ஸ்மேர ஆநந அக்ஷிகமலை: | விகஸித்த தாமரைபோன்ற முகங்களினாலும் கண்களினாலும் | சதஸ்ருஷு ரங்கத்வார ஆவளீஷு | கோயில் திருவாசல்கள் நான்கிலும் |
| நமத: புநாநாந் | ஆச்ரிதர்களைப் புனிதராக்குகின்றவர்களும், | அதிகாரபாஜ: | திருவாசல்காக்கு முதிகாரம் பெற்றவர்களுமான |
| தம்ஷ்ட்ராகதா ப்ருகுடிபி: | கோரப்பற்கள் தடிகள் புருவ நெரிப்பு ஆகிய இவற்றாலே | சண்ட ப்ரசண்ட முகத: | சண்டன் ப்ரசண்டன் முதலான த்வாரபாலகர்களை |
| த்விஷத: | — பகவத் பாகவதவிரோதிகளை | ப்ரணமாமி | — வணங்குகிறேன். |
| துநாநாந் | — நடுங்கச்செய்பவர்களும் | | |

* * *--ஸ்ரீரங்கமந்திரத்தின் கீழ்வாசலில் சண்டப்ரசண்டர்களும், தெற்குவாசலில் பத்ரஸுபத்ரர்களும், மேலைவாசலில் ஜயவிஜயர்களும், வடக்கு வாசலில் தாத்ருவிதாத்ருக்களும் த்வார பாலகர்களாக இருந்துகொண்டிருப்பதால் அவர்களுடைய நியமநம் பெற்றே உள்ளே புகவேணுமென்பதுபற்றி அந்தத் திருவாசல் காக்கும் முதலிகளைத் தொழுகிறார். இவர்கள் பாகவதர்கட்கு அநுகூலராகவும், பகவத்பாகவத விரோதிகளுக்கு ப்ரதிகூலராகவும் இருப்பர். புன்முறுவல்கொண்ட முகத்தையும் திருக்கண்களையுங் காட்டி அன்பர்களைப் புனிதராக்குவர்; கோரப்பற்களையும் தடிகளையும் புருவநெறிப்பையுங்கொண்டு ப்ரதிகூலர்க்கு பயங்கரராயிருப்பர்; இப்படிப்பட்ட திருவாசல்காக்கும் முதலிகளைத் தெண்டனிடுகின்றேனென்றாராயிற்று.

இங்கே கோபுரவாசற் காவலர்களான சண்ட ப்ரசண்டர்களை முன்னிட்டு அருளிச்செய்கையாலே கோபுரவாசலால் இவர் உள்ளே புகுந்தருள்கின்றமை விளங்கும்; அடுத்த ச்லோகத்தில் ஆயிரக்கால் மண்டபத்தை மங்களாசாஸநம் செய்வதாலும் கோபுரவாசலால் உள்புகுமவர்க்கே அத்திருமண்டபம் முந்துறத் தென்படுமாதலாலும் என்றுணர்க. (37)

Srivatsam
http://acharya.org

सर्वात्मसाधारणनाथगोष्ठीपूरेऽपि दुष्पूरमहावकाशम् ।
आस्थानमानन्दमयं सहस्रस्थूणादिनाम्नातमवाप्नवानि ॥३८॥

ஸர்வாத்மஸாதாரண நாதகோஷ்டீ பூரேபி துஷ்பூரமஹாவகாசம்,
ஆஸ்தாநமாநந்தமயம் ஸஹஸ்ர ஸ்தூணாதிநாம்நாதமவாப்நவாநி. (38)

| | | | |
|---|---|---|---|
| ஸர்வ ஆத்ம ஸாதாரண நாத கோஷ்டீ பூரே அபி | ஆத்மாக்களனைவர்க்கும் பொதுவான ஸ்ரீரங்கநாதனுடைய கோஷ்டியாலே நிரப்பப்பார்த்தாலும் | ஆம்நாதம் | — ஓதப்பட்டதும் |
| துஷ்பூர மஹா அவகாசம் | நிரப்பமுடியாத மிகுந்த அவகாசத்தையுடையதும் | ஆநந்தமயம் | ஆனந்தமே வடிவெடுத்ததுமான |
| ஸஹஸ்ரஸ்தூணாதிநா | 'ஸஹஸ்ரஸ்தூணே' என்கிற பதத்தை ஆதியிலே உடைய உபநிஷத் வாக்கியத்தினால் | ஆஸ்தாநம் | திருமண்டபத்தை [ஆயிரக்கால் மண்டபத்தை] |
| | | அவாப்நவானி | — அடையக்கடவேன். |

* * *—கீழே பல ச்லோகங்களால் ஸாக்ஷாத் ஸ்ரீவைகுண்டமே ஸ்ரீரங்கமாயிருக்கின்றதென்றும் அங்குள்ள விரஜாநதியே திருக்காவேரியாய்ப் பெருகுகின்றதென்றும் அங்குள்ள நித்யமுக்தர்களே இங்கு ஜங்கமஸ்தாவர வஸ்துக்களாக வடிவெடுத்திருக்கின்றனரென்றும் அநுஸந்தித்ததுபோலே, அங்குள்ள திருமாமணி மண்டபமே இங்கு வந்து விளங்குகின்றதென்று ஆயிரக்கால் மண்டபத்தைத் திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார்.

இந்த ச்லோகத்தின் நான்காவது பாதத்தில் நெடுநாளாகவே ஒரு பாடப்பிழை உண்டு; "ஸஹஸ்ரஸ்தூணைதிநாம்நா ததவாப்நவாநி" என்கிற பாடம் ப்ராயேண வழங்கி வருகின்றது. அப்படியே வியாக்கியானமும் செய்திருக்கக் காண்கிறோம். அது ப்ராமாதிகமென்று உபேக்ஷிக்கத்தக்கது. தேசிகன் பணித்த ரஹஸ்யத்ரய ஸாரத்தில் உபோத்காதாதிகாரத்தில்— "கலங்காப்பெருநகரிலே ஸஹஸ்ர ஸ்தூணாதி வாக்யங்களாலே ஓதப்படுகிற திருமாமணிமண்டபத்திலே" என்றுள்ள வாக்கியம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. * ஸஹஸ்ர ஸ்தூணே விததே த்ருட உக்ரே யத்ர தேவாநாம் அதிதேவ ஆஸ்தே * என்கிற (தவல்கார) உபநிஷத்வாக்யமே ஸஹஸ்ரஸ்தூணாதி வாக்யமாகும். 'ஆயிரம் தூண்களையுடையதும் விஸ்தாரமுடையதும் உறுதியுடையதும் கண்கொண்டு பார்க்கமுடியாததுமான திருமண்டபத்தில் தேவாதிதேவன் வீற்றிருக்கின்றான்' என்பது அந்த வேதவாக்யத்தின் பொருள். ஆகவே, [ஸஹஸ்ரஸ்தூணாதிநா] ஸஹஸ்ரஸ்தூணபதத்தை ஆதியிலே உடைத்தான வேதவாக்யத்தினால் [ஆம்நாதம்] ஓதப்பட்டதான, என்று சீரிய பொருள்கொள்வதற்குப் பாங்கான பாடமே பட்டர் திருவுள்ளத்திற்கு இசைந்ததாம். 'ஆயிரக்கால் மண்டபம்' என்கிற வழக்கச்சொல்லில் 'ஆயிரக்கால்' என்பது ஆதியிலே இருப்பதால் அதனை ஆதியாகவுடைத்தான சப்தத்தினால், ஆம்நாதம்—வ்யவஹரிக்கப்பட்டு வருகின்ற, என்கிற, பொருளும் தோன்றுமாறு அருளிச்செய்யப்பட்டுள்ளது. ஸ்தோத்ர ரத்நத்தில் "தயா ஸஹாஸீநம்" (39) என்னும் ச்லோகத்திற்கு பாஷ்யமிடாநின்ற தேசிகன் "ஸஹஸ்ரஸ்தூணே" இத்யாதி தவல்கார ச்ருதி வாக்யத்தை உதாஹரித்து, இந்த ச்ருதியை பட்டர் * ஸர்வாத்ம ஸாதாரண* இத்யாதி ச்லோகத்தில் எடுத்துக் காட்டியுள்ளாரென்று அருளிச்செய்தார். 'ஆம்

Srivatsam
http://acharya.org

நாதம்' என்கிற பாடமிருந்தாலொழிய இந்த ஸ்தோத்ர பாஷ்யவாக்கியம் பொருந்தவே மாட்டாது.

இத்திருமண்டபத்தின் வாசாமகோசரமான விஸ்தாரத்தைப் பூர்வார்த்தத்தாலருளிச்செய்கிருர். "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்ய மதிதைவதம்" என்கிறபடியே ஸகலாத்மாக்களுக்கும் பொதுவான திருமாலின் திருவோலக்கமடங்கலும் புகுந்தாலும் அவகாசம் மிகுந்திருக்குமென்கை. திருநாட்டிலுள்ள திருமாமணி மண்டபத்திற்கு இட்ட இவ்விசேஷணம் நம்பெருமாள் ஸந்நிதியிலுள்ள ப்ரத்ருதமான ஆயிரக்கால் மண்டபத்திற்கும் பொருந்தியதே. பெரிய திருவத்யயநத்திருநாளிலே எண்டிசையிலுமுள்ளாரும் வந்து புகுந்தாலும் அவகாசம் மிக்கிருக்குமிறே. (38)

विहरति हरौ लक्ष्म्या लीलातपत्रपरिष्क्रियाविनिमयविधासूनासूनिक्रियासफलोत्पलाम् ।
अथ मुनिमनःपद्मेष्वब्जासहायविहारजश्रमहरतटीं यामस्तामैन्दवीमरविन्दिनीम् ॥३९॥

விஹரதி ஹரௌ லக்ஷ்ம்யா லீலாதபத்ரபரிஷ்க்ரியா-
விநிமயவிதாஸூநாஸூநிக்ரியாஸபலோத்பலாம்,
அத முநிமந:பத்மேஷ்வப்ஜாஸஹாயவிஹாரஜ-
ச்ரமஹரதடீம் யாமஸ் தாமைந்தவீமரவிந்திநீம். (39)

- ஹரௌ — ஸ்ரீரங்கநாதன்
- லக்ஷ்ம்யா ஸஹ — பிராட்டியோடுகூட
- விஹரதி ஸதி — ஜலக்ரீடை பண்ணுமளவில்
- லீலா ஆதபத்ர- — லீலார்த்தமான குடையாக இருப்பதனாலும்
- பரிஷ்க்ரியா- — கர்ணபூஷணம் முதலான அலங்காரங்களாக இருப்பதனாலும்
- விநிமயவிதா- — ஒருவர்க்கொருவர் மாற்றிக் கொள்வதற்கு உறுப்பாயிருப்பதனாலும்
- ஸூநாஸூநிக்ரியா — புஷ்பயுத்தம் பண்ணுவதற்கு உறுப்பாயிருப்பதனாலும்
- ஸபல- — ஸாபல்யமடைந்த
- உத்பலாம் — நெய்தல் மலர்களையுடைத்தாய்
- அத — அன்றியும்,
- முநி மந: பத்மேஷு — மஹர்ஷிகளின் ஹ்ருதய புண்டரீகங்களில்
- அப்ஜா ஸஹாய விஹாரஜ — பிராட்டியோடு கூடினவனுய்க் கொண்டு விளையாடினதாலுண்டான விடாயைத்
- ச்ரமஹர தடீம் — தீர்க்கவல்ல கரையையுடைத்தான
- தாம் — அப்படிப்பட்ட
- ஐந்தவீம் அரவிந்திநீம் — சந்த்ர புஷ்கரிணியை
- யாம: — அடைகிறோம்.

...—இரண்டு ச்லோகங்களால் சந்த்ர புஷ்கரிணியைப் போற்றுகிறார்.

சந்த்ர புஷ்கரிணியில் நெய்தல் புஷ்பங்கள் விசேஷமாக இருக்கின்றன; அவை ஸ்ரீரங்கநாதனுக்கும் ஸ்ரீரங்கநாயகிக்கும் பலபடிகளாலும் உபயோகப்பட்டு ஸபலங்களாகின்றன; எங்ஙனே யென்னில், திவ்ய தம்பதிகளிருவரும் இதில் ஜலக்ரீடை பண்ணும்போது சில புஷ்பங்கள் விளையாட்டுக் குடைகளாக அமைகின்றன; சில புஷ்பங்கள் சிரோபூஷணமாகவும் கர்ணபூஷணமாகவும் அமைகின்றன; சில புஷ்பங்கள் பரஸ்பரம் மாற்றல் விளையாடலுக்கு உதவுகின்றன; சில புஷ்பங்கள் ப்ரணய ரோஷத்தாலே இவர்கள் செய்துகொள்ளும் புஷ்பயுத்தத்திற்கு உதவுகின்றன; ஆக இங்ஙனே பல படிகளாலும் திவ்யதம்பதிகளுடைய திருவிளையாடல்களுக்கு உபகரணமாக அமைந்து ஸாபல்யம் பெற்ற நெய்தல் மலர்கள் நிறையப்பெற்றதாம் இப்புஷ்கரிணி.

Srivatsam

http://acharya.org

இன்னமும் எப்படிப்பட்டதென்னில்; "போதிற் கமலவன் னெஞ்சம்" என்று சொல்லுகிற பக்தர்களின் ஹ்ருதய புண்டரீகங்களில் பிராட்டியுந் தானுமாக விற்றிருக்கு மெம்பிரானுக்கு வெகு ஸௌக்யமான அவ்விடத்தில் நெருக்குண்டிருந்ததனாலுண்டான ச்ரமத்தை ஆற்றவற்றான துறையையுடையதுமா யிராநின்றது. இப்படிப்பட்ட சந்திர புஷ்கரிணியை அணுகுகிறோமென்றாயிற்று. (39)

तापत्रयीमैन्दवपुष्करिण्याम् निमज्ज्य निर्वापयिताऽस्मि यस्याः ।
अभ्यासतोऽपामघमर्षणीनाम् चन्द्रस्सुधादीधितितामवाप ॥४०॥

தாபத்ரயீமைந்தவபுஷ்கரிண்யாம் நிமஜ்ஜ்ய நிர்வாபயிதாஸ்மி யஸ்யா:,
அப்யாஸதோபாமகமர்ஷணீநாம் சந்த்ரஸ் ஸுதாதீதிதிதாமவாப. (40)

| | | | |
|---|---|---|---|
| சந்த்ர: | — சந்திரன், | அவாப | — அடைந்தானே, |
| யஸ்யா: | யாதொரு சந்த்ர புஷ்கரிணியினுடைய | (தஸ்யாம்) | — அந்த |
| அகமர்ஷணீநாம் அபாம் | பாபஹரமான தீர்த்தத்தினுடைய | ஐந்தவபுஷ்கரிண்யாம் | சந்த்ரபுஷ்கரிணியில் |
| அப்யாஸத: | — பரிசயாதிசயத்தினாலே | நிமஜ்ஜ்ய | — குடைந்து நீராடி |
| ஸுதாதீதிதி தாம் | — அம்ருத கிரணனாகுகையை | தாபத்ரயீம் | — தாபத்ரயத்தை |
| | | நிர்வாபயிதாஸ்மி | — தணித்துக்கொள்வேன் |

Srivatsam

* * *—இந்த ச்லோகமும் சந்த்ர புஷ்கரிணீ விஷயம். சந்த்ர புஷ்கரிணியில் குடைந்து நீராடி, ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் எனப்படுகிற தாபத்ரயத்தையும் தணித்துக்கொள்வேன்; சந்திரன் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டு இதில் நெடுங்காலம் ஸ்நாநஞ்செய்து தனது பாவங்கள் தீரப்பெற்று அம்ருதகிரணனாயினன் என்னும்படியான பெருமைவாய்ந்ததன்றோ இப்புஷ்கரிணி.

ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கிப்படைத்த தாபங்களையெல்லாம் இப்புஷ்கரிணியில் மூழ்கித் தொலைத்திடக்கடவேனென்றாராயிற்று. (40)

पूर्वेण तां तद्वदुदारनिम्न प्रसन्नशीताशयमग्ननाथाः ।
पराङ्कुशाद्याः प्रथमे पुमांसः निषेदिवांसो दश मां दयेरन् ॥४१॥

பூர்வேண தாம் தத்வதுதார நிம்ந ப்ரஸந்நசீதாசயமக்நநாதா:,
பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸ: நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந். (41)

| | | | |
|---|---|---|---|
| தாம் பூர்வேண | அந்த சந்த்ரபுஷ்கரிணிக்குக் கிழக்கே | பராங்குச ஆத்யா: | — நம்மாழ்வார் முதலான |
| நிஷேதிவாம்ஸ: | — எழுந்தருளியிருப்பவர்களாய் | தச ப்ரதமே புமாம்ஸ: | ஆழ்வார்கள் பதின்மரும் |
| தத்வத் | — அந்த புஷ்கரிணிபோலவே | மாம் தயேரந் | அடியேன் மீது க்ருபைபண்ணக்கடவர்கள். |
| உதார நிம்ந ப்ரஸந்ந சீத ஆசய மக்ந நாதா: | உதாரமும் கம்பீரமும் தெளிந்ததும் குளிர்ந்ததுமான ஹ்ருதயத்தில் அமர்ந்த எம்பெருமானை யுடையவர்களாய் | | |

* * *—எம்பெருமானை அநவரதம் தியானித்துக்கொண்டு சந்த்ரபுஷ்கரிணியின் கீழ்க்கரையில் எழுந்தருளியிருக்கிற நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும்

http://acharya.org

அடியேன்மீது இரங்கியருளவேணுமென்கிறார். ஆழ்வார்கட்கும் சந்த்ரபுஷ்கரிணிக்கும் அழகாக ஒப்பச்சொல்லுகிறார் முன்னடிகளில் [உதாரநிம்ந ப்ரஸந்ந சீதாசய மந்நநாதா:] ஆசயமாவது உட்புறம்; ஆழ்வார்கள் பக்ஷத்தில் ஹ்ருதயத்தைச் சொல்லுகிறது; சந்த்ர புஷ்கரிணீபக்ஷத்தில் தீர்த்தத்தின் உள்நிலத்தைச் சொல்லுகிறது. இந்த ஆசயத்திற்கு உபயஸாதாரணமாக நான்கு விசேஷணங்கள் இடப்பட்டன; ஆழ்வார்களுடைய திருவுள்ளம் இஷ்டமான அர்த்தங்களை யெல்லாம் கொடுக்க வல்லதாயும், அளவிட வொண்ணாதபடி கம்பீரமாயும், லௌகிகவிஷய வாஸனையாலே கலங்குவதற்கு ப்ரஸக்தியில்லாமையாலே தெளிவுற்றதாயும், தாபஹரமாயுமிருக்கும். புஷ்கரிணியின் ஆசயமும் உதாரமாய் [அதாவது—மஹத்தாய்] ஆழ்ந்ததாய் தெளிந்ததாய் குளிர்ந்ததாயிருக்கும். இப்படிப்பட்ட ஆசயத்திலே எம்பெருமான் மூழ்கியிருப்பனென்றதும் இரண்டுக்குமொக்கும்; சில உத்ஸவங்களிலே சந்த்ரபுஷ்கரிணியில் தீர்த்தம் [—அவப்ருதம்] கண்டருள்வதுண்டாகையாலே ஆசயமக்நநாதத்வம் சந்த்ரபுஷ்கரிணிக்குக் குறையற்றது; "பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்து என் மனக்கடலில் வாழவல்ல மாயமணாளன்" என்றும் "திருமாமகளைப்பெற்றுமென்னெஞ்சகம் கோயில்கொண்ட பேரருளாளன்" என்றும், "உள்புகுந்து நீங்கான் அடியேனதுள்ளத்தகம்" என்றும் சொல்லுகிறபடியே ஆழ்வார்களுடைய திருவுள்ளத்திலே எம்பெருமான் அநவரதம் ஆழ்ந்திருப்பனிறே. ஆக இவ்வகையினால் சந்த்ர புஷ்கரிணியோடு ஸாம்யம் பெற்றவர்களும் அப்புஷ்கரிணியின் கீழ்த்திசையில் எழுந்தருளியிருப்பவர்களுமான ஆழ்வார்கள் பதின்மரும் பொருளல்லாதவென்னைப் பொருளாக்கக் கடவர்களென்றதாயிற்று. (41)

आधारशक्तिमुपरि प्रकृतिं परेण तां कूर्ममत्र फणिनं पृथिवीं फणासु ।
पृथ्व्यां पयोधिमधितन्नलिनं निधाय श्रीरङ्गधाम सुनिविष्टमभिष्टवानि ॥४२॥

ஆதாரசக்திமுபரி ப்ரக்ருதிம் பரேண தாம் கூர்மமத்ர பணிநம் ப்ருதிவீம் பணாஸு,
ப்ருத்வ்யாம் பயோதிமதிதந்நளிநம் நிதாய ஸ்ரீரங்கதாம ஸுநிவிஷ்டமபிஷ்டவாநி. 42

| | | | |
|---|---|---|---|
| ஆதாரசக்திம்உபரி | — ஆதார சக்தியின் மீது | நிதாய | — வைத்து |
| ப்ரக்ருதிம் | — பிரகிருதி மண்டலத்தை | ப்ருத்வ்யாம் | — அந்த பூமியின்மீது |
| நிதாய | — வைத்து | பயோதிம் | — ஸமுத்ரத்தை |
| தாம் பரேண | — அந்த ப்ரக்ருதியின் மீது | நிதாய | — வைத்து |
| கூர்மம் | — கூர்மத்தை | அதிதத் | — அதன் மீது |
| நிதாய | — வைத்து | நளிநம் | — அஷ்டதள பத்மத்தை |
| அத்ர | — இந்த கூர்மத்தின் மீது | நிதாய | — வைத்து |
| பணிநம் | — ஆதிசேஷனை | அதிதத் | — அதன்மீது |
| நிதாய | — வைத்து | ஸுநிவிஷ்டம் | — ஸுப்ரதிஷ்டிதமாயிருக்கின்ற |
| பணாஸு | — (அவ்வாதிசேஷனுடைய) பணங்களின் மீது | ஸ்ரீரங்க தாம | — ஸ்ரீரங்கவிமானத்தை |
| ப்ருதிவீம் | — பூமியை | அபிஷ்டவாநி | — துதிக்கக்கடவேன். |

* * *—இனி நான்கு ச்லோகங்களால் ஸ்ரீரங்கவிமானத்தை அநுபவிக்கிறார். முதலில் எல்லாவற்றுக்கும் ஆதாரமான பகவத் சக்தியைவைத்து அதன்மேல்

Srivatsam

http://acharya.org

ப்ரக்ருதி மண்டலத்தைவைத்து அதன்மேல் கூர்மத்தைவைத்து அதன்மேல் ஆதிசேஷனை வைத்து அவ்வாதிசேஷனுடைய படத்தின்மீது பூமியைவைத்து அதன்மேல் ஸமுத்ரத்தை வைத்து அதன்மேல் அஷ்டதளபத்மத்தை வைத்து அதுதன்னிலே ப்ரதிஷ்டிதமாயிருக்கின்றதாம் ஸ்ரீரங்க விமானம்; இப்படிப்பட்ட விமானத்தைத் துதிக்கக்கடவேன் என்றாராயிற்று.

ஸகலத்தையும் தரிக்கவல்ல பகவத் சக்திக்கு ஆதாரசக்தி என்று பெயர்.

உடையவர் நித்யக்ரந்தத்தில் பீடார்ச்சநை யருளிச்செய்யுமிடத்து "ஓம் ஆதார சக்த்யை நம:. ஓம் ப்ரக்ருத்யை நம:." என்று தொடங்கி அருளிச்செய்தவை இங்கு அநுஸந்தேயம். இந்த ச்லோகத்தில் ஆதாரசக்திதொடங்கி ஸ்ரீரங்கவிமானத்தளவும் ஒன்றின் மேல் ஒன்று வைக்கப்பட்டிருப்பதாகச் சொன்னது அன்பர்கள் நெஞ்சில் இவ்விதமாக த்யானம் பண்ணவேண்டுமென்று முறைமை சொன்னபடி. ... (42)

परेण नाकं पुरि हेममय्याम् यो ब्रह्मकोशोऽस्त्यपराजिताख्यः।
श्रीरङ्गनाम्ना तमपौरुषेयम् विमानराजं भुवि भावयामि ॥४३॥

பரேண நாகம் புரி ஹேமமய்யாம் யோப்ரஹ்மகோசோஸ்த்யபராஜிதாக்ய:,
Srivatsam ஸ்ரீரங்கநாம்நா தமபௌருஷேயம் விமாநராஜம் புவி பாவயாமி. (43)

| | | | |
|---|---|---|---|
| நாகம் பரேண | ஸ்வர்க்கலோகத்திற்கும் மேற்பட்டதாய் | அஸ்தி | – இருக்கின்றதோ, |
| ஹேமமய்யாம் | – ஹிரண்மயமான | அபௌருஷேயம் | மனிதர்களால் செய்யப்பட்டதல்லாத |
| புரி | – பட்டணத்தில் | தம் விமாநராஜம் | – அந்த சிறந்த விமானத்தை |
| அபராஜிதா ஆக்ய: | 'அபராஜிதா' என்னும் பெயருடையதான | புவி | – இந்நிலத்தில் |
| ய: | – யாதொரு | ஸ்ரீரங்க நாம்நா பாவயாமி | ஸ்ரீரங்க விமானமென்னுந் திருநாமத்தோடு (அவதரித்ததாகப்) பாவிக்கக்கடவேன். |
| ப்ரஹ்மகோச: | – பரப்ரஹ்மஸ்தானமானது | | |

* * *—பிரகிருதி மண்டலத்துக்கு அப்பால் 'பொன்னுலகு' என்னப்படுகின்ற ஹிரண்மயபுரியில் அபராஜிதையென்று திருநாமமுடைய யாதொரு பரப்ஹ்மஸ்தானம். விளங்குகின்றதோ, அதுதானே இந்நிலவுலகத்தில் ஸ்ரீரங்கவிமானமாய்க்கொண்டு அபௌருஷேயமாய்த் திருவவதரித்திருப்பதாக அநுஸந்திக்கிறேனென்கிறார்.

தைத்திரீயோபநிஷத்தில் "பரேண நாகம் நிஹிதம் குஹாயாம்" என்றதை அடியொற்றி இந்த ச்லோகத்தில் "பரேண நாகம்" என்றார்; "புரம் ஹிரண்மயீம் ப்ரஹ்மா. விவேசாபராஜிதா." என்ற தைத்திரீய ஆரண்யக ப்ரதமப்ரச்ந வாக்யத்தையும், "ப்ரஹ்மண: கோசோஸி மேதயாபிஹித:" என்ற உபநிஷத் வாக்யத்தையும் அடியொற்றி "புரிஹேமமய்யாம் யோ ப்ரஹ்மகோசோஸ்த்யபராஜிதாக்ய:" என்றார். ப்ரணவமென்னும் ஓங்காரம் ப்ரஹ்மகோசமெனப்படும். ஸ்ரீரங்கவிமானமும் ப்ரணவாகார விமானமாகல் அறிக. 'ஸ்ரீரங்க நாம்நா' என்கையாலே நாமமாத்ரத்தில் பேதமேயன்றி வஸ்துபேதமில்லையென்பது விளங்கும். நித்யவிபூதியிலுள்ளதே இங்கு விளங்குகின்றதென்கையாலே அபௌருஷேயத்வம் ஸித்தம். ... ... ... ... (43)

http://acharya.org

अनाद्याम्नातत्वात् पुरुषरचनादोषरहितम् जने तांस्तान् कामान् वितरदपि सायुज्यहृदयम् ।
असन्देहाभ्यासं भगवदुपलम्भस्थलममी प्रतीमः श्रीरङ्गं श्रुतिशतसमानर्द्धि शरणम् ॥४४॥

அநாத்யாம்நாதத்வாத் புருஷரசநாதோஷரஹிதம்
ஜநே தாம்ஸ்தாந் காமாந் விதரதபி ஸாயுஜ்யஹ்ருதயம்,
அஸந்தேஹாத்யாஸம் பகவதுபலம்பஸ்தலமமீ
ப்ரதீம: ஸ்ரீரங்கம் ச்ருதிசதஸமாநர்த்தி சரணம்.

| | | | |
|---|---|---|---|
| அநாதி ஆம்நாதத்வாத் | ஸ்வயம்வ்யக்தமாக ஓதப்பட்டிருப்பதால் | அஸந்தேஹ அத்யாஸம் | ஸம்சயமும் விபர்யயமுமற்றதான |
| புருஷரசநா தோஷரஹிதம் | மனிதர்கள் நிர்மாணஞ்செய்தால் வரக்கூடிய தோஷமொன்றுமில்லாததும் | பகவத் உபலம்ப ஸ்தலம் | எம்பெருமான் விளங்குமிடமாயிருப்பதும் (ஆனதபற்றியே) |
| ஜநே | — ஜநங்களிடத்தில் | ச்ருதிசத ஸமாந ருத்தி | அனேக வேதங்களோடொத்த அதிசயத்தை யுடையதுமான |
| தாந் தாந் காமாந் விதரத் அபி | பலவகைப்பட்ட ஆசைகளை உண்டு பண்ணுகின்றதாயிருந்தாலும், (2) பலவகைப்பட்ட புருஷார்த்தங்களைக் கொடுப்பதாயிருந்தாலும் | ஸ்ரீரங்கம் | ரங்க விமானத்தை |
| | | அமீ | இவ்வடியோங்கள் |
| ஸாயுஜ்ய ஹ்ருதயம் | மோக்ஷத்திலேயே கருத்தை யுடையதும் | சரணம் | புகலிடமாக |
| | | ப்ரதீம: | விச்வஸிக்கிறோம். |

* * *—ஸ்ரீரங்க விமானத்திற்கும் வேதத்திற்கும் ஸாம்யம் அருளிச்செய்கிறாரிதில் [அநாத்யாம்நாதத்வாத் புருஷரசநாதோஷ ரஹிதம்] வேதம் ஒருவராலும் செய்யப்படாததாய் அநாதியென்று சொல்லப்பட்டிருப்பதால், மனிதர்களால் செய்யப்படுகிற நூல்களுக்கு உண்டாகக்கூடிய தோஷங்களற்றிருக்கும்; ஸ்ரீரங்கவிமானமும் ஸ்வயம்வ்யக்தமென்று சொல்லப்பட்டிருப்பதால் மனிதர்களால் கட்டப்படுகிற கட்டிடங்களுக்கு உண்டாகக்கூடிய கெடுதல்களற்றிருக்கும். [ஜநே தாம்ஸ்தாந் காமாந் விதரதபி ஸாயுஜ்யஹ்ருதயம்] வேதமானது "ப்ரஜாகாம:, பசுகாம:, அந்நகாம:, ஸ்வர்க்ககாம:" என்றிப்படிப்பட்ட பலவகைப்பட்ட காம்யார்த்திகளையுங் குறித்துப் பலவகையான இஷ்டிகளையும் விதித்து இவற்றை அநுஷ்டித்தால் அந்தந்த பலன்கள் கிடைக்குமென்று சொல்லியிருந்தாலும் மோக்ஷ புருஷார்த்தத்திலேயே முக்கிய நோக்குடையதாயிருக்கும் அது. (இவ்விடத்தில். "வத்ஸலையான மாதா பிள்ளை பேகணியாமல் மண் தின்னவிட்டு ப்ரத்யௌஷதமிடுமாபோலே எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான விவஹும் ருசிக்கேடாகப் பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே. அதுதானும் ஆஸ்திக்ய விவேகாந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பாரதந்த்ர்யங்களை உண்டாக்கின வழி" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூத்ரங்கள் அநுஸந்தேயம்.) ஸ்ரீரங்க விமானமும் தன்னை வணங்கிச் சிந்திப்பவர்கட்கு அவரவர்களின் விருப்பத்தின்படி நல்வரங்களான பலன்களையுங் கொடாநின்றாலும் மோக்ஷபுருஷார்த்தத்தை அளிப்பதிலேயே முழுநோக்குடைத்தாயிருக்கும்.

[அஸந்தேஹாத்யாஸம் பகவதுபலம்பஸ்தலம்]. "மூவாண் கூடர்க்கு கருதியுள்" என்றபடியே எம்பெருமான் உறையுமிடம் வேதம். வேதமானது எம்பெருமானைக் காட்டிக்கொடுக்கவல்ல ஸ்தலமாகும். 'இவ்விடத்தில் எம்பெருமான் உளனே இலனே'

என்று நாம் ஸந்தேஹிக்கவேண்டாதபடியும், அங்கு இல்லாதவனை அங்கு இருப்பவனாக க்ரஹிப்பதாகிற விபர்ய்யமும் இல்லாதபடியும் [அதாவது—நிஸ்ஸந்தேஹ விபர்யயமாய்.] எம்பெருமானை நாம் அறிவதற்குப் பாங்கான இடமாயிருக்கும் வேதம். ஸ்ரீரங்கவிமாநமும் அப்படியே. ஆக இவ்வகைகளாலே [ச்ருதிசதஸமாநர்த்தி] வேதங்களோடு ஒப்புமை பெற்றிருக்கின்ற ஸ்ரீரங்கவிமாநத்தைச் சரணம் புகுகின்றோமென்றாராயிற்று.

அத்யாஸமாவது ஆரோபம்; விபர்யயமென்று பர்யவஸிக்கும். உண்மையில் வேதமானது எம்பெருமானுறையுமிடமாக இல்லாதிருந்தால் அதில் அவன் இருப்பதாக நாம்க்ரஹிப்பது அத்யாஸமாகும். அப்படிக்கில்லை யென்றபடி. (44)

अपि फणिपतिभावाच्छुभ्रमन्तश्शयालोः मरकतसुकुमारै रङ्गभर्तुर्मयूखैः ।
सकलजलधिपानश्याममजीमूतजैत्रम् पुलकयति विमानं पावनं लोचने नः ॥४५॥

அபி பணிபதிபாவாத் சுப்ரமந்தச் சயாளோ:
மரகதஸுகுமாரை ரங்கபர்த்துர் மயூகை:
ஸகலஜலதிபாநச்யாமஜீமூதஜைத்ரம்
புளகயதி விமாநம் பாவநம் லோசநே ந:. (45)

| | | | |
|---|---|---|---|
| பணிபதி பாவாத் | (இவ்விமாநத்தின் ஸ்வரூபம்) திருவனந்தாழ்வானாகவே யிருக்கையினாலே | ஸகல ஜலதி பாநச்யாம ஜீமூதஜைத்ரம் | கடல்நீர் முழுவதையும் குடித்து அதனால் கறுத்திருக்கிற மேகத்தையும் வென்றிருக்கின்ற |
| சுப்ரம் அபி | — வெண்ணிறமாயிருந்தாலும் | | |
| அந்த: | — தன்னுள்ளே | பாவநம் | — பரமபவித்திரமான |
| சயாளோ: | — சயனித்திரா நின்ற | விமாநம் | ஸ்ரீரங்க விமாநமானது |
| ரங்கபர்த்து: | — அழகிய மணவாளனுடைய | ந: | நம்முடைய |
| மரகத ஸுகுமாரை: | மரகதமணியின்ஒளிபோன்றழகிய | லோசநே | தண்களை |
| மயூகை: | — காந்திகளாலே | புளகயதி | மயிர்கூச்செறியப் பண்ணுகின்றது. |

* * *—"சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்" என்கிறபடியே ஸகலவித கைங்கர்யங்களுக்கும் உரியவனான திருவனந்தாழ்வானே ஸ்ரீரங்கவிமாநமாக வடிவெடுத்திருப்பதனால் அத்திருவனந்தாழ்வானுடைய நிறம் வெளுத்ததாகையாலே இவ்விமாநமும் வெண்ணிறமுடையதேயாயினும் உள்ளுக் கண்வளர்ந்தருளாநின்ற காளமேகத் திருவுருவரான பெரியபெருமாளுடைய திருமேனியின் நிழலீட்டாலே கறுத்து, கடல்முழுவதையும் பருகிக்கிளர்ந்த காளமேகத்தினும் வீறுபெற்று விளங்குகின்றது; ஆகவே பரமபோக்யமா யிருக்கின்ற இத்திவ்ய விமாநம் நமது கண்களைக் குளிர்ப்பிக்கின்றது என்றாராயிற்று. ... ... (45)

व्यापि रूपमपि गोष्पदयित्वा भक्तवत्सलतयोज्झितवेलम् ।
तद्द्विषन्तपनृकेसरिरूपम् गोपुरोपरि विजृम्भितमीडे ॥४६॥

வ்யாபி ரூபமபி கோஷ்பதயித்வா பக்தவத்ஸலதயோஜ்ஜிதவேலம்,
தத் த்விஷந்தபந்ருகேஸரிரூபம் கோபுரோபரி விஜ்ருதம்பிதமீடே. (46)

http://acharya.org

வ்யாபி — மிகப்பெரிதான
ரூபம் அபி — வடிவையும்
கோஷ்பதயித்வா — சிறிதாக்கிக்கொண்டு
கோபுரோபரி — கோபுரத்தின் மீது
விஜ்ரும்பிதம் — விளங்கா நின்றுள்ளதும்
பக்த வத்ஸலதயா — பக்தனான ப்ரஹ்லாதன் பக்கலுள்ள வாத்ஸல்யத்தினால்
உஜ்ஜிதவேலம் — வரம்பைமீறி அவதரித்ததும்
தத் — பரமவிலக்ஷணமுமான
த்விஷத்தப ர்ரு கேஸரிரூபம் — சத்ருவான இரணியனைத் தொலைக்கவல்ல நரஸிம்ஹத் திருக்கோலத்தை
ஈடே — துதிக்கின்றேன்.

* * *—மேட்டழகியசிங்கரை இரண்டு ச்லோகங்களால் மங்களாசாஸநம் செய்கிறார். நரஸிம்ஹாவதாரத்தைப்பற்றிச் சொல்லுமிடங்களில் "மஹாவிஷ்ணும்" என்றும் "திவிஸ்ப்ருசத்காயம்" என்றும் மிகப்பெரிய திருக்கோலமாகச் சொல்லியிருப்பதால் "வ்யாபிரூபமபி" என்றார்; ஆகாசத்தளவும் வியாபித்த திவ்ய மங்கள விக்ரஹத்தையும் சிறியதாக அமைத்துக்கொண்டு கோபுரத்தின்மீது எழுந்தருளியிருப்பவரும், கர்ப்பவாஸம் பண்ணி அவதரித்தல் முகமும் உடலும் ஏகஜாதீயமாகவேயிருத்தல் முதலான நியமங்களை பக்தசிகாமணியான ப்ரஹ்லாதனிடத்துள்ள வாத்ஸல்யத்தினால் ஒழித்திட்டு, திடீரென்று விலக்ஷணவடிவோடே இரணியன் முடியத் தோன்றின வருமான நரஸிம்ஹமூர்த்தியைத் துதிக்கின்றேனென்கை.

**கோஷ்பதயித்வா**=கோஷ்பதம்போல் ஆக்கி என்றபடி: [கோஷ்பதமாவது—மாட்டின் குளம்பு; அவ்வளவு சிறியவடிவாக்கி என்கை. [**பக்தவத்ஸலதயா உஜ்ஜித வேலம்**] ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள்போலே கர்ப்பவாஸம் பண்ணி அவதரித்தால் காலவிளம்பமாகுமாதலால் 'எங்குமுளன் என்று நீ சொல்லுகிற விஷ்ணு இங்கு உளனோ?' என்று இரணியன் தூணைப்புடைத்தவுடனே அவதரிக்க முடியாமற் போகுமாகையாலும், முகமும் உடலும் வேறுபட்டிராமே ஒத்திருந்தால், இரணியன் பெற்றிருக்கிற வரத்தின்படி அவனைக் கொல்ல முடியாமற் போகுமாகையாலும் மற்ற அவதாரங்களிற்கண்ட நிபந்தனைகள் இவ்வவதாரத்தில் இல்லையாயின; இதற்கு ஹேது பக்தவாத்ஸல்யம். ... ... ... (46)

अहमल मवलम्बस्सीदतामित्यजस्रम् निवसदुपरिभागे गोपुरं रङ्गधाम्नः
क्वचन नृपरिपाटीवासितं, कापि सिंहक्रमसुरभितमेकं ज्योतिरग्रे चकास्ति ॥४७॥

அஹமலமவலம்பஸ் ஸீததாமித்யஜஸ்ரம்
நிவஸதுபரிபாகே கோபுரம் ரங்கதாம்ந:,
க்வசந ந்ருபரிபாடீவாஸிதம், க்வாபி ஸிம்ஹ
க்ரமஸௌரபிதமேகம் ஜ்யோதிரக்ரே சகாஸ்தி ... (47)

ஸீததாம் — "(ஸம்ஸாரத்தில்) துவண்டு நின்றவர்களுக்கு
அஹம் — நானே
அலம் — போதுமான
அவலம்ப: இதி — கைப்பிடிகொடுக்குந் துணைவன்" என்று (தெரிவிப்பது போன்று)
ரங்க தாம்ந: — ஸ்ரீரங்கமந்திரத்தினுடைய
கோபுரம் உபரி பாகே — கோபுரத்தின் மேற்புறத்தில்
அஜஸ்ரம் — எப்போதும்
நிவஸத் — வஸிப்பதும்,
க்வசந — (கழுத்துக்குக் கீழ்பட்டதான) ஒருபக்கத்தில்
ந்ருபரிபாடீ வாஸிதம் — மநுஷ்யவடிவோடு பொலிந்திருப்பதும்
க்வாபி — (கழுத்துக்கு மேற்பட்டதான) ஒருபாகத்தில்
ஸிம்ஹக்ரம ஸௌரபிதம் — சிங்கவடிவோடு பொலிந்திருப்பதுமான
ஏகம் ஜ்யோதி: — ஒருபரஞ்சோதி
அக்ரே — கண்ணெதிரே
சகாஸ்தி — விளங்குகின்றது.

Srivatsam
http://acharya.org

***—மற்ற எம்பெருமான்களைப்போலே இம்நிலத்தில் எழுந்தருளியிராமே மேட்டு நிலத்தில் எழுந்தருளியிருக்கு மிருப்பை நோக்கினால் 'ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுள் அழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கும் ஸம்ஸாரிகளுக்கு நானே கைப்பிடிகொடுத்து உய்விக்கவல்லேன்' என்று தெரிவிப்பவர் போன்றிருக்கின்றனராம் மேட்டழகியசிங்கர்; திருமேனி ஒருபடியும் திருமுகம் ஒருபடியுமாய் [நரங்கலந்த சிங்கமாய்]ப் பொலிகின்ற ஒரு பரஞ்சோதி இதோ கண்முன்னே தோன்றுகின்றது என்றாராயிற்று.

'வாஸிதம்' 'ஸௌரபிதம்' என்ற பதங்களினால் "ஸர்வகந்த:" என்கிற உபநிஷத்து ஸ்மரிப்பிக்கப்படும்: பரிமளப்ரசுரமாயிறே வடிவிருப்பது. (47)

**संशोध्य पावनमनोहरदृग्निपातैर्देवाय मामपि निवेदयतां गुरूणाम् ।**
**सव्योत्तरे भगवतोऽस्य कटाक्षवीक्षापङ्क्तिं प्रपद्य परितः परितो भवेयम् ॥४८॥**

**ஸம்சோத்ய பாவநமநோஹரத்ருஷ்டிபாதை:**
**தேவாய மாமபி நிவேதயதாம் குருணாம்,**
**ஸவ்யோத்தரே பகவதோஸ்ய கடாக்ஷவீக்ஷாபங்க்திம்**
**ப்ரபத்ய பரித: பரிதோ பவேயம். (48)**

| | | | |
|---|---|---|---|
| மாம் அபி | — நீசனான அடியேனையும் | அஸ்ய பகவத: ஸவ்ய உத்தரே (ஸ்தாம்) | இவ் வெம்பெருமானுடைய இடதான வடபுறத்திலே எழுந்தருளி யிருப்பவர்களுமான |
| பாவந மநோஹர த்ருஷ்டிபாதை: | பரிசுத்தமாய் அழகியவான கடாக்ஷங்களாலே | குருணாம் | — ஆசார்யர்களுடைய |
| ஸம்சோத்ய | — பரிசுத்தனாக்கி | கடாக்ஷவீக்ஷா பங்க்திம் ப்ரபத்ய | திருக்கண்ணோக்கங்களைத் தஞ்சமாகப் பற்றி |
| தேவாய | — எம்பெருமானுக்கு | பரித: பரித: பவேயம் | (அவர்களைப்) பிரதக்ஷிணஞ் செய்யக் கடவேன். |
| நிவேதயதாம் | உரியேனும்படி செய்தருள் கின்றவர்களும் | | |

***—உடையவர் நித்யக்ரந்தத்தில் பீடார்ச்சனைகள் அருளிச்செய்த பின்பு **"யோக பீடஸ்ய பச்சிமோத்தர திக்பாகே ஓம் அஸ்மத்குருப்யோ நம: இதி குரூந் கந்த புஷ்பதூபதீபை: அப்யர்ச்ச்ய ப்ரணம்ய அநுஜ்ஞாப்ய பகவத்யாகமாரபேத"** என்றருளிச்செய்திருப்பதை யநுஸரித்து இந்த ச்லோகமருளிச்செய்கிறார். "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே ஆசார்யர்களை முன்னிட்டே எம்பெருமானைப்பணிதல் முறைமையாதலால் இது ஒக்கும்.

பகவத்விஷயத்துக்கு ஆளாக வொண்ணாதபடி நீசனாய் நிறைவொன்றுமிலனான அடியேனையும் தமது பரமபாவனங்களான திருக்கண்ணோக்கங்களாலே அழுக்கறுத்துப் புனிதனாக்கி பகவத்விஷயத்துக்கு ஆளாக்குகின்றவர்களாய் இப்பெருமானுடைய இடதான வடபுறத்திலே யெழுந்தருளி யிருப்பவர்களான அஸ்மதாசார்யர்களினுடைய கடாக்ஷத்திற்கு அடியேன் இலக்காகி அவர்களை வலஞ்செய்து வாழக்கடவேனென்கை. (48)

Srivatsam
http://acharya.org

श्रीरङ्गराजकरसञ्चितशाखिकाभ्यो लक्ष्म्या स्वहस्तकलितश्रवणावतंसम् ।
पुन्नागतल्लजमजस्रसहस्रगीतिसेकोत्थदिव्यनिजसौरभमामनामः ॥४९॥

ஸ்ரீரங்கராஜகரஸஞ்சிதசாகிகாப்ய:
லக்ஷ்ம்யா ஸ்வஹஸ்தகலிதச்ரவணாவதம்ஸம்,
புந்நாகதல்லஜமஜஸ்ரஸஹஸ்ரகீதி
ஸேகோத்ததிவ்யநிஜஸௌரபமாமநாம: (49)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கராஜ | — ஸ்ரீரங்கநாதனுடைய | அஜஸ்ர— | — எப்போதுமுண்டான |
| கர— | — திருக்கைகளினால் | ஸஹஸ்ரகீதி ஸேக— | திருவாய்மொழிப் பெருக்கினால் |
| ஸஞ்சித— | — வணக்கப்பட்ட | உத்த— | — உண்டான |
| சாகிகாப்ய: | — கிளைகளில்நின்றும் | திவ்ய நிஜ ஸௌரபம் | விலக்ஷணமான பரிமளத்தையுடையதுமான |
| லக்ஷ்ம்யா | — ஸ்ரீரங்கநாயகியினால் | புந்நாக தல்லஜம்— | சிறந்த திருப்புன்னை மரத்தை |
| ஸ்வஹஸ்த கலித ச்ரவண அவதம்ஸம் | தனது திருக்கையினால் பறித்துக் கொள்ளப்பட்ட கர்ண பூஷண புஷ்பத்தையுடையதும் | ஆமநாம: | — துதிக்கிறோம். |

* * *—சந்த்ரபுஷ்கரிணியின் கரையிலுள்ள திருப்புன்னைமரத்தைத் துதிக்கின்றார். நம் பூருவாசாரியர்கள் இத்திருப்புன்னையின்கீழ் எழுந்தருளியிருந்து வேதாந்த ரஹஸ்யார்த்தங்களைப் பரஸ்பரம் விமர்சிப்பார்கள் என்றொறு ப்ரஸித்தியுண்டு; அன்றியும் திருவாய்மொழி மூலம் ஓதுவித்தலும் இத்திருப்புன்னையினடியில் நெடுநாள் நிகழ்ந்ததாகவும் ப்ரஸித்தியுண்டு. ஆகவிப்படிப்பட்ட சிறப்புவாய்ந்த இத்திருப்புன்னையை விசேஷித்துத் துதித்தல் ஆவச்யகமேயாம்.

ஸ்ரீரங்கநாதனும் ஸ்ரீரங்கநாச்சியாரும் விலாஸ விஹாரங்கள் செய்தருளும்போது இத்திருப்புன்னையின் மலர்களைப்பறித்துக் கர்ணபூஷணமாக இட்டுக்கொள்ள விரும்புவள் ஸ்ரீரங்கநாயகி; அப்போது மலர்கொய்வதற்குப் பாங்காக ஸ்ரீரங்கநாதன் தனது திருக்கையினால் இம்மரத்தின் கிளைகளைத் தாழ்த்துவனும்; அவற்றினின்றும் பிராட்டி பூக்கொய்துகொள்ளுவளாம்; அப்படிப்பட்ட பெருமைவாய்ந்ததாகும் இந்த வ்ருக்ஷம்.

[அஜஸ்ரஸஹஸ்ரகீதி ஸேகோத்த திவ்ய நிஜ ஸௌரபம்.] அடியில் இருந்துகொண்டு திருவாய்மொழியின் மூலத்தை உருச்சொல்லுவாரும் அர்த்தங்களை ஆராய்ச்சிசெய்வாரும் ஒய்தலொழி வின்றிப் பலருண்டாகையாலே இம்முகத்தால் அருளிச்செயலின் நறுமணமும் இம்மரத்திலே கமழ்கின்றதென்கிறார்.

புந்நாகதல்லஜம் = 'தல்லஜ' சப்தம் ச்ரேஷ்டவாசகம். 'ஆநமாம:' என்றும் பாடமுண்டு; வணங்குகிறோமென்கை. (49)

श्रीरङ्गचन्द्रमसमिन्दिरया विहर्तुं विन्यस्य विश्वचिदचिन्नयनाधिकारम् ।
यो निर्वहत्यनिशमङ्गुलिमुद्रयैव सेनान्यमन्यविमुखास्तमशिश्रियाम ॥५०॥

ஸ்ரீரங்கசந்த்ரமஸமிந்திரயா விஹர்த்தும் விந்யஸ்ய விச்வசிதசிந்நயநாதிகாரம்
யோ நிர்வஹத்யநிசமங்குலிமுத்ரயைவ ஸேநாந்யமந்யவிமுகாஸ்தமசிச்ரியாம (50)

Srivatsan

| | | | |
|---|---|---|---|
| ய: | — யாவரொரு ஸேனைமுதலியார் | அநிசம் | — எப்போதும் |
| ஸ்ரீரங்க சந்த்ர மஸம் | ஸ்ரீரங்கநாதனை | அங்குளி முத்ரயா ஏவ | (தனது) திருவிரல் முத்திரை கொண்டே |
| இந்திரயா | — பிராட்டியோடு கூட | நிர்வஹதி | — நிர்வஹிக்கிறரோ, |
| விஹர்த்தும் | திருவிளையாடல் செய்யும்படியாக | தம் ஸேநாந்யம் | — அந்த ஸேனை முதலியாரை |
| விநயஸ்ய | —(சேஷசயனத்திலே) அமர்த்தி | அந்ய விமுகா: (ஸந்த:) | வேறு புகலிடம் நோக்குதலற்றவர்களாய்க் கொண்டு |
| விச்வ சித் அசித் நயந அதிகாரம் | ஸமஸ்த சேதநா சேதநங்களையும் நியமிக்கு மதிகாரத்தை | அசிச்ரியாம | — அடிபணிந்தோம். |

* * *—வழியடைவே ஸேனைமுதலியாரைத் தொழுகிருரிதில். ஸகலப்ரபஞ்சங்களையும் நெறிபட நிர்வஹிக்குங் கடமை எம்பெருமானுடையது; அதனை விஷ்வக்ஸேநன் தான் ஏன்று கொண்டு 'தேவரீருக்குக் கவலைவேண்டா; பெரியபிராட்டியாரோடே இனிதாகக் கண்வளர்ந்தருளீர்; அடியேன் காரியங்கள் பார்த்துக்கொள்ளுகிறேன்' என்று விண்ணப்பம் செய்யவே எம்பெருமான் ஸகலபாரங்களையும் அப்படியே ஸேனைநாதன் தலையில் பொருப்பாக்கி விசாரமற்றுப் பிராட்டியோடே ஸரஸ விஹாரங்கள் செய்து களிக்கிறுன். ஆக விப்படி ஜகந்நிர்வஹணபாரத்தை யேற்றுக்கொண்டு தமது திருவிரல் முத்திரையினுலேயே உலகங்களை யடக்கியாள்பவரான ஸேனைமுதலியாரை வணங்கிறே மென்ருராயிற்று.

இந்த ச்லோகத்திற் சொன்ன அங்குளிமுத்ரை விஷ்வக்ஸேநருடைய திருக்கோலங்களில் காணத்தக்கது.

ஸுதர்சநசதகத்தின் முடிவில் "யஸ்மிந் விந்யஸ்ய பாரம் விஜயிநி ஜகதாம் ஜங்கமஸ்தாவராணும் லக்ஷ்மீ நாராயணுக்யம் மிதுநமநுபவதி அத்யுதாராந் விஹாராந்" என்று ஜகந்நிர்வஹண பாரங்களை யெல்லாம் திருவாழியாழ்வான் பக்கலில் வைத்திட்டதாகச் சொல்லுகிறதேயென்னில்; அதுவுமுண்டு; எம்பெருமானுக்கு அந்தரங்கரான பல அடியார்களும் கூறுகொண்டு நோக்க வேண்டும்படியிறே விபூதிவிஸ்தாரமிருப்பது.

ஸேநாந்யம்='ஸேநாநீ:' என்பது முதல்வேற்றுமை. ... (50)

सैन्यधुरीणप्राणसहायां सूत्रवतीमाशिश्रियमम्बाम् ।
श्रीपदलाक्षालाञ्छितसेवाप्रोतलसद्दोर्वल्लिविलासाम् ॥५१॥

ஸைந்யதுரீணப்ராண ஸஹாயாம் ஸூத்ரவதீமாசிச்ரியமம்பாம்,
ஸ்ரீபத லாக்ஷாலாஞ்சிதஸேவா ப்ரோதலஸத்தோர் வல்லீவிலாஸாம். (51)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ | — பெரியபிராட்டியாருடைய | தோர் வல்லீ விலாஸாம் | கொடிபோன்ற கையின் அழகை யுடையவளும் |
| பத | — திருவடிகளில் சாத்தின | ஸைந்ய துரீண ப்ராண ஸஹாயாம் | ஸேனை முதலியாரின் ப்ரிய பத்நியுமான |
| லாக்ஷா | — செம்பஞ்சுச்சாறு தன்னுல் | | |
| லாஞ்சித | — அடையாளமிடப் பெற்ற | | |
| ஸேவா ப்ரோத | கைங்கர்யார்த்தமான ப்ரோத வஸ்த்ரத்தினுல் | ஸூத்ரவதீம் | — ஸூத்ரவதியென்கிற |
| | | அம்பாம் | — தாயை |
| லஸத்— | — விளங்காநின்ற | ஆசிச்ரியம் | — ஆச்ரயித்தேன். |

* * *—கீழ் ச்லோகத்தில் தொழப்பட்ட ஸேனைமுதலியாரின் திவ்யமஹிஷியான ஸூத்ரவதியைத் தொழுகிறாரிதில். ஸேனைமுதலியார் எம்பெருமானுக்கு நித்யஸேவை பண்ணுவதுபோல் அவர்மனைவியான இவள் பெரியபிராட்டியாருக்கு நிரந்தரம் திருவடி ஸேவை பண்ணுகையாலே அப்பிராட்டியின் திருவடிகளிற் சாத்தின செம்பஞ்சிக் குழம்புக்குத் திருவொற்றுக்காப்பு ஸமர்ப்பிக்கும் கைங்கரியம் இவளுடையதென்று நன்கு விளங்கும்படி அச்செம்பஞ்சிக் குழம்பின் இலச்சினை விளங்கப்பெற்ற திருவொற்றுவாடையைக்கையிற் கொண்டிருக்கின்ற ஸூத்ரவதியைத் தொழுதேனென்கை.

ஸஹாயசப்தம் நித்ய புல்லிங்கமென்று பலர் கொள்வர்; அப்போது, கைங்கர்யதுரீணரை ப்ராணஸஹாயராக வுடையவள் என்று பஹுவ்ரீஹியாகக்கடவது. திருவொற்றுவாடைக்கு ப்ரோதவஸ்த்ரமென்று பெயர். 'ப்லோத' என்றும் வழங்குவர். ... (51)

विदधतु सुखं विष्वक्सेनस्य ते प्रथमे भटाः करिमुखजयत्सेनौ कालाह्वसिंहमुखौ च नः।
जगति भजतां तत्तत्प्रत्यूहतूलदवानलाः दिशिदिशि दिवारात्रं श्रीरङ्गपालनकर्मठाः ॥५२॥

Srivatsam

விததது ஸுகம் விஷ்வக்ஸேநஸ்ய தே ப்ரதமே படா:
கரிமுகஜயத்ஸேநௌ காலாஹ்வ ஸிம்ஹமுகௌ ச ந:,
ஜகதி பஜதாம் தத்தத்ப்ரத்யூஹதூலதவாநலா:
திசிதிசி திவாராத்ரம் ஸ்ரீரங்கபாலநகர்மடா:. (52)

| | | | |
|---|---|---|---|
| ஜகதி | – இவ்வுலகத்தில், | விஷ்வக்ஸேநஸ்ய | சேனைமுதலியாருடைய |
| பஜதாம் | (தம்மை) அடைகின்றவர்களுடைய | தே | – ப்ரஸித்தர்களான |
| தத் தத் ப்ரத்யூஹதூல தவாநலா: | பலவகையான இடையூறுகளாகிற பஞ்சுகளுக்குக் காட்டுத் தீ போன்றவர்களும் | ப்ரதமே படா: | – முக்கிய வேலைக்காரர்களுமான |
| திவாராத்ரம் | – இரவும் பகலும் | கரிமுகஜயத்ஸேநௌ காலாஹ்வ ஸிம்ஹமுகௌ ச | கஜாநநன், ஜயத்ஸேநன், ஹரிவக்த்ரன், காலப்ரக்ருதி என்கிற நால்வரும் |
| திசிதிசி | – திசைகள் தோறும் | ந: | – நமக்கு |
| ஸ்ரீரங்கபாலநகர்மடா: | கோயிலைக் காப்பதையே நித்ய கருமமாக வுடையவர்களும் | ஸுகம் | – ஸௌக்கியத்தை |
| | | விததது | – செய்வார்களாக. |

* * *—உடையவர் நித்யத்திலே விஷ்வக்ஸேந ப்ரணாமமருளிச் செய்தபின் விஷ்வக்ஸேந பரிஜநர்களான கஜாநந, ஜயத்ஸேந, ஹரிவக்த்ர, காலப்ரக்ருதி ஸம்ஜ்ஞர்களில், நமஸ்காரம் சொல்லப்பட்டுள்ளது; அதனை அநுஷ்டிக்கிறார். இந்த ச்லோகத்தில் பக்தர்களின் பலவகைப்பட்ட இடையூறுகளையும் ஒழிக்கவல்லவர்களாய், திருவரங்கப்பெருநகரை நாற்புறமும் எப்பொழுதும் காத்து வருமவர்களாய், ஸேனைமுதலியாருடைய ப்ரதாந படர்களான இவர்கள் நமக்குச் சேமமளிக்கவேணுமென்றாராயிற்று.

'கரிமுக' என்றது கஜாநநர்க்குப் பர்யாயம். ப்ராஹ்மணர்கட்கு ஸந்த்யாவந்தனாதி நித்ய நைமித்திக கருமங்கள் எப்படி நியதமோ அப்படி இவர்கட்குத் திருவரங்க

http://acharya.org

மாசுகளைக் காத்தருளுந்தொழில் நியதம் என்பது தோன்ற "ஸ்ரீரங்கபாலநகர்மிண:" என்றார். (52)

श्रुतिमयमतिहर्षप्रश्रयस्मेरवक्त्रं मणिमुकुरमिवाग्रे मङ्गलं रङ्गधाम्नः ।
शरणमभिगताः स्मो यत्र रूपस्वरूपस्वगुणमहिमदर्शी मोदते रङ्गशायी ॥५३॥

ச்ருதிமயமதிஹர்ஷப்ரச்ரயஸ்மேர வக்த்ரம்
மணிமுகுரமிவாக்ரே மங்களம் ரங்கதாம்ந:,
சரணமபிகதாஸ்ஸ்மோ யத்ர ரூபஸ்வரூப
ஸ்வகுணமஹிமதர்சீ மோததே ரங்கசாயீ. (53)

| | | | |
|---|---|---|---|
| யத்ர | யாவதொரு பெரிய திருவடியினிடத்தில் | மங்களம் | — மங்களகரமான |
| ரங்கசாயீ. | — அழகிய மணவாளன் | மணிமுகுரம் இவ ஸ்திதம் | ரத்னக்கண்ணாடி போன்றிருப்பவரும் |
| ரூபஸ்வரூப ஸ்வ குண மஹிம தர்சீ | திவ்யமங்கள விக்ரஹம், திவ்யாத்மஸ்வரூபம், திருக்கல்யாண குணங்கள் ஆகிய இவற்றின் வைலக்ஷண்யத்தை ஸாக்ஷாத்கரியாநின்று கொண்டு | அதிஹர்ஷ | — நிரம்பின ஸந்தோஷத்தாலும் |
| | | ப்ரச்ரய | — விநயத்தாலும் |
| | | ஸ்மேர | — விகஸித்துள்ள |
| | | வக்த்ரம் | திருமுகமண்டலத்தை யுடையவரும் |
| | | ச்ருதிமயம் | — வேதஸ்வரூபியுமான |
| மோததே | — ஆநந்தப்படுகின்றானோ, | (தம்) | — அந்த பெரிய திருவடியை |
| ரங்கதாம்ந: | — ஸ்ரீரங்கநாதனுடைய | சரணம் | — அரணாக |
| அக்ரே | — திருமுன்பே | அபிகதா: | — பற்றினவர்களாக |
| | | ஸ்ம: | — ஆகிறோம். |

* * *—ஸ்ரீரங்கநாதன் திருமுன்பே விளங்குகின்ற பெரிய திருவடியைத் தொழுகிறார் இதனால். [ச்ருதிமயம்] கருடன் வேதஸ்வரூபியாகச் சொல்லப்படுவன். "வேதாத்மா விஹகேச்வர:" என்றார் ஆளவந்தாரும். "சிரஞ்சேதனன் விழிதேகஞ் சிறைபின் சினைபதங்கந், தாந்தோள்களுருவடிவம்பெயரெசுர் சாமமுமாம், பரந்தே தமதடியார்க்குள்ள பாவங்கள் பாற்றியருள், சுரந்தேயளிக்கு மரங்கர்தமூர்திச் சுவணனுக்கே" (திருவரங்கத்துமாலை 88.) என்றார் பிள்ளைப் பெருமாளையங்காரும். "ஸுபர்ணோஸி கருத்மாந்" என்று தொடங்கி (யஜுர்வேதஸம்ஹிதா—காண்டம் 4; ப்ரச்நம்—1.) ஓதியுள்ளது முணர்க.

[அதிஹர்ஷப்ரச்ரய ஸ்மேர வக்த்ரம்.] '......நேத்ரம்' என்றும் பாடமுண்டு. இடைவிடாது எம்பெருமானைக் கண்ணார அநுபவிக்கப் பெற்ற பெருமகிழ்ச்சியும் விநயமும் திருமுகமண்டலத்திலே விளங்காநிற்கிறதாம். [ரங்கதாம்ந: அக்ரே மணிமுகுரமிவ] பிரபுக்கள் மங்களார்த்தமாக நிலைக்கண்ணாடியை எதிரேவைத்து நோக்கிக் கொண்டிருப்பார்கள்; தங்களிடத்திலுள்ளதெல்லாம் கண்ணாடியில் பிரதிபலிக்கும்; அப்படியே இங்கும் கண்ணாடியாகச் சொல்லப்பட்ட பெரிய திருவடியினிடத்தில் தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்கள் பிரதிபலிக்கக் காண்கிறானாம் திருவரங்கநாதன். எம்பெருமானுடைய ஸ்வரூபாதிகள் இவரிடத்தில் பிரதிபிம்பிக்கின்றனவென்கிற இதற்குக் கருத்து யாதெனில்; 1 "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே

1. பெரியதிருமொழி 11—3—5.

லோக்க அருள்செய்வர்'' என்கிறபடியே பெரியதிருவடியைத் தன்னோடொத்த ஸ்வரூப குணசாலியாக அருள்செய்து வைத்திருக்கிறானெம்பெருமான் என்றவாறு.

[மோததே ரங்கசாயீ.] 'ரங்கநாத:' என்னாமல் 'ரங்கசாயீ' என்கையாலே, உலகத்தில் சயனித்துக்கொள்ளுமவர்கள் கண்விழிக்கும்போதே கண்ணாடிப்புறத்தில் விழிக்கும்படியாக எதிரே கண்ணாடியைவைத்திட்டுப் படுத்துக்கொள்ளும் முறைமை ஸூசிதமாகலாம். இந்த ச்லோகத்தில் கருடனுடைய பெயரை ஸாக்ஷாத்தாகக் குறிப்பிடாமலே "ச்ருதிமயம்" என்றதனால் நிரூபித்தமை அறிக. (53)

तार्क्ष्यपक्षतिवदस्य वल्लभां रुद्रया सह सुकीर्तिमर्चये ।
हर्षबाष्पमपि कीर्तिमर्थिनां यन्मुखेन कमला कटाक्षयेत् ॥५४॥

தார்க்ஷ்யபக்ஷதிவதஸ்ய வல்லபாம் ருத்ரயா ஸஹ ஸுகீர்த்திமர்ச்சயே,
ஹர்ஷபாஷ்பமபி கீர்த்திமர்த்திநாம் யந்முகேந கமலா கடாக்ஷயேத். ... (54)

| | | | |
|---|---|---|---|
| கமலா | — பெரியபிராட்டியார் | தார்க்ஷ்ய பக்ஷதிவத் | பெரியதிருவடியின் பக்ஷமூலம் போல் |
| அர்த்திநாம் | — அபேக்ஷகர்களுக்கு | அஸ்ய | — இந்தப்பெரிய திருவடிக்கு |
| ஹர்ஷ பாஷ்பம் — | ஆநந்தபாஷ்பத்தையும் | வல்லபாம் | — காதலியான |
| கீர்த்திம் அபி | — கீர்த்தியையும் | ஸுகீர்த்திம் | — ஸுகீர்த்தி யென்பவளை |
| யந்முகேந | — எந்த கருடபத்நிகள் மூலமாக | ருத்ரயாஸஹ | — ருத்ரையென்பவளோடுகூட |
| கடாக்ஷயேத் | — கடாக்ஷித்து உண்டாக்குவளோ, | அர்ச்சயே | — பூஜிக்கிறேன். |

* * *—பெரிய திருவடிக்கு 'ருத்ரா' என்றும் 'ஸுகீர்த்தி' என்றும் இரண்டு தேவிமாருள்ளராக பகவச்சாஸ்த்ரங்களிலுள்ளது; வேதாந்ததேசிகனும் கருடதண்டகத்தில்—"ருத்ராஸுகீர்த்திஸ்தநாபோககாடோபகூட''...... என்று அருளிச்செய்துளர். அந்த கருடபத்நிகளைப் போற்றுகிறாரிதில்.

மிகவுமாழ்ந்த வ்யுத்பத்தியையுடையரான நுண்ணறிவாளர் இந்த ச்லோகத்தின் முதல்பாதத்தில் பெரியதோர் அநுபபத்தி சங்கிக்க இடமுள்ளது; தார்க்ஷ்யபக்ஷதிவத்அஸ்ய வல்லபாம்'' என்றிருக்கிறது. 'அஸ்ய' என்பதனால் கருடன் விவக்ஷிதனாக வேணும்; ஆகில் 'ஸ்வாத்ம பக்ஷதிவத்' என்றிருந்தால் பொருந்துமேயன்றி கருடவாசகமான பதத்தையே யிட்டுக்கூறுவது சேராது. 'கருடனுக்குத் தன்னுடைய பக்ஷமூலம் போலே வல்லபையாயிருக்கிற' என்றால் பொருந்துமேயல்லது, 'கருடனுக்கு கருடனுடைய பக்ஷமூலம்போலே இருக்கிற' என்றால் பொருந்தாது. அஸமபத்தமென்றே கொள்ளக்கூடியதாகும். பட்டருடைய ஸ்ரீஸூக்தியில் அஸம்பத்தப்ரயோகம் ஒருபடியாலும் ஸம்பவிக்க ப்ரஸக்தி யில்லை. அஜ்ஞராநாம் உண்மைப் பொருளுணர்ந்து தெளியமாட்டாது தடுமாறுகின்றோம். சிலர் "ஸ்வாத்மபக்ஷதிவதஸ்ய வல்லபாம்'' என்றிருந்த பாடம் மாறிப்போயிருக்கலாம் என்கிறார்கள்; இது ஸாஹஸிகோக்தியேயாகும். ஸஹஸா அப்படி திருத்திவிடத் துணிகின்றிலோம். உள்ளபாடத்திற்கே உபபத்தி உரைக்க வேண்டும். 'ஹே தார்க்ஷ்ய! அஸ்ய (தவ) பக்ஷதிவத் வல்லபாம்'' என்று ஸம்போதநமாகப் பிரிந்து 'தவ' என்றொருபதம் அத்யாஹாரம் செய்து

கொண்டு உரைக்கலாமென்றார்கள் சிலர். இங்ஙனே வருந்திப் பிரயோகிப்பவரல்லர் பட்டர். ஸ்வாரஸ்யமாகவே இதை அந்வயித்து உரைக்கவேணும். நாம் பதவுரையில் உரைத்தபடியே அழகியது. அநுபபத்திக்குப் பரிஹாரம் வந்துவிட்டதோ வென்னில் கேண்மின்;—இதிலுள்ள 'அஸ்ய' என்கிறபதம் கீழ்ச்லோகத்தில் ப்ரதிபாதிக்கப்பட்ட கருடனைச் சுட்டிக்காட்டுகிறதாகக் கொண்டால்தான் அநுபபத்திவரும். கீழ்ச்லோகம் கருடவிஷயகமேயாயினும் அதில் ஸாக்ஷாத்தாக கருடவாசகபதமேயில்லை. 'ச்ருதிமயம்' என்றதத்தனை. அந்த ச்லோகத்திற்கும் இந்த ச்லோகத்திற்கும் ஸம்பந்தம் கொள்ளவேண்டா. ஆகவே, இதிலுள்ள 'அஸ்ய' என்னும் பதம் ச்லோகாதியிலுள்ள தார்க்ஷ்ய பதத்தினால் பிரதிபாதிக்கப்பட்ட கருடனைச் சுட்டிக் காட்டுகிறது. ஆனபின்பு உபபந்நமாகவேயுள்ளதென்றுணர்க.

இங்ஙனன்றிக்கே வேறொரு வகையாகவும் சிலர் நிர்வஹிப்பர். 'அஸ்ய' என்று கருடனைச் சொல்லுகையன்றியே கீழ்ச்லோகத்தில் 'ரங்கசாயீ' என்று சொன்ன ஸ்ரீரங்கநாதனைச் சொல்லுகிறது. வல்லபா என்பதற்கு 'மனைவி' என்றே பொருள் கொள்ள வேண்டிய நியதி இல்லை. "அமாத்யோ ராஜவல்லப:" [மந்திரி அரசனுக்கு வல்லபன்] என்றுமிடங்களிற்போல் இங்கும் பொருள் கொள்ளலாம். பெரிய திருவடியின் பக்ஷமூலங்கள் எம்பெருமானுக்கு எப்படி விதேயமாயிருக்கின்றனவோ அப்படியே அவ்வெம்பெருமானுக்கு விதேயரான ருத்ராஸுகீர்த்திகளை அர்ச்சிக்கிறேன் என்பதாகப் பொருள்கொள்ளலாமென்பர். இப்பொருளில் ஸ்வாரஸ்யமொன்று மறிகின்றிலோம். 'பெரிய திருவடியின் மனைவியர்' என்கிற அர்த்தம் விவக்ஷிதமாயிருக்க அது வெளிவராத அஸ்வாரஸ்யமுங்காண்கிறோம். கீழ் விஷ்வக்ஸேந பத்நியான ஸூத்ரவதியைப் போற்றும் ச்லோகத்தில் "ஸைந்யதுரீண ப்ராண ஸஹாயாம் ஸூத்ரவதீம்" என்றதுபோலவே இங்கும் "தார்க்ஷ்ய வல்லபாம்" என்று விவக்ஷித்தே பட்டர் அருளிச்செய்ததாக அறுதியிடலாம். நிற்க.

Plural

கருடபத்நிகளான ருத்ராஸுகீர்த்திகளின் நாமங்களை ஒரு சமத்காரமாக நிர்வசநம் பண்ணியருளி, அதனால் தேர்ந்தபொருளை உத்தரார்த்தத்தில் அருளிச்செய்கிறார். * [ரோதய இதி ருத்ரா] என்றும், [சோபநா கீர்த்தி: (பக்தாநாம்) யயா ஸா] என்றும் அவயவார்த்தம் திருவுள்ளம் பற்றுகிறார். ஆகவே, ருத்ரா என்பதற்கு—கண்ணீர்விடச் செய்கிறவள் என்றும், ஸுகீர்த்தி என்பதற்கு—சிறந்த புகழை உண்டாக்குமவள் என்றும் பொருள்கொள்ளப்பட்டதாயிற்று. பெரிய திருவடி எம்பெருமானுக்கு அணுக்கனாயிருப்பதுபோல, தத்பத்நிகளான ருத்ராஸுகீர்த்திகள் பிராட்டிக்கு அணுக்கர்களாயிருப்பாராதலால் 'யந்முகேந கமலா கடாக்ஷயேத்' எனப்பட்டது. பெரியபிராட்டியார் அடியவர்களுக்குப் பல பேறுகளையும் அளிக்கும் அடைவிலே ஆநந்தபாஷ்பஸம்பத்தைச் சிலர்க்கு அளிப்பதுண்டு; சிறந்தகீர்த்தி ஸம்பத்தைச் சிலர்க்கு அளிப்பதுண்டு; அவற்றை லக்ஷ்மி எங்ஙனே அளிக்கிறாளென்றால், இந்த

* பட்டர் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் ருத்ரநாம நிர்வசநம் பண்ணுமிடத்—

"एवंरूपविविधचेष्टितहृतहृदयान् सानन्दबाष्पान् कुर्वन् रोदयतीति रुद्रः"

என்றருளிச்செய்திருப்பதும் காண்க

Srivatsan
http://acharya.org

ருத்ராஸூக்திகள் பலமாக அலிக்கின்றனவாம். எல்லாஸம்பத்தும் லக்ஷ்மீகடாக்ஷத்தினால் தான் உண்டாகவேண்டும்; ஆநந்தபாஷ்பமாகிற ஸம்பத்தும் கீர்த்தியாகிற ஸம்பத்தும் அந்த லக்ஷ்மீகடாக்ஷத்தினால் தானுண்டாகக் கூடவை. ஆநந்தபாஷ்பத்தை யுண்டுபண்ணுகிறவளான ருத்ராதேவியும் கீர்த்தியை யுண்டுபண்ணுகிறவளான ஸூக்திதேவியும் பிராட்டிக்கு நேத்ரஸ்தாநீயர்களா யிருப்பதால் அப்பிராட்டியின் அத்திருக்கண் நோக்கங்களினால் பக்தர்களுக்கு ஆநந்தபாஷ்பமும் கீர்த்தியும் உண்டாகக் கேட்கவேணுமோ?

ஆக இந்தச்லோகத்தால்—கருடபத்நிகளான ருத்ராஸூக்திகள் பெரிய பிராட்டியார்க்கு நேத்ரஸ்தாநீயர்களாகச் சொல்லக்கூடிய அந்தரங்கபூதைகள் என்று தெரிவித்தவாறு.

தார்க்ஷ்யபக்ஷதிவத் என்கிற த்ருஷ்டாந்தத்தின் கருத்து—பக்ஷமூலம்போல் நித்ய ஆலிங்கனத்திற்கு உரியவர்களென்கை. (54)

● स्वास्त्ररूपस्फुरन्मौलि मा शब्द इत्युद्धुनानां सुरास्तर्जनीमुद्रया । **
नाथनिद्रोचितोन्निद्रताम्रेक्षणां सञ्चरन्तीं स्तुमस्तां च पञ्चायुधीम् ॥५५॥

ஸ்வாஸ்த்ரரூபஸ்புரந்மௌலி மா சப்த இதி பஞ்சாயுதீம்
உத்துநாநாம் ஸூராம்ஸ்தர்ஜநீமுத்ரயா,
நாதநித்ரோசிதோந்நித்ரதாம்ரேக்ஷணாம்
ஸஞ்சரந்தீம் ஸ்துமஸ் தாஞ்ச பஞ்சாயுதீம். (55)

| | | | |
|---|---|---|---|
| ஸ்வ அஸ்த்ரரூப ஸ்புரத் மௌலி (யதாததா) | தாங்கள் அஸ்த்ரமாயிருக்குந் தன்மை தங்கள்முடிகளிலே விளங்கும்படியாக, | நித்ரா | — திருக்கண்வளர்த்திக்கு |
| | | உசித | — தகுதியாக |
| | | உந்நித்ர | — உறக்கமற்று (இருப்பதனால்) |
| | | தாம்ர | — சிவந்திருக்கிற |
| ஸூராந் | — தேவதைகளை | ஈக்ஷணாம் | — கண்களையுடையதும், |
| மா சப்த: இதி | ‘சப்தம் செய்ய வேண்டாம்’ என்று | ஸஞ்சரந்தீம் | உலாவிக் கொண்டிருப்பது மான |
| தர்ஜநீ முத்ரயா | ஆள்காட்டி விரலையிட்டுக்காட்டுவதனால் | தாம் | — அந்த |
| உத்துநாநாம் | — எழுப்பச் செய்கின்றதும், | பஞ்சாயுதீம் ச | — பஞ்சாயுதங்களையும் |
| நாத | — ஸ்ரீரங்கநாதனுடைய | ஸ்தும: | — துதிசெய்கிறோம். |

* * *—பஞ்சாயுதாழ்வார்களை ஸ்துதிசெய்கிறார் இதில். பக்தர்களுக்கு ஆநந்தபாஷ்பத்தை யளிப்பவளான ருத்ரையைத் துதித்தபின் விரோதிகளுக்கு சோகபாஷ்பத்தை யளிக்கும் பஞ்சாயுதியைத் துதிக்கவேண்டுவது ப்ராப்தமேயிறே.

சக்கரம் சங்கு சார்ங்கம் நந்தகவாள் கௌமோதகீ—இவை பஞ்சாயுதங்களெனப்படும். "சங்கு வில் வாள் தண்டு சக்கர மேந்திய அங்கைகள்" என்னக்கடவதிறே. இப்பஞ்சாயுதங்கள் அஸ்த்ர ரூபங்களாயிருக்கச்செய்தேயும் புருஷரூபங் கொண்டு ஸர்வகாலமும் நித்யஸூரிகளாகவுமிருப்பர். அப்படி புருஷரூபங்கொண்டிருந்தாலும் அஸ்த்ரமாயிருக்குந் தன்மையும் சிரஸ்ஸில் விளங்குமாம்; இதுசொல்லப்படுகிறது 'ஸ்வாஸ்த்ரரூபஸ்புரந்மௌலி' என்கிற விசேஷணத்தினால்.

இப்பஞ்சாயுதாழ்வார்கள் பகவத்ஸேவைக்காக வந்து இரண்ட தேவதைகளின் ஸ்தோத்ர கோஷங்களைக் கேட்டு எம்பெருமானுடைய திருக்கண் வளர்த்திக்கு இடையூறாக இதுஎன்ன சப்தம் என்று வெறுத்து 'ஸத்ரு ஸத்து!!' என்பாரைப்போலே 'சப்தம் செய்யவேண்டா' என்று தாங்கள் வாயால் வெருட்டினாலும் அதுவும் எம்பெருமானுடைய திருக்கண்வளர்த்திக்குப் பாதகமாகும் என்றெண்ணி வாயால்வெருட்டாமல் தர்ஜநீமுத்ரை கொண்டே அடக்குகின்றார்களாம்; இப்படி அதிகாரம் செலுத்திக்கொண்டே காத்துக்கொண்டிருக்க வேண்டுதலால், ஒருநொடிப்பொழுதும் கண்ணுறங்க அவகாசமேயில்லை இவர்களுக்கு; அதனால் அவர்களுடைய கண்கள் செக்கச்செவேலென்று சிவந்திருக்கும். அப்படி யிருக்கப்பெற்ற பஞ்சாயுதாழ்வார்களைத் துதிக்கிறோமென்றாயிற்று.

இவர்கள் தாம் நித்யஸூரிகளாகையாலே இவர்களுக்குக்கண்ணுறங்க ப்ரஸக்தியேயில்லாமலிருக்க 'நாதநித்ரோசிதோந்நித்ரதாம்ரேக்ஷணம்' என்றது ப்ரேமப்ரகர்ஷ பிசுநமான அதிசயோக்தியாகும். இவ்வாழ்வார்களைநோக்கிப் பெரியாழ்வார் "உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே சங்கே, அறவெறி நாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே,... ..பள்ளியறை குறிக்கொண்மின்" என்றதும் இங்கனுசந்தேயம்.

"நாதனுக்கு நித்திரை உண்மையாகில் இவையெல்லாம் உண்மையாகும்" என்பது அழகிய மணவாளச்சீயருடைய சாடூக்தி. "ஸ்வாஸ்த்ரரூபஸ்புரந்மௌலிம் ஆச் சப்த இதி" என்னும் பாடமு முண்டு. அப்போது முதற்பதம் பஞ்சாயுதீ விசேஷணம். (55)

अस्त्रग्रामाग्रेसरं नाथवीक्षाशीधुक्षीबोद्वेलनृत्ताभिरामम् ।
चक्रं दैत्यच्छेदकल्माषिताङ्गं भ्राम्यज्ज्वालामालभारि प्रपद्ये ॥५६॥

அஸ்த்ரக்ராமாக்ரேஸரம் நாதவீக்ஷா
சீதுக்ஷீபோத்வேலந்ருத்தாபிராமம்,
சக்ரம் தைத்யச்சேதகல்மாஷிதாங்கம்
ப்ராம்யஜ்ஜ்வாலாமாலபாரி ப்ரபத்யே. (56)

| | | | |
|---|---|---|---|
| நாத | — ஸ்ரீரங்கநாதனுடைய | கல்மாஷித அங்கம் | கறைபெற்றமேனியை யுடையதும் |
| வீக்ஷா | — திருக்கண்ணோக்கமாகிற | ப்ராம்யத் ஜ்வாலா மால பாரி | சுழல்கின்ற ஜ்வாலைகளின் ஸமூஹங்களை வஹித்துக் கொண்டிருப்பதும் |
| சீது | — மதுபானத்தினால் | அஸ்த்ரக்ராம அக்ரேஸரம் | அஸ்த்ரவர்க்கங்களுள் தலைமை பெற்றதுமான |
| க்ஷீப | — மதங்கொண்டதாகி | சக்ரம் | — திருவாழியை |
| உத்வேல | — அளவில்லாத | ப்ரபத்யே | — சரணம்புகுகிறேன். |
| ந்ருத்த | — நர்த்தனத்தாலே | | |
| அபிராமம் | — அழகியதும், | | |
| தைத்ய சேத | — அசுரர்களைச்சேதிப்பதனால் | | |

***—மேற்சொன்ன பஞ்சாயுதாழ்வார்களில் தலைவரான திருவாழியாழ்வாரைப் போற்றுகிறாரிதில். 'பகைவரைத் துணித்திடாய்' என்று நயனேங்கிதத்தால் காட்டுகின்ற ஸ்ரீரங்கநாதனுடைய கடாக்ஷமாகிற மத்யத்தைப் பானம்பண்ணி அதனால்

Srivatsam
http://acharya.org

தலைகால் தெரியாமல் கூத்தாடுகின்றனும் திருவாழியாழ்வான். பகவத் பாகவத விரோதிகளைக் கொலைசெய்யநேர்ந்த ஆநந்தமிகுதியினால் துள்ளுகிறபடி. [தைத்யச் சேத கல்மாஷிதாங்கம்] எப்போதும் அசுரர்களின் உடல்களிற் பாய்வதே பணியாகை யால் ரக்தக்கறை கழுவ அவகாசமில்லைபோலும்.

"ஜ்வாலாமாலபாரி" என்றவிடத்து ஸ்த்ரீலிங்கமான மாலா சப்தம் குறுகியிருப்பது "இஷ்டகேஷீகாமாலாநாம் சிததூலபாரிஷு" என்கிற வியாகரண ஸூத்ரத்தினாலென்க. (56)

हनुभूषविभीषणयोः स्यां यतमाविह मोक्षमुपेक्ष्य ।
रघुनायकनिष्क्रयभूतं भुवि रङ्गधनं रमयेते ॥५७॥

ஹநூபூஷவிபீஷணயோ: ஸ்யாம் யதமாவிஹ மோக்ஷமுபேக்ஷ்ய,
ரகுநாயகநிஷ்க்ரயபூதம் புவி ரங்கதநம் ரமயேதே. (57)

| | | | |
|---|---|---|---|
| யதமௌ | — எந்த ஹநுமத் விபீஷணர்கள் | ரமயேதே | (கைங்கர்யங்களினால்) உகப்பிக்கின்றனரோ, |
| மோக்ஷம் * | — மோக்ஷத்தையும் | | |
| உபேக்ஷ்ய | — இகழ்ந்து | (தயோ:) | — அந்த |
| இஹ புவி | — இவ்விபூதியில் | ஹநூபூஷ விபீஷணயோ: | ஹநுமானுக்கும் விபீஷணனுக்கும் |
| ரகுநாயக நிஷ்க்ரய பூதம் | ஸ்ரீராமபிரானுடைய மூலதனமாயிருக்கின்ற | | |
| ரங்கதநம் | — திருவரங்கச் செல்வனை | ஸ்யாம் | — உரியவனாகக் கடவேன். |

* * *—[ஹநூபூஷ விபீஷணயோ: ஸ்யாம்] திருவடிக்கும் விபீஷணாழ்வானுக்கும் ஆட்படக்கடவேன் என்கை. ஸப்தமீத்விவசநமாகக்கொண்டு, ஹநுமத்விபீஷணர்களுக்குள் ஒருவனாக நான் ஜநிக்கக்கடவேன் என்கிறார் என்று கூறுவாருமுளர்.

இவ்விருவரும் 'இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்றாற்போலே பரமபதாநுபவத்தை வெறுத்து இந்நிலத்திலேயே சிரஞ்சீவிகளாயிருந்து கொண்டு பெரியபெருமாளை அநுபவிக்கின்றனராம். * ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச்ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி * என்ற திருவடியின் வார்த்தையாலும் * ஸோத்ரைவ ஸந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவ ஸேவதே ஸௌ * என்ற அதிமாநுஷஸ்தவ ஸூக்தியாலும் திருவடியின் மோக்ஷவிரக்தி விளங்கும்; திருவடிக்கு ராமபக்தி எல்லைகடந்து உண்டானபோதே ஸ்ரீரங்கநாதனிடத்தில் பக்தியும் அர்த்தாத் ஸித்தமேயாம். ஸ்ரீராமனுடைய குலச்செல்வமிறே ஸ்ரீரங்கநாதன்.

இனி விபீஷணாழ்வானைப்பற்றி விவரிப்போம்; ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் [illegible] நூற்றுப்பத்தோராம் ஸர்க்கத்தில் (84) * லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:* என்று சொல்லப்பட்டுள்ளது. இதற்கு இக்ஷ்வாகுகுலச் செல்வமான ஸ்ரீரங்கநாதனைத் திருவாராதநமாகப் பெற்று விபீஷணன் இலங்கைக்குச் சென்றான் என்று [illegible] பொருள் கூறுவர். இப்பொருளில் சிலர் விவாதப்பட்டாலும், உத்தர ஸ்ரீராமாயணத்தில் * கிஞ்சாந்யத் வக்துமிச்சாமி ராக்ஷஸேந்த்ர மஹாபல, ஆராதய ஜகந்நாதம் இக்ஷ்வாகுகுலதைவதம் * என்றும் பாத்மபுராணத்தில்—" * யாவத்

சந்த்ரச்ச ஸூர்யச்ச யாவத் திஷ்டதி மேதிநீ, தாவத் ரமஸ்வ ராஜ்யஸ்த: காலே மம பதம் வ்ரஜ. இத்யுக்த்வா ப்ரததௌ தஸ்மை ஸ்வவிச்லேஷாஸஹிஷ்ணவே, ஸ்ரீரங்கசாயிநம் ஸ்வார்ச்யம் இக்ஷ்வாகுகுலதைவதம். ரங்கம் விமாநமாதாய லங்காம் ப்ராயாத் விபீஷண:" என்றும் ஸ்பஷ்டமாகவுள்ள வசநங்கள் மஹேச தீர்த்தாதிகளான ஸ்ரீராமாயண வ்யாக்யாதாக்களாலே உதாஹரிக்கப்பட்டவை. "மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்த, என்னுடைய திருவரங்கற்கு" என்றார் பெரியாழ்வாரும்.

ஆகவிப்படி இக்ஷ்வாகுகுலதநமான ஸ்ரீரங்கநாதனுக்கு நித்யஸேவை பண்ணுகின்ற திருவடியையும் விபீஷணாழ்வானையும் அர்ச்சையிலே கண்டு துதித்தாராயிற்று. (57)

इतो बहिः पञ्च पराञ्चि खानि प्रत्यञ्चि तानि स्युरितोऽन्तरित्थम्
औपाधिकेभ्यो निरुपाधिभोग्ये प्रत्याहरन्वेत्रवरं व्रजामि ॥५८॥

இதோ பஹி: பஞ்ச பராஞ்சி காநி ப்ரத்யஞ்சி தாநி ஸ்யுரிதோந்தரித்தம்,
ஔபாதிகேப்யோ நிருபாதிபோக்யே ப்ரத்யாஹரந் வேத்ரவரம் வ்ரஜாமி. ... (58)

| | |
|---|---|
| பஞ்ச காநி | — 'ஐந்து இந்திரியங்கள் |
| இத: பஹி: | — இவ்விடத்திற்கு அப்பால் |
| பராஞ்சி | வெளிவிஷயங்களைப் பற்றினவைகளாக |
| ஸ்யு: | — ஆகக்கடவன; |
| தாநி | — அந்த ஐந்து இந்திரியங்கள் |
| இத: அந்த: | — இவ்வருகே |
| ப்ரத்யஞ்சி | ப்ரத்யக்பதார்த்தமாகிய ஸ்ரீரங்கநாதனைப் பற்றினவைகளாக |
| ஸ்யு: | — ஆகக்கடவன' |
| இத்தம் | — என்று |
| ஔபாதிகேப்ய: | —ஸாமாந்யவஸ்துக்களில் நின்றும் |
| நிருபாதி போக்யே | ஸ்வயம்போக்யனான ஸ்ரீரங்கநாதனிடத்தில் |
| ப்ரத்யாஹரந் | (இந்திரியங்களை) கொண்டு சேர்க்கிற |
| வேத்ரவரம் | — திருப்பிரம்பை |
| வ்ரஜாமி | — சரணம்புகுகிறேன். |

* * *—திருவரங்கநாதனுடைய கர்ப்பக்ருஹ பாஹ்ய த்வாரத்தில் உழல்தடியாகக் குறுக்கே அமைக்கப்பட்டிருக்கும் திருப்பிரம்பைத் துதிக்கிறார். கண்டவர்களும் திடீரென்று உள்ளே நுழையாமைக்காக ஏற்பட்டதாகும் இவ்வுழல்தடி. இதன் அமைப்பை நோக்கித் தம்முடைய புத்திசமத்காரத்தாலே ஒரு உல்லேகம் அருளிச் செய்கிறாரிதில். சிலரைத் தடைசெய்வதற்கும் சிலரை தடையின்றி உள்ளே புகுவிப்பதற்கு முறுப்பாகவன்றோ உழல்தடியிருப்பது; ஸேவிக்க வருகிறவர்களின் பஞ்சேந்திரியங்களினுடைய ஒரு வ்ருத்தியை வெளியில் நிறுத்தி மற்றொருவகையான வ்ருத்தியை உள்ளேபுக அநுமதிக்கின்றதாம் இது. (இதனை விவரிப்போம்.) நம்முடைய செவி வாய கண் மூக்கு உடலென்னும் பஞ்சேந்திரியங்களுக்கு இருவகையான தன்மைகள் உள்ளன; வெளிப்படையான சேதநாசேதநப் பொருள்களை விஷயமாகக்கொள்ளுதல் ஒரு தன்மை; அங்ஙனன்றியே எம்பெருமானையே விஷயமாகக் கொள்ளுதல் மற்றொரு தன்மை. இதுவரையில் பட்டர் திருக்காவேரி சந்த்ர புஷ்கரிணி கோபுரம் ப்ராகாரம் மண்டபம் முதலிய வெளிவிஷயங்களின் அநுபவத்தில் ஊன்றியிருந்து இனி உள்

விஷயமான எம்பெருமான் பக்கலில் வைன்றப்போகிருராகையாலும், இப்படியே பக்தர்களாக வருகிறவர்களெல்லாரும் கர்ப்பக்ருஹத்வாரத்தருகில் வருமளவும் கோபுர ப்ராகார மண்டபாதிகளான வெளி விஷயங்களின் அநுபவத்தில் தங்களுடைய பஞ்சேந்திரியங்களை வியாபரிப்பித்து, கர்ப்பக்ருஹத்தினுள் நுழைந்தபின் பராக்கு அற்று பகவதநுபவத்திலேயே வியாபரிப்பித்தல் கூடுமாகையாலும் இதையெல்லாம் திருவுள்ளம் பற்றி அற்புதமாக இந்த ச்லோகம் அருளிச்செய்யப்பட்டுள்ளது.

'நியமநம் பெருதவர்கள் வெளியில் நிற்கக்கடவர்கள், நியமநம் பெற்றவர்கள் உள்ளே புகக்கடவர்கள்' என்று சிலரை விலக்கிச் சிலரை அங்கீகரிக்குமாபோலே இவ்வுழல்தடி என்ன செய்கின்றதென்றால், 'வெளிவிஷயங்களைப் பற்றுகின்ற இந்திரியங்கள் இதற்கு வெளியில் நிற்கக்கடவன; உள்விஷயமான பகவத் விஷயத்தைப்பற்றுகின்ற இந்திரியங்கள் இதற்குள் புகக்கடவன' என்றொரு வரம்பிட்டு ஔபாதிக போக்யங்களான வெளிவிஷயங்களில் நின்றும் மீட்டு நிருபாதிக போக்யமான பகவத் விஷயத்திலேகொண்டு இந்திரியங்களை மூட்டுகின்ற திருப்பிரம்பைப் பற்றுகின்றேனென்றாராயிற்று.

கோபுரப்ராகாரமண்டபாதிகள் ஸ்ரீரங்கநாத ஸம்பந்தமாகிற ஒரு உபாதியை முன்னிட்டு அநுபவிக்கப்படுகின்றனவாதலால் அவை ஔபாதிகபோக்யங்களெனப்பட்டன; எம்பெருமான் அப்படி ஒரு உபாதியாலன்றிக்கே இயற்கையாகவே போக்யனாதலால் நிருபாதிகபோக்யனென்றது. ... ... ... ... ... ... (58)

शेषशयलोचनामृतनदीरयाकुलितलोलमानानाम् ।
आलम्बमिवामोदस्तम्भद्वयमन्तरङ्गमभियामः ॥५९॥

சேஷசயலோசநாம்ருத நதீரயாகுலிதலோலமாநாநாம்,
ஆலம்பமிவாமோத ஸ்தம்பத்வயமந்தரங்கமபியாம: (59)

| | | | |
|---|---|---|---|
| சேஷசய | அரவணைமேற் பள்ளி கொள்ளும் அரங்கனுடைய | லோலமாநாநாம் | — தத்தளிக்கின்றவர்களுக்கு |
| லோசந | — கடாக்ஷமாகிற | அந்தரங்கம் ஆலம்பம் இவ (ஸ்திதம்) | அணுகினதைப்பிடிபோன்றுள்ள |
| அம்ருதநதீ | — அமுதவாற்றினுடைய | ஆமோத ஸ்தம்பத்வயம் | திருமணத்தூண்களிரண்டையும் |
| ரய | — வேகத்தினால் | அபியாம: | — அடைகிறோம். |
| ஆகுலித | அசைக்கப்பட்டவர்களாய்க்கொண்டு | | |

* * *— அழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கத்திலிருக்கும் இரண்டு தூண்களுக்கு, திருமணத்தூண் என்பது ஸம்ப்ரதாயத்திருநாமம். அதுவே வடமொழியில் ஆமோதஸ்தம்பமென வழங்குவது. (ஆமோதமாவது மணம்.) பெருமாள் திருமொழியில் (1-2) "தென்னரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனை மணத்தூணே பற்றி நின்று என் வாயாரவென்று கொலோ வாழ்த்துநாளே" என்றருளிச்செய்ததுகாணா. அப்பாசுரத்தில் 'மணத்தூணருகில் நின்றுகொண்டு' என்னாமல் 'மணத்

தாணே பற்றிநின்று' என்றருளிச்செய்ததன் உட்கருத்தைக் கண்டறிந்த இவ்வாசிரியர் அதனை இந்த ச்லோகத்திற்காட்டுகிறார். $

அழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கமாகிற அமுதவாற்றின் பெரு வெள்ளமாவது அநுபவிக்க இழிந்தவர்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்க வொட்டாமல் தாக்கித்தள்ளி அசைக்குமளவில், அவர்கள் கைப்பிடிப்பாகப் பற்றிக் கொண்டு நிற்பதற்கு நாட்டப்பட்டுள்ளவைபோன்ற திருமணத் தூண்களைப் பற்றுவோ மென்கை. 'மணத்தூணே பற்றிநின்று' என்றருளிச்செய்த ஆழ்வாருடைய உட்கருத்து இதுவே போலும். அழகிய மணவாளனது திருமேனியின் பரிமளம் இரண்டு தூணாகப் பரிணமித்து உருவெடுத்து நிற்பதால் திருமணத்தூண் என்று திருநாம மாயிற்றென்பர்.

அந்தரங்கம் என்றது ஆலம்பத்துக்கும் விசேஷணமாகலாம், ஸ்தம்பத்வயத் துக்கும் விசேஷணமாகலாம். கீழ்ச்லோகத்திற் காட்டிய பிரிவின்படி இத்திருமணத் தூண் பஹிர்பூத விஷயங்களிற் சேர்ந்ததன்று என்பதைக் காட்டுதற்காம் இந்த விசேஷணம். (59)

श्रीरङ्गान्तर्मन्दिरं दीप्रशेषं श्रीभूमीतद्रम्यजामातृगर्भम् ।
Srivatsam
पश्येम श्रीदिव्यमाणिक्यभूषामञ्जूषायास्तुल्यमुन्मीलितायाः ॥६०॥

ஸ்ரீரங்காந்தர் மந்திரம் திப்ரசேஷம் ஸ்ரீபூமீதத்ரம்யஜாமாத்ருகர்ப்பம்,
பச்யேம ஸ்ரீதிவ்யமாணிக்யபூஷா மஞ்ஜூஷாயாஸ் துல்யமுந்மீலிதாயா: (60)

| | | | |
|---|---|---|---|
| தீப்ர சேஷம் | திருவனந்தாழ்வான் விளங்கப் பெற்றதும் | ஸ்ரீ திவ்ய மாணிக்ய பூஷா, மஞ்ஜூஷாயா: துல்யம் | பெரிய பிராட்டியாருடைய சிறந்த திருவாபரணப் பெட்டிக்கு நிகரான துமான |
| ஸ்ரீ பூமீ தத் ரம்யஜாமாத்ரு கர்ப்பம் | திருமடந்தையென்ன மண்மடந்தையென்ன அந்த அழகிய மணவாளனென்ன இவர்களை உள்ளே உடையதும் | ஸ்ரீரங்க அந்தர் மந்திரம் | ஸ்ரீ ரங்கவிமானத்தின் கர்ப்பக்ருஹத்தை |
| உந்மீலிதாயா: | — கதவு திறந்திருக்கப்பெற்ற | பச்யேம | — ஸேவிப்போம். |

* * *—ஸ்ரீரங்கவிமானத்தின் உட்புறமாகிய கர்ப்பக்ருஹத்தை ஸேவிக்கிறாரிதில். கீழே எட்டாம் ச்லோகத்தில் "ஸ்ரீஸ்தநாபரணம் தேஜ:" என்று ஸ்ரீரங்கநாதனைப் பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தின் திவ்யாபரணமாக அருளிச்செய்திருக்கையாலே அந்த ஸ்ரீரங்கநாதனெழுந்தருளியிருக்கு மிவ்விடத்தைப் பிராட்டியின் திருவாபரணப் பெட்டியாக இதில் அருளிச்செய்தது மிக்க பொருத்தமுடையது. திருவனந்தாழ் வானும் திருமடந்தை மண்மடந்தை இருபாலுந் திகழுகின்ற பெரியபெருமாளும்

$ திருமணத்தூண் கர்ப்பக்ருஹத்தினுள்ளே யிருப்பதாலும் கர்ப்பக்ருஹத்தைப்பற்றி அருளிச்செய்யும் ச்லோகம் மேலே வருவதாலும் இந்த ச்லோகம் ஐம்பத்தொன்பதாவது ச்லோகமாக அமைந்திருப்பது பாடத்தின் மாறுபாடு என்றும், மேலே 'உத்புல்ல பங்கஜ' இத்யாதி அறுபத்து மூன்றும் ச்லோகத்திற்கு அடுத்த கீழ்ச்லோகமாக (62-ஆக) இருக்கவுரியதென்றும் லேககர்களுக்கு முன்னமே பாட விபர்யயம் விளைந்திட்டதென்றும் கோயில் பத்தாவிஸ்வாமி அருளிச்செய்வரென்று சிலர் சொல்லுவர்; இது சம்பத்தருக்கதன்று; திருமணத்தூணுக்கு அப்பாற்பட்ட பாகமே கர்ப்ப க்ருஹமாகும், ஆகையால் இந்த ச்லோகம் இவ்விடத்திலேயே இருக்கவுரியது.

http://acharya.org

விளங்கப்பெற்றதாய் 'பிராட்டியின் திருவாபரணப் பெட்டியோ இது' என்னலாம்படியான கர்ப்பக்ருஹத்தை ஸேவிப்போமென்கை.

लीलालताकृपाणीभृङ्गारपतद्ग्रहार्पितकराग्राः ।
प्रोतावतंसितकुचाः पदाब्जसंवाहिनीर्वयं स्तुमहे ॥६१॥

லீலாலதாக்ருபாணீ ப்ருங்காரபதத்க்ரஹார்ப்பிதகராக்ரா:,
ப்ரோதாவதம்ஸிதகுசா: பதாப்ஜஸம்வாஹிநீர் வயம் ஸ்துமஹே (61)

| | | | |
|---|---|---|---|
| லீலா | — விளையாட்டுக்கான | ப்ரோத | —திருவொற்று வடையினும் |
| லதா | — கொடியென்ன | அவதம்ஸித | —அலங்காரம்பெற்ற |
| க்ருபாணீ | — கத்தியென்ன | குசா: | கொங்கைகளையுடையவர்களுமான |
| ப்ருங்கார | — பொன்வட்டிலென்ன | | |
| பதத்க்ரஹ | — படிக்கமென்ன (இவற்றில்) | பதாப்ஜ ஸம்வாஹிநீ: | திருவடிவருடும் பிராட்டிமார்களை |
| அர்ப்பித | — வைக்கப்பட்ட | | |
| கர அக்ரா: | —கைநுனியையுடையவர்களும் | வயம் ஸ்துமஹே— | நாம் துதிக்கிறோம். |

• • •—ஸர்வஸ்த்ரங்களைத் திருமார்பில் சாத்திக்கொண்டு, பெரியபெருமாளுடைய லீலாபோக ஸாமக்ரிகளான லதை, கத்தி, பொன்வட்டில், படிக்கம் ஆகிய இவற்றைக் கைகளில் தரித்துக்கொண்டிருப்பவர்களும் திருவடிவருடும் அத்தாணிச் சேவகத்திற்கு உரியவர்களுமான பரிசாரிகைகளைப் போற்றுவோமென்கிறார்.

இந்த ச்லோகத்திற்கு இரண்டுவகையான யோஜனைகளுண்டு; 'பதாப்ஜ ஸம்வாஹிநீ:' என்னும் விசேஷ்ய பதத்திற்குக் கீழுள்ள பதங்களிரண்டையும் விசேஷணமாக்கி யுரைத்தல் ஒரு யோஜனை; அன்றியே, 'லீலாலதா...கராக்ரா:' என்பதை ஸ்வதந்த்ர விசேஷ்யமாகவும், 'ப்ரோதாவதம்ஸிதகுசா:' என்பதைப் பதாப்ஜஸம்வாஹிநிகளுக்கு விசேஷணமாகவுங்கொண்டு உரைத்தல் மற்றொரு யோஜனை. திருவடிவருடும் பரிசாரிகைகளையே இந்த ச்லோகத்தால் துதிப்பதாக முதல்யோஜனையின் கருத்து; (அப்போது முதல்விசேஷணம் ஸமயபேதத்தாலே கூடும்; சிலஸமயங்களில் திருவடிவருடுவர்கள், சிலஸமயங்களில்ஸாமக்ரிகளைத் தரிப்பர்களென்க) வட்டில் படிக்கம் முதலிய ஸாமக்ரிகளைக் கையிலேந்தியுள்ள பரிசாரிகைகளையும் திருவடிவருடும் பரிசாரிகைகளையும் (ஆக இருவகுப்பினரைத்) துதிப்பதாக இரண்டாவது யோஜனையின் கருத்து. இங்ஙனே அநுஸந்திப்பதெல்லாம் பகவச் சாஸ்த்ரங்களிற் சொன்ன கட்டளையென்ப. (61)

मुकुलितमल्लिकास्तकौमुदीका इव सुनिशा विमलाम्बिका तथापि ।
शिरसि कृतनमस्यदेकहस्ता इतरकरोच्चलच्चामराः श्रयेयम् ॥६२॥

முகுளிதமல்லிகாஸ்தகௌமுதீகா: இவ ஸுநிசா விமலாந்திகா ததாபி,
சிரஸி க்ருதநமஸ்யதேகஹஸ்தா: இதரகரோச்சலச்சாமரா: ச்ரயேயம். ... (62)

Srivatsam
http://acharya.org

சிரஸிக்ருதநமஸ்யத் ஏக ஹஸ்தா: { ஒற்றைக்கையைத் தங்கள் தலைமேல் கூப்பித் தொழுமவர்களாய்
இதர கரோச்சல சாமரா: { மற்றொருகையால் சாமரம் பணிமாறுமவர்களாய்
(இப்படியிருக்கும் நிலைமையினால்)
முகுளித நளிநா: { தாமரை மலர்கள் மூடிக்கொள்ளப் பெற்றும்
ஸகௌமுதீகா: — நிலாவோடு கூடியுமுள்ள.
ராத்ரிகா: இவ (ஸ்திதா:) { அழகிய ராத்ரிபோன்றிருக்கின்ற
விமலா ஆதிகா: — விமலை முதலான
நவ அபி { (சாமரக்ராஹிணிகள்) ஒன்பதின்மரையும்
ச்ரயேயம் — ஆச்ரயிக்கக்கடவேன்.

* * *—சாமரம் பணிமாறும் பரிசாரிகைகளை வணங்குகிறார். "மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி" என்கிறபடியே முடிமேல் அஞ்ஜலிசெய்ய வேண்டுமாயினும் ஒரு கையாலே சாமரம் வீசுகையாலே மற்றொரு கையை மாத்திரம் சிரஸ்ஸில்வைத்துத் தொழுகிறார்களாம் விமலைமுதலான ஒன்பது பரிசாரிகைகள்; இப்படி ஒருகை மொட்டித்தும் மற்றொருகை வெண்சாமரங்கொண்டும் இருக்கப்பெற்ற இவர்களை நோக்குங்கால், தாமரைப் பூக்கள் மொட்டித்திருக்கவும் வால்வெண்ணிலவு விளங்கவும் பெற்ற ராத்திரிகளோ என்னலாம்படி இருக்கின்றதாம். [சிரஸிக்ருத நமஸ்ய ஏக ஹஸ்தமானது முகுளிதநளிநஸ்தாநீயம்; இதரகரோச்சலசாமரமானது கௌமுதீஸ்தாநீயம்; விமலாதிகள் ராத்ரிஸ்தாநீயைகள்.]

Srivatsam

உடையவர் நித்ய க்ரந்தத்தில் "விமலாயை சாமரஹஸ்தாயை நம: உத்கர்ஷிண்யை சாமரஹஸ்தாயை நம:" என்று தொடங்கி அருளிச்செய்துள்ள ஒன்பது திருநாமங்கள்காண்க.

ஒற்றைகையால் ப்ரணாமம் பண்ணுவது அபசாரமாக சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருந்தாலும் நியத கைங்கர்ய நிஷ்டர்களுக்கு அது பாதகமன்று, மற்றவர்களுக்கே பாதகம் என்பது இந்தச்லோகத்தினால் தெரிவிக்கப்பட்டதாகும். ... (62)

**उत्फुल्लपङ्कजतटाकमिवोपयामि श्रीरङ्गराजमिह दक्षिणसव्यसीम्नोः ।**
**लक्ष्मीं विहाररसिकामिव राजहंसीं छायामिवाभ्युदयिनीमवनीं च तस्याः ॥६३॥**

**உத்புல்லபங்கஜதடாகமிவோபயாமி ஸ்ரீரங்கராஜமிஹ தக்ஷிணஸவ்யஸீம்நோ:,**
**லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம் சாயாமிவாப்யுதயிநீமவநீம் ச தஸ்யா:. (63)**

இஹ — இந்த கர்ப்பக்ருஹத்தில்,
உத்புல்ல பங்கஜ தடாகம் இவ (ஸ்திதம்) { மலர்ந்த தாமரை மலர்களையுடைய பொய்கைபோன்றுள்ள
ஸ்ரீரங்கராஜம் — ஸ்ரீரங்கநாதனை
உபயாமி — ஆச்ரயிக்கக்கடவேன்;
தக்ஷிண ஸவ்ய ஸீம்நோ: | வலவருகிலும் இடவருகிலும்
விஹாரரஸிகாம் ராஜ ஹம்ஸீம் இவ { விளையாடவல்ல அன்னம் பேடைபோன்றுள்ள
லக்ஷ்மீம் — திருமகளையும்
தஸ்யா: — அவளுடைய
அப்யுதயிநீம் { மேன்மேலும் வளர்த்தியையுடைத்தான
சாயாம் இவ — நிழல்போன்றவளான
அவநீம் ச — பூமிப்பிராட்டியையும்
உபயாமி — அடையக்கடவேன்.

http://acharya.org

* * *—இதுமுதலாக அரங்கனை யநுபவிக்கிறார். மேல்பதினான்கு ச்லோகங்கள் நம்பெருமாள் [உத்ஸவமூர்த்தி] விஷயமாக அருளிச்செய்வன; * ஸ்வபண விதாநதீப்ர * என்கிற எழுபத்தேழாம் ச்லோகம் தொடங்கி சதகம்முடியப் பெரியபெருமாள் [மூல மூர்த்தி] விஷயமாக அருளிச்செய்வன. கீழ்கழிந்த அறுபத்திரண்டு ச்லோகங்களும் இந்த ஸ்தவத்திற்கு அவதாரிகைபோலும்; இனியாய்த்து ஸ்ரீரங்கராஜஸ்தவம்.

'தயரதன்பெற்ற மரதகமணித்தடம்' என்று எம்பெருமானை ஸகல தாபஹர மான பொய்கையாகப் பேசுவதுண்டாகையாலே இதில் அங்ஙனமே பேசுகிறார். 1. "கைவண்ணந் தாமரைவாய் கமலம்போலும் கண்ணிணையு மரவிந்தம் அடியுமஃதே, என்கிறபடியே திருக்கை திருவாய் திருக்கண் திருவடி என்னு மவயவங்கள் செந் தாமரைப் பூப்போன்றிருத்தலால் இவை நிறைந்த எம்பெருமானைத் தாமரைத்தடாக மாக உருவகப்படுத்துதல் மிகப்பொருந்தும். "மாயக்கூத்தா வாமனா வினையேன் கண்ணா! கண் கை கால், தூய செய்யமலர்களா சோதிச்செவ்வாய் முகிழதா, சாயல் சாமத்திருமேனி தண்பாசடையா, தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே!" (8—5—1) என்ற திருவாய்மொழியுங் காண்க.

தாமரைப்பொய்கையில் அன்னப்பறவை விளையாடுமே; அஃது இங்கு உண்டோ வென்ன, உண்டென்கிறது மூன்றுபாதங்களால். ஸ்ரீதேவியும் பூதேவியும் இப் பொய்கையிலே விளையாடவல்ல அன்னப்பேடைகளென்க. பூமிப்பிராட்டியானவள் பெரிய பிராட்டியாரிடத்தில் ஸபத்நீத்வ ப்ரயுக்தமாகப் பகைமைகொள்ளாமல் அன்பே பாராட்டிநிற்குந் தன்மையை "தஸ்யா: ச்சாயாமிவ" என்றதனால் விளக்கினார். (63)

पिब नयन! पुरस्ते रङ्गधुर्याभिधानं स्थितमिव परिफुल्लपुण्डरीकं तटाकम् ।
श्रियमपि विहरन्तीं राजहंसीमिवास्मिन् प्रतिफलनमिवास्याः पश्य विश्वंभरां च ॥६४॥

பிப நயந புரஸ் தே ரங்கதுர்யாபிதாநம்
ஸ்திதமிஹ பரிபுல்லத் புண்டரீகம் தடாகம்,
ச்ரியமபி விஹரந்தீம் ராஜஹம்ஸீமிவாஸ்மிந்
ப்ரதிபலநமிவாஸ்யா: பச்ய விச்வம்பரஞ் ச. (64)

| | | | |
|---|---|---|---|
| ஹே நயந | — வாராய் கண்ணே! | அஸ்மிந் | — இப்பொய்கையிலே |
| இஹ! | — இந்த கர்ப்பக்ருஹத்தில், | விஹரந்தீம் | — விளையாடுகின்ற |
| தே புர: | — உன்னெதிரே | ராஜஹம்ஸீம் இவ | —அன்னப்பேடை போன்றவள |
| ஸ்திதம் | — நிற்பதாய் | ச்ரியம் அபி | — ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் |
| பரிபுல்லத் புண்டரீகம் | மலர்ந்த தாமரைப் பூக்களை யுடையதாய் | அஸ்யா: | — இந்தத்திருமகளுடைய |
| ரங்கதுர்ய அபிதாநம் | ஸ்ரீரங்கநாதனென்னும் திரு நாம முடையதான | ப்ரதிபலநம் இவ (ஸ்திதாம்) | ப்ரதிபிம்பம் போன்றவள |
| தடாகம் | — பொய்கையை | விச்வம்பராம் ச | — நிலமகளையும் |
| பிப | — பானம் பண்ணு. | பச்ய | — ஸேவி. |

* * *—கீழ்ச்லோகத்திற்கும் இந்த ச்லோகத்திற்கும் சப்தங்களில் பேதமே யொழிய அர்த்தத்தில் பேதமில்லை. பெரும்பாலும் கீழ்ச்லோகத்தின் கருத்தையே

Srivatsam
http://acharya.org

கொண்டதாம் இதுவும். ஒரு அர்த்தத்தையே சப்தபேதத்தாலே மீளவும் அநுஸந்திப்பதில் ஒருவகையான போக்யதை உண்டாகையாலே இதில் புநருக்தி தோஷம் சங்கிக்கவேண்டா. ஒரு ஜாதியான முத்துக்களை கோக்கிறவனுடைய ஸாமர்த்தியத்தினால் பலவகையான உருவங்களைப்பெற்று, பொலிவையும் விலையுயர்த்தியையும் பெறுகின்றனவன்றோ. அன்றியும் அர்த்தத்தில் சிறிதுபேதமும இங்கு உண்டு; கீழ் ச்லோகத்தில் 'உபயாத' என்கிற க்ரியாபதத்தினால் எம்பெருமானாகிற தாமரைப் பொய்கையின் அருகே செல்லுதல் மாத்திரம் ப்ரஸ்தாவிக்கப்பட்டது; இதில் "பிபநயந புரஸ் தே" என்கையாலே அவகாஹநாதிகள் விதிக்கப்பட்டனவாம். இதில் அவகாஹநமாவது 'அணியரங்கனென்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்னுமாபோலே கண்களாலாரப் பருகுகையேயாம்.

ரங்கதுர்யாபிதாநம் ஸ்திதம் தடாகம்=உலகத்தில் காணும் பொய்கையானது தரையிலே பரந்திருக்கும்; ரங்கநாதனாகிற இப்பொய்கையானது (புருஷரூபியாய்) நின்றுகொண்டிருக்கிறதென்கிறார். உலகிற்காணும் பொய்கைகளில் உள்ள தாமரைப் பூக்கள் மலர்வதும் மூடுவதும் வாடுவதுமாயிருக்கும்; இங்கு அங்ஙனன்றியே ஒருபடிப்பட மலர்ந்தேயிருக்குமென்கிற வாசியும் 'பரிபுல்லத் புண்டரீகம்' என்றதனால் தெரிவிக்கப்பட்டது.

(64)

सौशील्यशीतलमवेलकृपातरङ्गसंप्लाविताखिलमकृत्रिमभूम निम्नम् ।
लक्ष्म्या च वासितमभूम विगाहमानाः श्रीरङ्गराजमिषपद्मसरः प्रसन्नम् ॥६५॥

ஸௌசீல்யசீதல மவேலக்ருபாதரங்க ஸம்ப்லாவிதாகில மக்ருத்ரிமபூம நிம்நம்.
லக்ஷ்ம்யா ச வாஸிதமபூம விகாஹமாநா: ஸ்ரீரங்கராஜமிஷபத்மஸர: ப்ரஸந்நம்.(65)

| | | | |
|---|---|---|---|
| ஸௌசீல்ய சீதலம் | ஸௌசீல்ய குணத்தினால் குளிர்ச்சிபெற்றதும் | நிம்நம் | அளவிடமுடியாத குணவிபூதிகளையுடையதாய் (2) ஆழ்ந்ததாய் |
| அவேல | — கரைகடந்து பெருகுகின்ற | லக்ஷ்ம்யா வாஸிதம் ச | பிராட்டியினால் பரிமளம்பெற்றதாய் |
| க்ருபா தரங்க | — அருளாகிற அலையினால் | ப்ரஸந்நம் | — தெளிந்ததான |
| ஸம்ப்லாவித | — நீராட்டப்பட்ட | ஸ்ரீரங்கராஜ மிஷபத்மஸர: | ஸ்ரீரங்கநாதனென்னும் தாமரைத் தடாகத்தை |
| அகிலம் | ஸமஸ்த ஜனங்களையுமுடையதாய் | விகாஹமாநா: | — குடைந்தாடுமவர்களாக |
| அக்ருத்ரிமபூம | இயற்கையான பெருமையையுடையதான | அபூம | — ஆனோம். |

***—கீழிரண்டு ச்லோகங்களிலும் தடாகமாக வருணிக்கப்பட்ட எம்பெருமானுக்கு அந்தத் தடாகமாயிருக்குந்தன்மைக்கு உரிய மற்றுஞ்சில பொருத்தங்களையும் நிரூபித்துக்கொண்டு இப்பொய்கையிலே தாம்படிந்து குடைந்தாடப் பெற்றமையைப் பேசுகிறாரிதில்.

ஸௌசீல்ய சீதலம்=பொய்கைகட்குக் குளிர்ச்சி இயற்கையாயிருக்கும்; எம்பெருமானாகிற பொய்கையும் ஸௌசீல்யத்தாலே குளிர்ச்சி நிரம்பியிருக்கும்; பரத்வமே பொலிய நின்றால் நெருப்புப்போலே அணுக வொண்ணாதபடியிருக்குமே; தாழ்ந்தவர்க

ளோடும் புரையறக் கலந்து பரிமாறுகையாகிற ஸௌசீல்யப் பொலிகையாலே தாபா துரர்கள் தண்ணீரிலே விழுமாபோலே தாபத்ரயாதுரர்கள் கூசாதே வந்து படியும் படியிருக்கு மிப்பொய்கை.

அவேலக்ருபாதரங்க ஸம்ப்லாவிதாகிலம்=உலகிற் பொய்கைகள் தம்மிடத்துண் டாகும் அலைகளினால் ஸாமாந்யரோடு விசேஷஜ்ஞரோடு வாசியற அனைவரையும் ஸ்நா நம் பண்ணுவிக்கும்; எம்பெருமானாகிற இப்பொய்கையும் கரையழியப் பெருகுகின்ற க்ருபாரஸ ப்ரவாஹத்தினால் இன்னானினியானென்று தரம்பாராதே அனைவரையும் போஷிக்குமென்க.

அக்ருத்ரிமபூம=பஹோர் பாவ:— பூமா; அதாவது பெருமை. பொய்கையின் பக்ஷத்தில் உருவத்தினால் பெருமையும் எம்பெருமான் பக்ஷத்தில் குணங்களினால் பெரு மையும் கொள்க. ஆகவே இயற்கையான பெருமையை யுடைத்தாயிருக்கை ஒக்கும். நிம்நம்=பொய்கை ஆழமாயிருக்கும்; எம்பெருமானும் ஸ்வரூப ரூபகுண விபூதிகளிற் கரைகாண வொண்ணாதபடி அபரிச்சேத்யனாயிருப்பன். லக்ஷ்ம்யா ச வாஸிதம்=பொய் கைகளில் புஷ்பங்களின் நறுமணம் கமழும்; எம்பெருமான் பிராட்டியினால் பரிமளம் பெற்றிருப்பன். ப்ரஸந்நம்=பொய்கை தெளிந்திருக்கும்; எம்பெருமானும் புருஷகார பூதையான பிராட்டியின் சேர்க்கையினாலே அபராதிகளான ஆச்ரிதர் திறத்திலே கலக்கம் நீங்கித் தெளிந்த திருவுள்ளங் கொண்டிருப்பன். ஆக இவ்வகைகளாலே ஒரு தாமரைப் பொய்கையாக ரூபிக்கலாம்படியுள்ள ஸ்ரீரங்கநாதனை யநுபவிக்கப் பெற்றோ மென்றாராயிற்று.

முதல் பாதத்தில் "அபார க்ருபாதரங்க" என்றும் பாடமுண்டு. மீனும்— வியாஜம்.

सिहासने कमलया क्षमया च विश्वमेकातपत्रयितुमस्मदसून्निषण्णम् ।
लक्ष्मीस्वयंवरसनाथितयौवनश्रीसौन्दर्यसंपदवलिप्तमिवालिहीय ॥६६॥

ஸிம்ஹாஸநே கமலயா க்ஷமயா ச விச்வம் ஏகாதபத்ரயிதுமஸ்மதஸூந் நிஷண்ணம்,
லக்ஷ்மீஸ்வயம்வரஸநாதிதயௌவநஸ்ரீ ஸௌந்தர்யஸம்பதவலிப்தமிவாலிஹீய. (66)

| | | | |
|---|---|---|---|
| விச்வம் | — ஸமஸ்த சராசரங்களையும் | ஸநாதித | க்ருதார்த்தமாகப் பண்ணப் பட்டு |
| ஏக ஆதபத்ர யிதும் | ஒற்றைக் குடையுடையதாகச் செய்வதற்கு | யௌவநஸ்ரீ | — யௌவநச் சோபையென்ன |
| கமலயா | திருமகளோடும் | ஸௌந்தர்ய ஸம்பத் | அழகாகிற செல்வமென்ன |
| க்ஷமயா ச | நிலமகளோடும் | | (இவற்றால்) |
| ஸிம்ஹாஸநே | — சிங்காசனத்தில் | அவலிப்தம் இவ | செருக்குக் கொண்டவன் போல இருப்பவனுமான ஸ்ரீரங்கநாதனை |
| நிஷண்ணம் | — எழுந்தருளி யிருக்கின்றவனும் | ஆலிஹீய | போக்யமாக அநுபவிக்கக் கட வேன். |
| அஸ்மத் அஸூந் | — என் உயிராயிருப்பவனும் | | |
| லக்ஷ்மீ | — பெரியபிராட்டியாருடைய | | |
| ஸ்வயம்வர | — ஸ்வயம்வரத்தினால் | | |

* * *—கோப்புடைய சீரிய சிங்காசனத்திலே, உலகத்தையெல்லாம் வாழ்விக்கத் திருமடந்தை மண்மடந்தை யிருபாலும் திகழ எழுந்தருளி யிருக்கின்றவரும், "என்

Srivaishnavam

http://acharya.org

திருமகள் சேர் மார்பனே யென்னுமென்னுடையாவியே" என்னுமாப்போலே உயிர் நிலையாயிருப்பவரும், பெரிய பிராட்டியார் தானே ஸ்வயம்வரங்கொள்கையாலே யௌவனமும் ஸௌந்தர்யமும் ஸார்த்தகமாகப் பெற்றவரும் அதனால் மேன்மையானவர் போன்றுள்ளவருமான பெருமாளை வாய்மடுத்துப் பருகிக் களிக்க விரும்புகிறார்.

விச்வம் ஏகாதபத்ரயிதும் =உலகுக்கெல்லாம் எவன் அரசனோ அவனொருவனே ஆதிராஜ்ய லக்ஷணமான ஒற்றைவெண் கொற்றக்குடையின்கீழ் அமர்வான்; பலர் அரசர்களாயிருக்க நேர்ந்தால் பல குடைகள் ஏற்படும். எல்லாரையும் நியமித்துக் கொண்டு எம்பெருமானொருவனே ராஜாதிராஜனாக விளங்குகின்றமையால் பலகுடைகட்கு ப்ரஸக்தியில்லை, ஒரு குடையே உள்ளது. உலகமெல்லாம் அந்த ஒரு குடை நிழலிலே ஒதுங்கும்படியாக என்றபடி. அவரவர்களுடைய ஸ்வாதந்திரியத்தை யறுத்துப் பாரதந்திரியமே விளங்க வாழ்விக்கும் பொருட்டு என்றதாயிற்று.

அஸ்மத் அஸௌ=அஸ்மத் சப்தம் நித்யம்பஹுவசநம். ஸ்ரீரங்கநாதனுக்கு விசேஷணம். பிராட்டியோடே அணையப்பெறுவதில் பெருமாளுடைய யௌவனமும் அழகும் காட்டிலெரித்த நிலாப்போலே விபலமாகும்; அப்படியாகாமே பிராட்டி தானே மேல் விழுந்து அநுபவிக்கப்பெற்ற பெருமையைப் பேசுகிறார் லக்ஷ்மீ ஸ்வயம்வரே த்யாதியால் ஆலிஹ்ய— "விழுமியவமரர் முனிவர் விழுங்கும் கன்னற்கனி" என்கிற ஸமாதியாலே எம்பெருமானை விழுங்க விரும்புகிறபடி. ... (66)

आपादमूलमणिमौलि समुल्लसन्त्या स्वातन्त्र्यसौहृदतरङ्गितयाऽङ्गभङ्ग्या ।
सख्यं समस्तजनचेतसि सन्दधानं श्रीरङ्गराजमनिमेषमनुस्रियास्म ॥६७॥

ஆபாதமூலமணிமௌலி ஸமுல்லஸந்த்யா
ஸ்வாதந்த்ர்ய ஸௌஹ்ருததரங்கிதயாங்கபங்க்யா,
ஸக்ய்யம் ஸமஸ்தஜநசேதஸி ஸந்ததாநம்
ஸ்ரீரங்கராஜமநிமேஷமநுஸ்ரியாஸ்ம. (67)

| | | | |
|---|---|---|---|
| ஆபாத மூல மணி மௌலி | திருவடிதொடங்கித் திருமுடியளவும் | ஸமஸ்தஜந சேதஸி | ஸகல ஜநங்களினுடையவும் நெஞ்சில் |
| ஸமுல்லஸந்த்யா | — விளங்குகின்றதாய் | ஸக்ய்யம் | — அன்பை |
| ஸ்வாதந்த்ர்ய ஸௌஹ்ருத தரங்கிதயா | மேன்மையும் நீர்மையும் ஒருங்கே அலையெறியப்பெற்றதான | ஸந்ததாநம் | — விளைவிக்கின்ற |
| | | ஸ்ரீரங்கராஜம் | — ஸ்ரீரங்கநாதனை |
| அங்கபங்க்யா | அவயவங்களின் ஸந்நிவேசத்தால் | அநிமேஷம் | — இமைக்கொட்டுதலின்றியே |
| | | அநுஸ்ரியாஸ்ம | — அநுவர்த்திக்கக் கடவோம். |

* * *—திருவடியே பிடித்துத் திருமுடியளவும் உள்ள திவ்யாவயவங்களில் ஸ்வாதந்திரியம் விளங்குவதுபோலே ஸர்வபூத ஸுஹ்ருத்தாயிருக்குந் தன்மையும் விளங்குகையாலே ஸமஸ்த ஜநங்களினுடையவும் உள்ளத்தில் ப்ராவண்யத்தை விளைவிக்கின்ற அழகிய மணவாளப் பெருமாளை இமைக்கொட்டாமல் அநுவர்த்திக்கக் கடவோமென்கிறார்.

http://acharya.org

கிழ்ச்லோகத்தில் 'அவலிப்தம்' என்றார்; பிராட்டியோடு அணையப் பெறுகை யசாலே வீறுபெற்ற யௌவந ஸௌந்தர்யங்களை யுடையனைக் கொண்டு செருக் கடைந்த பெருமாள் என்றார்; அப்படி கர்வங்கொண்டிருக்கும் பெருமாளை நாம் அணுக முடியுமோ என்கிற சங்கை பிறவாமைக்கு இந்த ச்லோமருளிச் செய்யப்பட்டது. ஒவ்வொரு அவயவத்திலும் ஆகர்ஷகத்வம் நன்கு பொலிகையாலே எல்லோரும் விச்வஸித்து அணுகக் கூசாதே நெருங்குகைக்கு உடலாயிருக்கு மென்கை.

"அநுச்ரியாஸ்ம" என்றும் "அநுச்ரயாஸ்ம" என்றும் வழங்கும் பாடங்கள் பிழை. ச்ரிஞ்தாதுவின்மேல் அந்த ரூபங்கள் தேற வழியில்லை 'அநுஸ்ம்ரயாஸ்ம' = அநுஸரிக்கக்கடவோம். (67)

क्षितिकमलनिवासाकल्पवल्लीसलीलोल्लुठनदशदिशोद्यद्यौवनारम्भजृम्भः ।
श्रममपहरतां मे रङ्गधामेति तत्तद्वरमयफलनम्रः पत्रलः पारिजातः ॥६८॥

க்ஷிதிகமலநிவாஸாகல்பவல்லீஸலீலோல்லுடநதசதிசோத்யத்யௌவநாரம்ப ஜ்ரும்ப:,
ச்ரமமபஹரதாம் மே ரங்கதாமேதி தத்தத்வரமயபலநம்ர: பத்ரல: பாரிஜாத: (68)

| | | | |
|---|---|---|---|
| க்ஷிதி கமல நிவாஸா | நிலமகளும் திருமகளுமாகிற | பத்ரல: | — இலைகள் நிரம்பியதாய் |
| கல்பவல்லீ | — கற்பகக்கொடிகளின் | தத்தத்வரமய, பல நம்ர: | அவரவர்கள் பெறும் வரங்களாகிற பழங்களினுல் வணக்கமுற்றதான |
| ஸலீல உல்லுடந | விலாஸத்தோடு கூடின ஆலிங்கனத்தினுல் | ரங்கதாமா இதி பாரிஜாத: | ஸ்ரீரங்கநாதனென்னும் பாரிஜாத வ்ருக்ஷமானது |
| தச திசா உத்யத் | பத்துத்திசைகளிலும் விளங்குகின்ற | மே | — என்னுடைய |
| யௌவந ஆரம்ப ஜ்ரும்ப: | யௌவநத் தொடக்கத்தின் வைலக்ஷண்யத்தையுடைத்தாய், | ச்ரமம் | — விடாயை |
| | | அபஹரதாம் | — தொலைத்திடுக. |

* * *—"நிவாஸவ்ருக்ஷஸ் ஸாதூநாம்" என்றும் "வாஸுதேவதரு" என்றும் எம்பெருமானை நிழல்தரும் வ்ருக்ஷமாகச் சொல்லியிருப்பதுண்டு; "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்று கல்பவ்ருக்ஷமாகவும் நம்மாழ்வாரருளிச் செய்தார். அந்த ஸமாதியைக்கொண்டே இந்த ச்லோகமருளிச் செய்கிறார்; கல்பவ்ருக்ஷத்திலே கற்பகக் கொடிகள் படருமாகையால் இந்த ரங்கநாதனுகிற கல்பவ்ருக்ஷத்திலே திருமகளும் மண்மகளுமாகிற கற்பகக் கொடிகள் படரப்பெற்றன வென்கிறார். 'கலசஜலதிகந்யா வல்லரீ கல்பசாகீ' என்றார் தேசிகனும்.

[தசதிசோத்யத் யௌவநாரம்பஜ்ரும்ப:] ஸ்ரீரங்கவிமானத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய யௌவநம் பத்துத்திசைகளிலும் வியாபித்ததென்றல் தாத்பர்யம் விளங்கவில்லையே யென்பர் சிலர்; பரப்ரஹ்மரூபியான ஸ்ரீரங்கநாதனுடைய ஸ்வரூபம் ஸர்வதேச வ்யாபகமாகையாலே அவ்வஸ்துவுக்கு உண்டாகும் யௌவநமும் ஸர்வவ்யாபகமாயிருக்குமிறே. பரமரஸிகைகளான பிராட்டிமாரோடே எம்பெருமான் லீலா ரஸங்களை அநுபவிக்கும்போது ஸாதாரணமான திருமேனியோடு அநுபவிக்கப் பார்த்தால் போராமையாலே "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய்" என்றாப் போலே விச்வ

Srivatsa

http://acharya.org

வரூபமெடுத்து அநுபவிக்க வேண்டியதாயிருக்கும்; அவ்விஷயத்தை இங்கு அநுஸந்திப்பது. இவர்தாமே ஸ்ரீகுணரத்நகோசத்தில் "*அநுகலதநுகாண்டாலிங்கநாரம்பகம்பத்ப்ரதிஸிபுஜகக ஸ்ரீலகாநோகலார்த்தி:" என்றும் "போகோபோத்காத கேலீகலகித பகவத் வைச்வரூப்யாநுபூவை" என்றும் "துசசதுபாணி பாத...... விநிமஜ்ஜதி தே," என்றும் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளின் தாத்பர்யத்தையும் நோக்கினால் இந்த ச்லோகத்தின் கருத்து ஹ்ருதயங்கமமாகும்.

யௌவநாரம்பஜ்ரும்ப: =யௌவநத்தின் ஆரம்பஸமயத்தில் இருக்கக்கூடிய மெருணிப்பே எப்போதும் நிலைத்திருக்குமென்பது விவக்ஷிதம். நாள்செல்லச் செல்லத் தளருகை யின்றியே நித்யயுவாவா யிருக்கை. ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் (56) "ரம்பாஸ்தம்பா: ..... நததி நததா யௌவநாரம்பஜ்ரும்பா:" என்றருளிச்செய்தது இங்கே நினைவுக்குவரும்.

நத்தத்வரமயபலநம்ர: = வ்ருக்ஷமானது பழங்கள் நிரம்பப்பெற்றுக் கனத்தினால் வணங்கியிருக்கும்; எம்பெருமானும் "ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு:" என்கிறபடியே அவரவர் விரும்பும் பலவகைப் பலன்களையும் அளிக்கவல்ல சக்தியினால் புஷ்கலனாயிருப்பவனென்கை. பத்ரல:=வ்ருக்ஷத்தில் இலைகள் பசுகுபசுகென்று செழித்திருக்கும். எம்பெருமான் பக்ஷத்தில் யௌவநப்ராதுர்ப்பாவத்திற்கு உரிய திவ்யாவயங்களின் புகர் பத்ரசப்தலக்ஷ்யமாகும். ஆக இவ்வகைகளாலே பாரிஜாத வ்ருக்ஷமென்னலாம் படியுள்ள அழகிய மணவாளன் தாபஹாரத்வமாகிற வ்ருக்ஷகார்யத்தை என்திறத்தில் செய்தருள வேணுமென்றதாயிற்று. ... (68)

संभाषमाणमिव सर्ववशंवदेन मन्दस्मितेन मधुरेण च वीक्षणेन।
दिव्यास्त्रपुष्पितचतुर्भुजमत्युदारं रङ्गास्पदं मम शुभाश्रयमाश्रयाणि ॥६९॥

ஸம்பாஷமாணமிவ ஸர்வவசம்வதேந மந்தஸ்மிதேந மதுரேண ச வீக்ஷணேந,
திவ்யாஸ்த்ர புஷ்பிதசதுர்ப்புஜமத்யுதாரம் ரங்காஸ்பதம் மம சுபாச்ரயமாச்ரயாணி (69)

| | | | |
|---|---|---|---|
| ஸர்வ வசம்வதேந | எல்லாரையும் வசீகரிக்கவல்ல | அதி உதாரம் | — மிகவும் உதாரரும் |
| மதுரேண | — இனிமையான | மம | — அடியேனுக்கு |
| மந்தஸ்மிதேந | — புன்முறுவலாலும் | சுப ஆச்ரயம் | நல்ல புகலிடமாயிருப்பவருமான |
| வீக்ஷணேந ச | — நோக்காலும் | | |
| ஸம்பாஷமாணம் இவ (ஸ்திதம்). | பேசுகிறவர்போலே யிருப்பவரும் | ரங்க ஆஸ்பதம் | அரங்கமா நகரமர்ந்த பெருமானை |
| திவ்ய அஸ்த்ர புஷ்பித சதுர்ப்புஜம் | திவயாயுதங்களினால் பூத்திருக்கின்ற நான்கு திருக்கைகளை யுடையவரும் | ஆச்ரயாணி | — ஆச்ரயிக்கக் கடவேன். |

* * *—அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவருகின்ற அவ்யக்தமதுர மந்தஹாஸவிலாஸத்தினாலும் பரமக்ருபை பொலிகின்ற திருக்கண்ணோக்கினாலும் நிறைந்த திவ்யமங்களவிக்ரஹத்தை நோக்குங்கால் 'அழகிய மணவாளப் பெருமாள் அபிமத ஜநங்களோடே சோதிவாய் திறந்து வார்த்தையருளிச் செய்கிறாரோ' என்று சங்கிக்கலாம்படியிருக்குமிறே. அந்த நிலைமையை அநுபவிக்கிறார் இதில்.

http://acharya.org

**ஸர்வவசம்வதேந** = தத்புருஷஸமாஸமாகக் கொண்டால் 'எல்லார்க்கும் எளிதான மந்தஹாஸம்' என்று பொருள்படும்; பஹுவ்ரீஹி ஸமாஸமாகக்கொண்டால் 'எல்லாரையும் வசப்படுத்திக் கொள்ளுகிற மந்தஹாஸம்' என்று பொருள்படும்.

**திவ்யாஸ்த்ரபுஷ்பித சதுர்ப்புஜம்** = திருவாய்மொழியில் "சன்மம் பலபல செய்து" (3—10—1.) என்றபாட்டின் ஈட்டிலே 'ஒள்வாள் தண்டுகொண்டு' என்றவிடத்திலே—"ஒரு கற்பகத்தரு பணைத்துக் கணுத்தோறும் அரும்பினாற்போலே யாயிற்று வடிவும் இவ்வாயுதங்களும் சேர்ந்த சேர்த்தி இருப்பது" என்றருளிச் செய்தவை இங்கு அநுஸந்தேயம். கீழ்ச்லோகத்தில் எம்பெருமானைப் பாரிஜாதவ்ருக்ஷமாகச் சொல்லி இலைகளும் பழங்களும் நிரம்பியிருக்கின்றமையை அதுதன்னிலே அருளிச்செய்தார்; புஷ்பஸம்ருத்தியை இதிலே அருளிச்செய்தாராயிற்று.

**ரங்காஸ்பதம்** = ஸ்ரீரங்கவிமாநத்தை ஆஸ்பதமாக [இருப்பிடமாக] உடையவர். சுபாச்ரய மென்றது சுபமான ஆச்ரயமென்றபடி. ஒரு கெடுதலும் விளையாதே நன்மைகளே விளையத் தகுந்த புகலிடமென்கை.

एते शङ्खगदासुदर्शनभृतः क्षेमंकरा बाहवः पादद्वन्द्वमिदं शरण्यमभयं भद्रं च वो हे जनाः!
इत्यूचुष्यभयङ्करे करतले स्मेरेण वक्त्रेण तद्याकुर्वन्निव निर्वहेन्मम धुरं श्रीरङ्गसर्वंसहः ॥७०॥

ஏதே சங்ககதாஸுதர்சநப்ருத: க்ஷேமங்கரா பாஹவ:,
பாதத்வந்த்வமிதம் சரண்யமபயம் பத்ரஞ்ச வோ ஹே ஜநா:
இத்யூசுஷ்யபயங்கரே கரதலே ஸ்மேரேண வக்த்ரேண தத்,
வ்யாகுர்வந்நிவ நிர்வஹேந்மம துரம் ஸ்ரீரங்கஸர்வம்ஸஹ: (70)

| | | | |
|---|---|---|---|
| ஹே ஜநா: | — "ஓ ஜனங்களே!, | இதி | — என்று |
| சங்க கதா ஸுதர்சந ப்ருத: | சங்கு கதை சக்கரம் ஆகிய இவற்றை ஏந்தியிருக்கின்ற | அபயங்கரே கரதலே ஊசுஷி ஸதி | அபய முத்ரையோடு கூடின திருக்கையானது தெரிவிக்குமளவில் |
| ஏதே பாஹவ: | — இந்தத் திருக்கைகள் | தத் | — அவ்விஷயத்தை |
| வ: | — உங்களுக்கு | ஸ்மேரேண | — புன்முறுவல்கொண்ட |
| க்ஷேமங்கரா: | — க்ஷேமமளிப்பன; | வக்த்ரேண | — திருமுக மண்டலத்தினால் |
| இதம் பாத த்வந்த்வம் | இத்திருவடியிணைகள் | வ்யாகுர்வந் இவ (ஸ்தித:) | வியாக்யானம் செய்பவர் போன்றுள்ள |
| (வ:) | — உங்களுக்கு | ஸ்ரீரங்க ஸர்வம் ஸஹ: | திருவரங்கப் பெருமாள் |
| சரண்யம் | — புகலாயும் | | |
| அபயம் | — அபய மளிப்பதாயும் | மம துரம் | — அடியேனுடைய பாரங்களை |
| பத்ரஞ் ச | நன்மை தருவதாயு மிருக்கின்றது" | நிர்வஹேத் | — தாமே நிர்வஹிக்கக் கடவர். |

* * *—நம்பெருமாளுடைய நான்கு திருக்கைகளுள் ஒன்று அபயமுத்ரையோடு கூடியது; மற்ற மூன்று திருக்கைகள் திருவாழி, திருச்சங்கு, கதை ஆகிய மூன்று திவ்யாயுதங்களையுடையன. ஆகவிந்த நான்கு திருக்கைகளுள் அபயமுத்ரிதமான ஒரு திருக்கையானது ஸகல ஜநங்களையும் நோக்கி 'வாரீர்காள்! சங்க சக்ரகதைகளை ஏந்தியுள்ள இந்தக் கைகளானவை உங்களுக்கு எல்லா வகையான க்ஷேமங்களையும்

Srivatsam

http://acharya.org

விளைப்பன; ஸர்வஸாசர்ரயணீயமாய் விளங்குகின்ற இந்த அடியிணையானது உங்களுடைய பயங்களை யெல்லாம் தொலைத்து அநிஷ்டநிவ்ருத்தி பூர்வமாக இஷ்டங்களை யளிக்க வல்லது' என்று ஸூசனை செய்வது போன்றுளதாம்; இவ்விதமாக அபயஹஸ்தத்தினால் ஸூசிப்பிக்கப்பட்ட விஷயத்தைப் புன்முறுவல் கொண்ட திருமுக மண்டலமானது ஸங்கேதஹ மற வியாக்கியானம் செய்வது போன்றுளதாம். இப்படிப் பட்ட நிலைமையோடே ஸேவைஸாதிக்கின்ற அழகிய மணவாளப் பெருமாள் "யோக க்ஷேமம் வஹாம்யஹம்" என்று கீதையில் வாயோலைசெய்து கொடுத்தபடியே அடியேனுடைய யோகக்ஷேம நிர்வாஹகராக ஆகவேணுமென்றதாயிற்று.

இத்யூசிஷி என்ற பாடம் பிழை; இத்யூசுஷி, என்று ஓதுக. ஊசிவாந் என்பது ப்ரதமை; ஊசுஷி என்பது ஸப்தமி.

**ஸ்ரீரங்கஸர்வம்ஸஹ:** = ஸர்வம்ஸஹரென்றது ஸர்வலோக நிர்வாஹகரென்றபடி; ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளியிருக்கும் ஸர்வலோக துரந்தரரான பெருமாள் என்கை. அன்றியே, '**ஸர்வம்ஸஹா**' என்று பூமிக்குப்பெயர்; திருவரங்கத்தை க்ஷேத்ரமாகவுடையவர் என்றாகவுமாம். அப்போது பஹுவ்ரீஹிஸமாஸம் (70)

**अङ्गैरहंप्रथमिकाचरितात्मदानैरामोदमाननवयौवनसावलेपैः ।**
**है! पारिजातमिव नूतनतायमानशाखाशतं (हृदि दधी) कथमधीमहि रङ्गधुर्यम् ॥७१॥**

**அங்கைரஹம்ப்ரதமிகாசரிதாத்மதாநை:**
**ஆமோதமாநநவயௌவநஸாவலேபை:,**
**ஹை பாரிஜாதமிவ நூதநதாயமாந**
**சாகாசதம் (ஹ்ருதி ததீ) கதமதிமஹி ரங்கதுர்யம்.** **(71)**

| | | | |
|---|---|---|---|
| அஹம்ப்ரதமிகா ஆசரித ஆத்ம தாநை: | (அநுபவவிஷயமாவதற்கு) 'நான் முன்னே நான் முன்னே' யென்று முற்பட்டு வந்து தம்மை அநுபவிக்கக் கொடுக்கின்றவைகளும் | பாரிஜாதம் இவ (ஸ்திதம்) | பாரிஜாத வ்ருக்ஷம் போன்றுள்ள |
| ஆமோதமாந நவ யௌவந ஸாவ லேபை: | பரிமளிக்கின்ற புதிய யௌவனத்தினால் செருக்குக் கொண்டவைகளுமான | ரங்கதுர்யம் | — ஸ்ரீரங்கநாதனை |
| | | ஹ்ருதி | — நெஞ்சிலே |
| | | ததிமஹி? | — தாங்கக்கடவோமோ? [எப்படி தாங்குவது] |
| அங்கை: | — அவயவங்களினால் | | |
| நூதந தாயமாந சாகாசதம் | புதிசு புதிசாகச் செழித்து வளர்கின்ற பல கிளைகளை யுடைத்தான | ஹை | — கஷ்டம்! |

* * * இந்த ச்லோகத்தின் ஈற்றடியில் "கதமதீமஹி" என்றும் "**ஹ்ருதி ததீமஹி**" என்றும் இரண்டுவகையான பாடங்கள் வழங்கிவருகின்றன. வ்யாகரண சாஸ்த்ரப்படி "**அதீயீமஹி**" என்றாவது **அதீமஹே** என்றாவது ரூபம் நிஷ்பந்நமாகுமேயல்லது **அதீமஹி** என்று ரூபம் நிஷ்பந்நமாக வழியில்லை யென்கிற அபிப்ராயம் பல வித்வான்களுடையது; இந்த ஸ்தவத்தின் முதல்ச்லோகத்தின் உரையிலே அடியேன் விமர்சித்து எழுதியுள்ள வியாகரணவிசாரத்தினால் '**அதீமஹி**' என்கிற ரூபநிஷ்பத்தி ஒரு

http://acharya.org

வாறு பொருந்தலாம் என்று காட்டியுள்ளதனால் இங்கு கதமதீமஹி என்னும்பாடமும் இருக்கலாமென்க. ப்ரக்ருதத்தில் அர்த்தஸ்வாரஸ்யம் அதிசயித்திருப்பதும் இப்பாடத்திலே யாகையாலே இதுவே முக்யபாடமாக இருக்கத் தகுமென்பதும் விவக்ஷிதம் பூர்வவ்யாக்யாதாக்கள் கொண்டபாடமும் இதுவே. சில ஏட்டுப்பிரதிகளில் ஹ்ருதி த,தீமஹி என்கிற பாடமும் காண்கிறது. நிற்க.

அழகிய மணவாளனுடைய யௌவநச் செருக்குக் கொண்ட திவ்யாவயவங்கள் என்னைக்கொள், 'என்னைக்கொள்' என்று ஒவ்வொன்றும் முற்பட்டு மேலவிழுந்து அநுபவிப்பிக்கவே, பெருங்காற்று மழையிலே கனிகள் ஒருங்கே உதிர்ந்தால் எதை யெடுத்து நுகர்வது! என்று தடுமாறிநிற்குமாபோலே தமக்குத் தடுமாற்றம் நேர்ந்தமை இந்த ச்லோகத்தில் விளங்கும்.

த்ருதீயாவிபக்திக்கு அபேதம் அர்த்தமாகக் கொள்வதுண்டு; 'தாந்யேந தநவாந்' இத்யாதிகளிற் காணலாம், அப்படியே இங்கும் 'அங்கை:' என்ற த்ருதீயைக்கு அபேதம் பொருளாகும். 'என்னை முன்னே அநுபவி' 'என்னை முன்னே அநுபவி' என்று முற்பட்டு மேல்விழுந்துவருகிற திவ்யாவயங்களாகிற புதிய பரந்தசாகைகளையுடைத்தான ஸ்ரீரங்கநாத பாரிஜாதத்தை எப்படி அநுபவிப்பேன் என்கிறார். "தோள் கண்டார் தோளே கண்டார்...... தாள் கண்டார் தாளே கண்டார்" என்னுமாபோலே ஒவ்வோரவயவந்தன்னிலே அழுந்திவிடலாயிருக்கு மத்தனையொழிய ஸகலாவயவங்களிலும் ஊன்றிப் பூர்ணாநுபவம்பண்ணுகை அரிது என்று தெரிவித்தபடியாம். அங்ஙனாகில் ஸர்வாவயவங்களையும் க்ரமேண இவர் அநுபவித்துப் பேசுகிறாரே, அஃது எப்படி? என்று கேட்போர், மேலே "ஏகைகஸ்மிந் பரமவயவே" என்ற (89) ச்லோகம் கண்டு தெளிக.

"நூதநதாயமாந......" என்றவிடத்து 'நூதநதா— புதிதாயிருக்கையை, அயமாந—அடைகின்ற' என்று சிலர் உரைப்பது பொருந்தாது. 'தாயர்—ஸந்தாநே என்றதாதுவில் நிஷ்பந்நமாகின்ற 'தாயமாந' பதம் இங்கு உணரத்தக்கது.

'ஹ்ருதி தநீமஹி' என்றபாடத்தில் காகுஸ்வரமாகக் கொண்டு உரைத்தால் பொருந்தும்'ஹை—விஷாதஸூசகமான அவ்யயம். ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிக்கக் கிடைக்கவில்லையே! என்கிற வருத்தம். (71)

आलोका हृदयालवो रसवशादीशानमीषत्स्मितं प्रच्छायानि वचांसि पद्मनिलयाचेतश्शरव्यं वपुः ।
चक्षुष्मन्ति गतागतानि त इमे श्रीरङ्गशृङ्गार! ते भावा यौवनगन्धिनः किमपरं सिञ्चन्ति चेतांसि नः ॥७२॥

ஆலோகா ஹ்ருதயாலவோ ரஸவசாதீசாநமீஷத்ஸ்மிதம்,
ப்ரச்சாயாநி வசாம்ஸி பத்மநிலயாசேதச்சரவ்யம் வபு:.
சக்ஷுஷ்மந்தி கதாகதாநி த இமே ஸ்ரீரங்கச்ருங்கார தே
பாவா யௌவநகந்திந: கிமபரம் ஸிஞ்சந்தி சேதாம்ஸி ந:. (72)

ஸ்ரீ புண்டரீக

| | | | |
|---|---|---|---|
| ஹே ஸ்ரீரங்க ச்ருங்கார | கோயிலில் ச்ருங்கார ரஸமே வடிவெடுத்து நிற்பது போன்றுள்ளபெருமாளே! | பத்மாலயா சேதஸ் சௌர்யம் | பங்கயத்தாளான பிராட்டியின் திருவுள்ளத்திற்கு இலக்காயிருக்குமது; |
| தே | — உன்னுடைய | கத ஆகதாநி | (திருவீதிப் புறப்பாடுகளில்) எழுந்தருள்வதும் மீண்டெழுந்தருள்வதும் |
| ஆலோகா: | — கடாக்ஷங்கள் | சக்ஷுஷ்மந்தி | — கண்ணுக்கினிமையானவை; |
| ஹ்ருத்யாஸ்ச: | (ஆச்ரிதர்களிடத்தில்) அன்போடு கூடியவை; | கிம் அபரம் | — வேறு என்ன? |
| ஈஷத் ஸ்மிதம் | — மந்த ஹாஸமானது | தே இமே | — ஆக இப்படிப்பட்ட |
| ரஸவசாத் | — ப்ரணயரஸத்தினால் | யௌவந கந்திந: பாவா: | யௌவந ஸூசகங்களான விஷயங்கள் |
| வசகம் | (அனைவரையும்) வசப்படுத்திக் கொள்ளுமது; | ந: | — அடியோங்களுடைய |
| வசாம்ஸி | — வாய்மொழிகள் | சேதாம்ஸி | — நெஞ்சுகளை |
| ப்ரச்சாயாநி | (ஸம்ஸார தாபார்த்தர்களுக்கு) நிழல் தருவன; | ஸிஞ்சந்தி | — குளிரச்செய்கின்றன. |
| வபு: | — திருமேனியானது | | |

* * *—வாரீர் அழகிய மணவாளப்பெருமாள்! தேவரீருடைய யௌவனைகாந்திகங்களான ஸ்வபாவவிசேஷங்கள் அடியோங்களுடைய நெஞ்சைக் குளிரச்செய்கின்றனவென்கிறார், தேவரீருடைய திருக்கண்ணோக்கங்கள் ஸாமாந்யமாக இல்லை, விசேஷாபிப்ராயங்களோடு கூடியிருக்கின்றன; விரஸமான பெருஞ்சிரிப்பன்றிக்கே ஸரஸமான புன்சிரிப்பானது கல்நெஞ்சரையும் வசப்படுத்திக்கொள்ளவற்றாயிராநின்றது; ஆச்ரிதஜநப்ரீதி ப்ரகர்ஷத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து சோதிவாய் திறந்தருளிச்செய்யும் வார்த்தைகள் ஸம்ஸார தாபதப்தர்களுக்கு நிழல்கொடுத்து இளைப்பாற்றுவனவாயுள்ளன; திருமேனியானது பங்கயச் செல்வியான பெரியபிராட்டியார் நெஞ்சைக் கொள்ளைகொண்டிராநின்றது; ["அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா" என்கிறபடியே தாமரைப்பூ அடிக்கொதிக்கிறதென்று அதனை விட்டு இங்கேவந்து அணையும்படியாக நிரதிசயபோக்யமாயுள்ளதென்கை.] புறப்பாடுகளில் திருவீதியலங்கரிப்பதும் மீண்டும் கோயிலுக்கு எழுந்தருள்வதுமான நடைகள் கண்கொள்ளாதவை; இப்படி வகையிட்டுச் சொல்வதென்? தேவரீருடைய யௌவனச் செருக்குக்கு உள்ளீடான ஸ்வபாவவிசேஷங்களெல்லாம் அடியோங்களின் ஹ்ருதயத்தையுருக்குகின்றன—என்றாராயிற்று.

ஸ்ரீரங்கச்ருங்கார! என்ற ஸம்போதநம் இந்த ச்லோகத்தின் பொருளுக்கு மிக்க பொருத்தமுடையது. ச்ருங்காரரஸமே வடிவெடுத்து நிற்பது போன்றுள்ள நம்பெருமாளே! என்கை. இந்த ச்லோகத்திலுள்ள பதப்ரயோகங்களெல்லாம் பரம கம்பீரமாக அமைந்த அழகு காண்மின். எம்பெருமான் திருக்கோலத்தை ஸேவிக்கும்போது அஸ்மதாதிகள் அநுஸந்திக்க வேண்டிய ச்லோகங்களுள் இது முதன்மை பெறும் (72)

आयत्किरीटमलिकोल्लसदूर्ध्वपुण्ड्रमाकर्णलोचनमनङ्कुशकर्णपाशम् ।
उत्फुल्लवक्षसमुदायुधबाहुमर्हन्नीविं च रङ्गपतिमब्जपदं भजामः ॥७३॥

ஆயத்கிரீடமளிகோல்லஸதூர்த்வபுண்ட்ரம் ஆகர்ணலோசநமநங்குசகர்ணபாசம்,
உத்புல்லவக்ஷஸமுதாயுதபாஹுமர்ஹந்நீவிஞ்ச ரங்கபதிமப்ஜபதம் பஜாம:. (73)

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| ஆயத கிரீடம் | நீண்ட திருவபிஷேகத்தை யுடையவரும் | உத் ஆயுத பாஹூம் | திவ்யாயுதங்களைக் கொண்ட திருக்கைகளை யுடையவரும் |
| லளித உல்லஸத் ஊர்த்வ புண்ட்ரம் | திருநெற்றியில் விளங்குகின்ற ஊர்த்வ புண்ட்ரத்தை யுடையவரும் | அர்ஹத் நீவிம் | ஏற்றிருக்கின்ற வஸ்த்ர பந்தனத்தை யுடையவரும் |
| ஆகர்ணலோசனம் | திருச்செவியளவும் நீண்ட திருக்கண்களை யுடையவரும் | அப்ஜ பதம் ச | தாமரைபோன்ற திருவடிகளை யுடையவருமான |
| அநங்குசகர்ண பாசம் | கட்டுத் தடங்கலற்ற சிறந்த திருச்செவிகளையுடையவரும் | ரங்க பதிம் | அழகியமணவாளப் பெருமாளை |
| உத்புல்ல வக்ஷஸம் | விசாலமான திருமார்பை யுடையவரும் | பஜாம: | — ஸேவிக்கிறோம். |

* * *—திருமுடிதொடங்கித் திருவடியீறாக ஸங்க்ரஹேண அநுபவித்துப் பேசும் ச்லோகமிது. "முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்னும்படியாய் * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியும், திருநெற்றியில் விளங்குகின்ற திவ்யோர்த்வபுண்டரமும், திருச்செவிமடல்களளவும் நீண்டு புடைபரந்து விளங்குகின்ற திருக்கண்களும், அத்திருக்கண்கள்போலே ஒருவரம்பிலே நிற்க வேண்டாமல் தடையின்றிப் பரந்து விளங்குகின்ற திருச்செவிகளும், (மார்பில்) கோலமாமணி யாரமும் முத்துத் தாமமும் குருமாமணிப்பூணும் குலாவித் திகழ்வதைப் பார்த்தால் அழகிய தொருபொழில் பூத்துக்கிடக்கின்றதோ! என்னலாம்படியுள்ள திருமார்பும், "அன்னே! ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்", என்று மதிமயக்கவல்ல திவ்யாயு தாழ்வார்களைக் கொண்ட திருக்கைகளும், மிகப்பொருந்தமான திருப்பரிவட்டச்சாத்தும், செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளுமான திவ்யாவயவாதி சோபையை யநுபவித்துப் பேசினாராயிற்று.

அநங்குசகர்ணபாசம் = கர்ணபாசமென்றது—சிறந்த காது என்றபடி. கண்களுக்கு அளவு சொல்லும்போது கர்ணாந்தவிச்ராந்த மென்று சொல்லப்படுவதால் கண்களின் பரப்பு ஓரளவோடு கூடியதாயிருக்கும்; திருச்செவிகளுக்கு அங்ஙனே ஒரு வரம்பு குறிக்கவேண்டியதில்லை யென்பது 'அநங்குச' என்னும் விசேஷணத்தின் கருத்து. (73)

अब्जन्यस्तपदाब्जमञ्चितकटीसंवादिकौशेयकं किञ्चित्ताण्डवगन्धिसंहननकं निर्व्याजमन्दस्मितम् ।
चूडाचुम्बिमुखाम्बुजं निजभुजाविश्रान्तदिव्यायुधं श्रीरङ्गे शरदश्शतं तत इतः पश्येम लक्ष्मीसखम् ॥७४॥

அப்ஜந்யஸ்தபதாப்ஜமஞ்சிதகடீஸம்வாதிகௌசேயகம்,
கிஞ்சித்தாண்டவகந்திஸம்ஹநநகம் நிர்வ்யாஜமந்தஸ்மிதம்,
சூடாசும்பிமுகாம்புஜம் நிஜபுஜாவிச்ராந்ததிவ்யாயுதம்,
ஸ்ரீரங்கே சரதச் சதம் தத இத: பச்யேம லக்ஷ்மீஸகம். (74)

| | | | |
|---|---|---|---|
| அப்ஜ ந்யஸ்த பதாப்ஜம் | ஆஸனபத்மத்தி லழுத்தின திருவடித்தாமரைகளை யுடையவரும் | கிஞ்சித் தாண்டவ கந்தி ஸம்ஹநநகம் | சிறிது நர்த்தனஞ் செய்வது போல் விளங்குகின்ற திருமேனியை யுடையவரும் |
| அஞ்சித கடீ ஸம்வாதி கௌசேயகம் | சிறந்த திருவரைக்குப் பாங்கான பட்டுத் திருப்பரிவட்டத்தை யுடையவரும் | நிர்வ்யாஜ மந்தஸ்மிதம் | இயற்கையான புன்முறுவலை யுடையவரும் |

| | | | |
|---|---|---|---|
| ரூடாசம்பி முக அம்புஜம் | திருவபிஷேகத்தைத் தழுவி யிருக்கின்ற முககமலத்தை யுடையவரும் | லக்ஷ்மீஸகம் | — நம்பெருமாளை |
| | | ஸ்ரீரங்கே | — திருவரங்கத்தில் |
| நிஜபுஜா விச்ராந்த திவ்ய ஆயுதம் | தம்திருக்கையில் இளைப்பாறு கின்ற திவ்யாயுதங்களை யுடையவருமான | சதம் சரத: | இன்னமொரு நூற்றாண்டள வும் |
| | | தத: இத: | — அங்குமிங்கும் |
| | | பச்யேம | — ஸேவிக்கக்கடவோம். |

• • •—இந்தச்லோகமும் கீழ்ச்லோகம்போலவே நம்பெருமாளுடைய திவ்யாவயவாதி ஸந்நிவேசங்களை யநுபவித்து விலக்ஷணமாகப் பேசுவதாம். திவ்யமங்களவிக்ரஹத்தில் திருவடிகளுக்கு ஆதாரமாயுள்ள பீடம் ஆஸநபத்ம மெனப்படும்; அதில் அழுத்தின திருவடித் தாமரைகளும், திருவரைபூத்தாற் போன்றுள்ள திருப்பரிவட்டமும், அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே கொஞ்சம் கூத்தாடுவதுபோல் விளங்குகின்ற திருமேனியும், செயற்கையாகவன்றிக்கே இயற்கையாகவே யுள்ள புன்முறுவலும், திருவபிஷேகத்தோடணைந்த திருமுகமண்டலமும், விரோதிநிரஸநங்கள் குறையறச் செய்து தலைக்கட்டுகையாலே வியாபாரமற்று இளைப்பாறு நிற்கும் திவ்யாயுதங்களைக் கொண்ட திருக்கைகளுமான அழகையநுபவித்து, இங்ஙனே பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பல்கோடி நூறுயிரமும் நித்யாநுபவம் பண்ணப் பெறவேணுமென்று ஆசம்ஸித்தாராயிற்று.

Srivatsam

"* வ்ருக்ஷே வ்ருக்ஷேச பச்யாமி சீரக்ருஷ்ணஜிநாம்பரம் *" என்ற மாரீசனுக்குப் போலே எங்குப் பார்த்தாலும் இந்த திவ்ய ஸேவையேயாகவேணு மென்பது ததஇத: பச்யேம" என்பதன் உள்ளுறை. ... (74)

अग्रे तार्क्ष्येण पश्चादहिपतिशयनेनात्मना पार्श्वयोश्च श्रीभूमिभ्यामतृप्त्या नयनचुलकैस्सेव्यमानामृतौघम्
वक्त्रेणाविःस्मितेन स्फुरदभयगदाशङ्खचक्रैर्भुजाग्रैर्विश्वस्मै तिष्ठमानं शरणमशरणा रङ्गराजं भजामः ॥७५॥

அக்ரே தார்க்ஷ்யேண பச்சாதஹிபதிசயநேநாத்மநா பார்ச்வயோச்ச
ஸ்ரீபூமிப்யாமத்ருப்த்யா நயநசுலகைஸ் ஸேவ்யமாநாம்ருதௌகம்,
வக்த்ரேணாவி: ஸ்மிதேந ஸ்புரதபயகதாசங்கசக்ரைர் புஜாக்ரை:
விச்வஸ்மை திஷ்டமாநம் சரணமசரணா ரங்கராஜம் பஜாம:. (75)

| | | | |
|---|---|---|---|
| அக்ரே | — திருமுன்பே | ஆவி: ஸ்மிதேந | —புன்முறுவல் தோற்றப் பெற்ற |
| தார்க்ஷ்யேண | — பெரிய திருவடியாலும் | வக்த்ரேண | — திருமுகமண்டலத்தினாலும் |
| பச்சாத் | — பின்புறத்தில் | ஸ்புரத் அபய கதா சங்க சக்ரை: | அபய முத்ரையும் கதையும் சங்கமும் சக்கரமும் விளங்கப்பெற்ற |
| அஹிபதி சயநேந ஆத்மநா | சேஷசாயியான தம்மாலும் | புஜாக்ரை: | — புஜாக்ரங்களினாலும் |
| பார்ச்வயோ: | — இரண்டருகும் | விச்வஸ்மை திஷ்டமாநம் | எல்லார்க்கும் தம் திருவுள்ளத்தை வெளியிடுகின்றவரான |
| ஸ்ரீபூமிப்யாம்ச | — ஸ்ரீதேவி பூதேவிகளாலும் | ரங்கராஜம் | — நம்பெருமாளை |
| அத்ருப்த்யா | — பர்யாப்தி யின்றிக்கே | அசரணா: வயம் | — புகலற்ற நாம் |
| நயந சுலகை: ஸேவ்யமாந அம்ருதௌகம் | (ஸௌந்தர்யமாகிற) அமுத வெள்ளத்தைக் கண்ணாரப் பருகப்பெற்றவராய், | சரணம் பஜாம: | — சரணமடைகின்றோம். |

http://acharya.org

. . —உத்ஸவமூர்த்தியாகிய நம்பெருமாளை மூலமூர்த்தியான பெரியபெருமாள் பின்புறத்திலும், பெரியதிருவடி முன்புறத்திலும் திருமடந்தை மண்மடந்தைகள் இரண்டருகு மிருந்துகொண்டு எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபிறப்பதே யில்லை யென்கிறார் பூர்வார்த்தத்தால். எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவம் பிறர்க்கு எப்படி ஸ்ப்ருஹணீயமோ அப்படி ஸ்வாத்மாவுக்கும் ஸ்ப்ருஹணீயமாயிருக்கு மென்பது விளங்க 'அஹிபதிசயநேநாத்மநா பச்சாத்' எனப்பட்டது. நான்கு திசைகளிலும் நால்வர் இருந்துகொண்டு கண்ணாரப்பருகுமமுதமாம் நம்பெருமாளுடைய ஸௌந்தர்யமாகிற திவ்யாம்ருதம். "ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" என்றாப்போலன்றியே "அத்ருப்த்யா ஸேவ்யமாநாம்ருதௌகம்" என்னும்படியுள்ளது இவ்வம்ருதவைலக்ஷண்யம். * ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப: * என்று சக்ரவர்த்தி பெருமாளைக் கண்டு த்ருப்திபெறவேயில்லை யென்றது காண்க.

விச்வஸ்மை திஷ்டமாநம் = நிற்பதனாலே தன்கருத்தை உலகத்தார்க்கு உணர்த்து கிறானென்றபடி. அபயமுத்ரையையும் திவ்யாயுதங்களையும் கொண்ட திருக்கைகளாலும் புன்முறுவல் கொண்ட திருமுகமண்டலத்தாலும் ஜநங்களுக்குத் தன் திருவுள்ளத்தைத் தெரிவித்தருள்கிறானாம்—'நீங்கள் அஞ்சவேண்டா; உங்களைக் காத்தருள்வதற்கன்றோ நான் உபயகாவேரீமத்யத்தில் வந்து படுகாடுகிடக்கிறேன்' என்று தெரிவிப்பவன் போன்றுளனாம். (75)

आर्तापाश्रयमर्थिकल्पकमसह्यागस्करक्ष्मातलं सद्यस्संश्रितकामधेनुमभियत्सर्वस्वमस्मद्धनम् ।
श्रीरङ्गेश्वरमाश्रयेम कमलाचक्षुर्महीजीवितं श्रीरङ्गे स सुखाकरोतु सुचिरं दास्यं च धत्तां मयि ॥७६॥

ஆர்த்தாபாச்ரயமர்த்திகல்பகமஸஹ்யாகஸ்கரக்ஷமாதலம்,
ஸத்யஸ் ஸம்ச்ரிதகாமதேநுமபியத்ஸர்வஸ்வமஸ்மத்தநம்,
ஸ்ரீரங்கேச்வரமாச்ரயேம கமலாசக்ஷுர் மஹீஜீவிதம்
ஸ்ரீரங்கே ஸ ஸுகாகரோது ஸுசிரம் தாஸ்யம் ச தத்தாம் மயி. (76)

| | | | |
|---|---|---|---|
| ஆர்த்த அபாச்ரயம் | ஆர்த்தர்களுக்குப் புகலிடமாயும் | அஸ்மத் தநம் | —எமது செல்வமாயும் |
| அர்த்தி கல்பகம் | அர்த்திகளுக்குக் கல்பவ்ருக்ஷமாயும் | கமலாசக்ஷு: | —பிராட்டியார்க்குக் கண்ணையும் |
| அஸஹ்ய ஆகஸ்கர க்ஷமா தலம் | அஸஹ்யாபராதிகள் விஷயத்திலே பொறுமையுள்ளவராயும் | மஹீ ஜீவிதம் | பூமிப்பிராட்டியின் பிராணனாயுமிருக்கிற |
| ஸத்ய: ஸம்ச்ரித காமதேநு | அன்றேவந்தடைந்தவர்கட்கும் காமதேநுபோலே வேண்டியவற்றைக் கொடுப்பவராயும் | ஸ்ரீரங்கேச்வரம் | — நம்பெருமானை |
| அபியத் ஸர்வஸ்வம் | ஆழ்வார்கள் போல்வார்க்கு 'எல்லாம் கண்ணன்' என்னும்படி ஸர்வஸ்வமாயிருப்பவராயும் | ஆச்ரயேம | — ஆச்ரயிப்போம்; |
| | | ஸ: | — அந்த நம்பெருமாள் |
| | | ஸுசிரம் | — நெடுநாளளவும் |
| | | ஸ்ரீரங்கே | — திருவரங்கத்தில் |
| | | ஸுகாகரோது | (அடியேனை) ஸுகப்படுத்த வேணும், |
| | | மயி | — அடியேனிடத்தில் |
| | | தாஸ்யம் ச | — தாஸவ்ருத்தியையும் |
| | | தத்தாம் | — அருளவேணும். |

* * *— [illegible] ச்லோகங்களால் ஆழ்வா மணவாளனை உபா
யத்தோ [illegible], அவனது திருவடிகளின் கீழ் குற்றேவல் செய்வதே உபேய

Srivatsam
http://acharya.org

மாக அநுஸந்தேய மென்னுமிடத்தை இந்த ச்லோகத்தால் வெளியிடுகிருர். "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம்" என்கிற கைங்கர்ய ப்ரார்த்தனையே புருஷார்த்தமென்று காட்டுகிறபடி.

பகவத்கீதையில் 'ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப, சதுர்விதா பஜந்தே' என்று நால்வகை யதிகாரிகள் எம்பெருமானைப் பணிகின்றவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர் — ஏற்கெனவே ஐச்வரியமிருந்து அது மீண்டும் வேணுடுமென்று ஆச்ரயிப்பவர்; புதிதாக ஐச்வர்யம்வேண்டி ஆச்ரயிப்பவர்; ஆத்மாநுபவமாகிற கைவல்யமோக்ஷத்தை விரும்பி ஆச்ரயிப்பவர்; பரம புருஷார்த்தமான நித்ய கைங்கர்யத்தை விரும்பி ஆச்ரயிப்பவர்; ஆக நான்குவகைப்பட்ட அதிகாரிகள் அங்குச் சொல்லப்பட்டனர்; அந்த நால்வகை யதிகாரிகளுக்கும் ஸ்ரீரங்கநாதன் அபேக்ஷித பலங்களை அளித்தருள் பவ னென்கிருரிதில்.

ஆர்த்தாபாச்ரயம் = இழந்த ஐச்வரியத்தை மீண்டும் பெறவிரும்புமவர்களான ஆர்த்தர்களுக்குப் புகலிடமாயுள்ளவ ரென்கை. அர்த்திகல்பகம் = அபூர்வமான ஐச்வரியத்தை விரும்புமவர்களான அர்த்திகளுக்குக் கல்பவ்ருக்ஷம் போன்று அதனைக் குறையறக் கொடுத்தருள்பவரென்கை. அஸஹ்யாகஸ்கரக்ஷமாதலம் = பரமபோக்யனை தன்னிடத்தில் [எம்பெருமானிடத்தில்] போக்யதாபுத்தி தவிர்த்து ஸ்வாத்மாநுபவத்தில் போக்யதா புத்தியை வஹிப்பதானது [கைவல்யபுருஷார்த்தருசி] அபராதமாகையாலே அப்படிப்பட்ட தீவ்ராபராதிகளான கேவலரை இங்கு அஸஹ்யாகஸ்கர சப்தத்திஞல் விவக்ஷிப்பதாக நிர்வஹிப்பர்கள். அவர்களுக்கு க்ஷமாதலமென்றது—அவ்வபராதத்தைப் பொறுத்தருளி அவர்களுடைய கோரிக்கைத் தலைக் கட்டி யருள்பவரென்கை.

ஸத்யஸ் ஸம்ச்ரித காமதேநும் = ஜ்ஞானிகளான முமுக்ஷுக்களுக்கு வேண்டின அநுபவங்களையெல்லாம் அளித்தருள்பவரென்கை. அபியத்ஸர்வஸ்வம் = "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையு மவரேயினி யாவாரே" என்று பெற்றாரும் சுற்றமுமென்றிவையெல்லாமவரேயாகப் பற்றுமவர்களான ஆழ்வார்களுக்கு "உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன்" என்கிறபடியே தாரக போஷக போக்ய பதார்த்தங்களெல்லாம் தாமேயாயிருப்பவரென்கை.

அஸ்மத்தநம் = நமக்குக் குலதநமாயிருப்பவரென்கை. ஆக இப்படிப்பட்டவரும் திருமகட்குக் கண்போன்றவரும் நிலமகட்கு உயிர்போன்றவருமான அழகிய மணவாளப்பெருமாளை ஆச்ரயிப்போம்; அவர் நமக்கு "உன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியான நித்யகைங்கர்ய ஸம்பத்தையளித்து நம்மை ஸுகப்படுத்த வேணுமென்றாராயிற்று; (76)

स्वफणवितानदीप्रमणिमालिसुदामरुचिप्रदिमसुगन्धिभोगसुखशायितरङ्गधनम् ।
मदभरमन्थरोच्छ्वसितनिश्श्वसितोत्तरलं फणिपतिडोलिकातलिममाश्वसिमः प्रणताः ॥७७॥

ஸ்வபணவிதாநதீப்ரமணிமாலிஸுதாமருசி
ம்ரதிமஸுகந்திபோகஸுகசாயிதரங்கதநம்.

மதபரமந்தரோச்ச்வஸிதநி:ச்வஸிதோத்தாநம்
பணிபதிடோலிகாதலிமமாச்வஸிம: ப்ரணதா: (77)

| | | | |
|---|---|---|---|
| ஸ்வ பண | — தன்னுடைய படமாகிற | ரங்கநாதம் | — ஸ்ரீரங்கநாதனை யுடைத்தாய் |
| விதாந | — மேற்கட்டியில் | மத பர | (எம்பெருமானை இடைவிடாது வஹிப்பதனா லுண்டான) மதாதிசயத்தினால் |
| தீப்ர | — ப்ரகாசித்துக் கொண்டிருக்கிற | மந்தர | — மந்தமாக வுண்டாகின்ற |
| மணிமாலி | மணிகளின் வரிசையை யுடைத்தாயும் | உச்ச்வஸித நி:ச்வஸித | மேல்மூச்சு கீழ்மூச்சுகளாலே |
| ஸ்தாம | — நல்ல பூமாலை போன்ற | உத்தாநம் | — அசைந்து கொண்டிருப்பதான |
| ருசி ம்ரதிம ஸௌகந்தி | அழகு, ஸௌகுமார்யம், நறுமணம் ஆகிய இவற்றை யுடைத்தாயுமிருக்கிற | பணிபதி டோலி காதலிமம் | திருவனந்தாழ்வானுகிற ஊஞ்சல் படுக்கையை |
| போக | — (தனது) மேனியில் | ப்ரணதா: | — வணங்கினோமாய் |
| ஸுகசாயித | இனிதாகத் திருக்கண்வளர்த்தியருளப்பட்ட | ஆச்வஸிம: | — தேறுதலடைகின்றோம் |

* * *—கீழ் அறுபத்து மூன்றும் ச்லோகந்தொடங்கி மூன் ச்லோகமளவான பதினன்கு ச்லோகங்களாலே [உத்ஸவமூர்த்தியான] அழகிய மணவாளப்பெருமாளை அநுபவித்தாராய் நின்றார்; இனி, பெரியபெருமாளை அநுபவிக்கப்புகுகிறாராய் முந்துறமுன்னம் திருப்படுக்கையான திருவனந்தாழ்வானைத்தொழுகிறார். கீழ்ச்லோகத்தில் "*தாஸ்யஞ்சதத்தாம் மயி*" என்று கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணி, அடுத்த ச்லோகமாகியவிதில் திருவனந்தாழ்வானைப் போற்றுகையாலே "சென்றாற்குடையாமிருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கரவு" என்கிறபடியே ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யங்களிலும் நிரதரான திருவனந்தாழ்வானைப் போலே தாம் அடிமை செய்யப்பெற வேணுமென்னும் விருப்பம்ஸூசிதமாகிறதென்று நுண்ணிதினுணர்க.

திருவனந்தாழ்வான் வெறும் படுக்கையல்லன்; ஊசற்படுக்கையாயிருப்பவனென்கிறார் "பணிபதிடோலிகாதலிமம்" என்பதனால். திருப்பள்ளி மெத்தைக்கு மேற்கட்டியுண்டே; இங்குத்திருவனந்தாழ்வானுடைய படம் மேற்கட்டியாகின்றது; "மன்னியபல்பொறிசே ராயிரவாய் வாளரவின் சென்னி மணிக்குடுமித் தெய்வச்சுடர்" (பெரிய திருமடல்) என்கிறபடியே படத்திலுள்ள மாணிக்கத்தின் ஒளிகள் பரம்பியிருப்பதானது அந்தமேற்கட்டியில் ரத்னங்களிழைத்திருப்பது போன்றுள்ளது. நல்ல பரிமளம், நல்ல சோபை, மெத்தென்றிருத்தல் என்கிற குணங்கள் திருவனந்தாழ்வான் பக்கல் சொல்ல வேணுமோ? ஆக இப்படிப்பட்ட குணங்கள் நிறைந்து விளங்குகின்ற தன்னுடலில் ஸ்ரீரங்கநாதனை இனிதாகத் திருக்கண் வளரச்செய்துள்ளான் திருவனந்தாழ்வானென்கிறது பூர்வார்த்தத்தினால். (பூர்வார்த்தம் முழுதும் ஒருபதம்.)

[மதபரேத்யாதி.] ஊஞ்சலாகில் அசைந்துகொண்டே யிருக்குமே; இத்திருவனந்தாழ்வானும் அவர் தம் ஸ்ரீரங்கநாதனை வஹிப்பதனாலுண்டான மதத்தினால் கீழ்மூச்சு மேல்மூச்சுகளை மெல்ல விச, அக்காற்றினால் சலிக்கும்படி. இப்படிப்பட்ட ஆதிசேஷனாகிற ஊசற்படுக்கையை வணங்கி 'எம்பெருமானுக்குப் பரிவர் ஒருவருமில்லையே! என்கிற அச்சம் தீர்ந்து மகிழ்வோமென்றாராயிற்று.

http://acharya.org

பாம்பின் உடலுக்கு போகமென்று பெயர். ... (77)

वटदलदेवकीजठरवेदशिरः कमलास्तनशठकोपवाग्वपुषि रङ्गगृहे शयितम् ।
वरदमुदारदीर्घभुजलोचनसंहननं पुरुषमुपासिषीय परमं प्रणतार्तिहरम् ॥७८॥

வடதலதேவகீ ஜடரவேதசிர: கமலாஸ்தந
சடகோபவாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்,
வரதமுதாரதீர்க்கபுஜலோசநஸம்ஹநநம்
புருஷமுபாஸிஷீய பரமம் ப்ரணதார்த்திஹரம். (78)

| | | | |
|---|---|---|---|
| வடதள— | ஆலிலையென்ன | சயிதம் | — பள்ளிகொண்டிருப்பவரும் |
| தேவகீ ஜடர— | தேவகியின் வயிறென்ன | வரதம் | — வரங்களையளிப்பவரும் |
| வேதசிர:- | — வேதாந்தங்களென்ன | உதார தீர்க்க புஜ லோசந ஸம்ஹநநம் | உதாரங்களான திருக்கைகளையும் நீண்ட திருக்கண்களையுங் கொண்ட திருமேனியையுடையவரும் |
| கமலாஸ்தந | பிராட்டியின் திருமுலைத்தடமென்ன | | |
| சடகோப வாக் | நம்மாழ்வாருடைய திருவாய்மொழியென்ன | | |
| வபுஷி | (ஆகிய இவற்றின்) ஆக்ருதி போன்ற ஆக்ருதியையுடைய | ப்ரணத ஆர்த்திஹரம் | வணங்கினருடைய ஆர்த்திகளைப் போக்குமவருமான |
| | | பரமம் புருஷம் | — பெரிய பெருமாளை |
| ரங்க க்ருஹே | — ஸ்ரீரங்க விமானத்தில் | உபாஸிஷீய | — உபாஸிக்கக்கடவேன். |

* * *—கீழ்ச்லோகத்தில் திருவனந்தாழ்வானை வணங்கினாராய், அநந்த சாயியான பெரியபெருமாளை வணங்குகிறார் இது முதலாக.

ஸ்ரீரங்கமந்திரத்தில் திருக்கண் வளர்ந்தருளாநின்ற பரம புருஷனைச் சிந்தனை செய்யக்கடவேனென்கிறார் அந்த ஸ்ரீரங்க மந்திரம் எப்படிப்பட்டதென்னில்; ஆலிலை, தேவகிப்பிராட்டியின் திருவயிறு, உபநிஷத்து, பெரியபிராட்டியாரது திருமுலைத்தடம், நம்மாழ்வாரருளிச்செயலாகிய திருவாய்மொழி ஆகிய இவை எம்பெருமான் திருவுள்ளமுகந்து வர்த்திப்பதற்கு எவ்வளவு பாங்கானதோ, அவ்வளவு பாங்காயிருப்பது என்கிறார் பூர்வார்த்தத்தில், "ஆலமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய் ஞாலமேழு முண்டான் அரங்கத்தரவினணையான்" இத்யாதிகளான அருளிச்செயல்கள் இங்கு அநுஸந்தேயம். "மனத்துள்ளான் மாகடல் நீருள்ளான் மலராள் தனத்துள்ளான் தண்டுழாய் மார்வன்" என்று பேயாழ்வார் சில அடுக்குகள் அருளிச்செய்தாப்போலே இவர் தாமும் வடதளமென்று தொடங்கிச் சில அடுக்குகள் அருளிச்செய்கிறார். கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் இருபகுதியாகவுள்ள வேதத்தின் உத்தரபாகமாகிய உபநிஷத்துக்களில் பரமபுருஷனுடைய ஸ்வரூபரூபாதிகள் நன்கு விளங்குதலால் அவை ஆலிலை முதலானவற்றோடொக்க எம்பெருமானுக்கு உறைவிடமாகச் சொல்லப்பட்டன. திருவாய்மொழியில் எம்பெருமானுக்குள்ள ஆதரம் வாசாமகோசரமாகையால் பிராட்டியின் திருமுலைத்தடம் எவ்வளவு போக்யமோ அவ்வளவுபோக்யம் திருவாய்மொழி—என்பது விளங்க "கமலாஸ்தந சடகோபவாக்" என்று ஸமபிவ்யாஹாரம் செய்யப்பட்டது.

http://acharya.org

'வடதள' என்று தொடங்கி * சடகோபயாக் * என்னுமளவும் த்வந்த்வ ஸமாஸம் பண்ணி அதற்குமேல் பஹுவ்ரீஹி ஸமாஸமாய், ஆலிலை முதலானவற்றினுடைய வடிவுபோன்ற வடிவையுடைத்தான ரங்கமந்திரத்திலே—என்றிங்ஙனே பொருளுரைப்பது ஒருவழி. வபுஸ்ஸையும் சேர்த்து த்வந்த்வ ஸமாஸமாக்கி, ஆலிலையிலும்......நம்மாழ்வாருடைய திருவாக்கிலும் திருமேனியிலும் ரங்கக்ருஹத்திலும் சயனித்தருளாநின்ற பெருமாள் என்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யும்படி. * ஸர்வோ த்வந்த்வோ விபாஷயா ஏகவத் பவதி* என்னும் வையாகரண பரிபாஷையினால் ஏகவசநம் உபபந்நம். எம்பெருமானுக்கு நம்மாழ்வார் திருமேனியிலுள்ள அபிநிவேசாதிசயம் "இவையுமவையு முவையும்" என்கிற திருவாய்மொழியிலும் "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே" என்னும் பாசுரத்திலும் பொலியும்.

உத்தரார்த்தத்தில் 'வரதம்' என்றும் 'ப்ரணதார்த்திஹரம்' என்றும் விசேஷணங்களிட்டருளினமையால் * தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் இவ்வாசிரியர்களுக்குள்ள ஸ்ம்ருதி ஸந்தாநம் விளங்கும். ... (78)

उदधिपरमव्योम्नोर्विस्मृत्य पद्मवनालयाविनिमयमयीं निद्रां श्रीरङ्गनामनि धामनि ।
फणिपरिवृढस्फारप्रश्वासनिःश्वसितक्रमस्खलितनयनं तन्वन् मन्वीत नः परमः पुमान् ॥७९॥

உததிபரமவ்யோம்நோர் விஸ்ம்ருத்ய பத்மவநாலயா
விநிமயமயீம் நித்ராம் ஸ்ரீரங்கநாமநி தாமநி,
பணிபரிப்ருடஸ்பாரப்ரச்வாஸநி:ச்வஸிதக்ரம
ஸ்கலித நயநம் தந்வந் மந்வீத ந: பரம: புமாந். ... ... (79)

| | | | |
|---|---|---|---|
| உததி பரம வ்யோம்நோ: | திருப்பாற்கடலையும் திருவைகுந்தத்தையும் | ப்ரச்வாஸ நி:ச்வஸித க்ரம | மேல்மூச்சு கீழ்மூச்சுகளாலே |
| விஸ்ம்ருத்ய | — மறந்தொழிந்து | ஸ்கலித | — கூச்சமடைந்த |
| பத்மவநாலயா விநிமயமயீம் | பிராட்டிக்கு மாற்றான | நயநம் (யதாததா) | திருக்கண்களையுடைத்தாயிருக்கும்படி |
| நித்ராம் | — யோக நித்திரையை | தந்வந் | செய்துகொண்டிருக்கிற [திருக்கண் வளர்ந்தருளாநின்ற] |
| ஸ்ரீரங்கநாமநி தாமநி | திருவரங்கமென்னுந் திருப்பதியில் | பரம: புமாந் | — பெரியபெருமாள் |
| பணி பரிப்ருட | — திருவநந்தாழ்வானுடைய | ந: மந்வீத | நம்மைத் திருவுள்ளம் பற்றக்கடவர் |
| ஸ்பார | — அதிகமான | | |

•••—திருப்பாற்கடலையும் திருவைகுந்தத்தையும் மறந்தொழிந்து, 'அவற்றிற்காட்டிலும் போக்யதை விஞ்சினவிடமிது' என்று கோயிலிலே வந்தருளி * உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானாய் விளங்கும் பெரியபெருமாள் நம்மையும் திருவுள்ளம் பற்றியருள்கவென்கிறார். "பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்து" என்றும் "தனிகடலே தனிச்சுடரே தனியுலகே யென்றென்று, உனக்கிடமாயிருக்க" என்றும் "வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராபதியும், இடவகைகளிகழ்ந்திட்டு" என்றும் திருப்பாற்கடல் திருவைகுந்தம் முதலான திவ்யஸ்தானங்களை விட்டிட்டுத் தம் திருவுள்ளத்தே குடிபுகுந்ததாகப் பெரியாழ்வார் அநுஸந்தித்தார்;

அவற்றை விட்டுத் திருவரங்கம் பெரியகோயிலிலே வந்து புகுந்ததாக இவர் அநுஸந்திக்கிறார்.

**பத்மவநாலயாவி நிமயமயீம் நித்ராம்** = இந்த ஸ்ரீஸூக்தியின் அழகை என்சொல்வோம்!; பட்டரொருவர் தவிர இங்ஙனே நாவீறுடையாருண்டோ? பெரியபெருமாள் சிலகாலம் ஸ்ரீதேவியோடு விளையாடுகிறார், சிலகாலம் நித்ராதேவியோடு விளையாடுகிறார் என்கிறார். இதர விஷயங்களை மறக்கடிக்குந்தன்மை லக்ஷ்மீபரிஷ்வங்கத்திற்கும் நித்ரைக்கும் ஒக்குமிறே. எம்பெருமானுடைய உறக்கம் நம்முடைய உறக்கம் போலன்றிக்கே ஸர்வவிஷய ஸ்மரணத்தோடுங்கூடிய உறக்கமே யாகிலும் ஒன்றுமுணராதவன்போல் அபிநயங்காட்டி உறங்குகிற உறக்கமிறே.

[**பணிபரிப்ருடேத்யாதி**] திருப்பள்ளி மெத்தையாயமைந்த திருவனந்தாழ்வானுடைய மிகுந்த மூச்சுக்காற்றினால் திருக்கண்கள் சிதறுகின்றதாம் பெரிய பெருமாளுக்கு "கிண்கிணி வாய்ச் செய்த தாமரைப்பூப்போலே, செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ?" என்று ப்ரார்த்திக்குமவர்களின் கருத்துக்கிணங்கக் கடாக்ஷித்தருள்வதை அநுபவித்துப் பேசுகிறபடி. திருக்கண்களை மூடியுந் திறந்தும் துயில்கொள்ளுகிறாரென்கை.

**நித்ராம் தந்வந் பரம: புமாந் ந: மந்வீத** = உறங்கும்போது ஒருவிதமான சிந்தனையும் உள்ளத்திலிருக்க மாட்டாதாகிலும், (உறங்குவான்போல் யோகுசெய்யு மிப்பெருமானுக்கு) அடியேனைப் பற்றின சிந்தனைமாத்திரம் அநுவர்த்திக்க வேணுமென்கிறார். நாம் அவனை மநநம் பண்ணமாட்டோமாகிலும் அவன் நம்மை மநநம் பண்ணட்டுமென்கிறார். நாம் கண் விழித்திருக்கும்போதும் அவனை ஸ்மரிக்க வல்லோமல்லோம்; அவன் கண்ணுறங்கும் போதும் நம்மை ஸ்மரியா தொழியானென்கிறார். (79)

जलधिमिव निपीतं नीरदेनाद्रिमध्यौ निहितमिव शयानं कुञ्जरं वाऽद्रिकुञ्जे ।
कमलपदकराक्षं मेचकं धाम्नि नीले फणिनमधिशयानं पूरुषं वन्दिषीय ॥८०॥ ೮೦

**ஜலதிமிவ நிபீதம் நீரதேநாத்ரிமப்தௌ நிஹிதமிவ சயாநம் குஞ்ஜரம் வாத்ரிகுஞ்ஜே,**
**கமலபதகராக்ஷம் மேசகம் தாம்நி நீலே பணிநமதிசயாநம் பூருஷம் வந்திஷீய. (80)**

| | | | |
|---|---|---|---|
| நீலே | — கறுத்த | அப்தௌ நிஹிதம் அத்ரிம் இவ ஸ்திதம் | கடலில் வைக்கப்பட்ட மலை போன்றிருப்பவரும் |
| தாம்நி | — ஸ்ரீரங்க மந்திரத்தில் | அத்ரிகுஞ்ஜே | — மலைப்புதரில் |
| பணிநம் அதிசயாநம் | திருவனந்தாழ்வான்மீது பள்ளிக்கொண்டிருப்பவரும் | சயாநம் | — படுத்துக்கொண்டிருக்கிற |
| மேசகம் | கரிய திருமேனியையுடையவரும் | குஞ்ஜரம் வா | — யானைபோன்றிருப்பவருமான |
| கமல பத கர அக்ஷம் | தாமரைபோன்ற திருவடி திருக்கை திருக்கண்களையுடையவரும் | பூருஷம் | — பெரிய பெருமானை |
| நீரதேந நிபீதம் ஜலதிம் இவ ஸ்திதம் | மேகத்தினால் பருகப்பட்ட கடல் போன்றிருப்பவரும் | வந்திஷீய | — வணங்கக்கடவேன். |

* * *—கீழ் "அபி பணிபதிபாவாத்" என்ற நாற்பத்தைந்தாம் ச்லோகத்திலருளிச் செய்தபடியே நீல நிறத்ததான ஸ்ரீரங்கவிமாநத்தில் நீல நிறத்தரான பெரியபெருமாள் விளங்கும்படிக்கு மூன்று உபமாநங்களிட்டுப் பேசுகிறார்.

Srivatsam

http://acharya.org

மேகத்திறைல் மூற்றும் பருகப்பட்டு அம்மேகத்தின் கர்ப்பத்திறுட் கிடக்கும் கடல்கொல்! என்பது முதல் உவமை. இதில் மேகத்திற்கும் விமாநத்திற்கும், மேகத்திறுட் கிடக்கும் கடலுக்கும் கடல்வண்ணனுக்கும் உபமாநோபமேயபாவம் உணர்க. கடலினுள் ஸ்தாபிக்கப்பட்ட கரியமலை கொல்! என்பது இரண்டாவது உவமை இதில் கடலுக்கும் விமாநத்திற்கும், மலைக்கும் எம்பெருமானுக்கும் உபமாநோபமேயபாவம் உணர்க. மலைப்புதரில் துயில்கொள்ளும் மதயானைகொல்! என்பது மூன்றும் உவமை. இதில், மலைப்புதர்க்கும் விமாநத்திற்கும், மதயானைக்கும் மதிளரங்கனுக்கும் உபமாநோபமேயபாவம் உணர்க.

'கமலபதகராக்ஷம்' என்றும் 'பணிநம் அதிசயாநம்' என்றும் இரண்டு விசேஷணங்கள் அதிகப்படியாக உள்ளன. இவற்றுக்குப் பொருத்தமாக உபமாந வஸ்துக்களிலும் சில விசேஷணங்களை ஊஹித்துக்கொள்ளவேணும். ஸமுத்ரத்தில் உள்ள பவழங்கள் முதலிய சிவந்த வஸ்துக்களைக் கமலபதகராக்ஷ ஸ்தாநத்திலும் முத்துத்திரள் முதலிய வெண்பொருள்களை ஆதிசேஷனுடைய ஸ்தாநத்திலுங் கொள்க. மலையில் உள்ள சிவந்த கைரிகாதிதாதுக்களைக் கமலபதகராக்ஷ ஸ்தானத்திலும், நெடுகப்பாயும் அருவிகளை ஆதிசேஷனுடைய ஸ்தானத்திலும் கொள்க. யானையின் சிந்துரப்பொடியலங்காரங்களைக் கமலபதகராக்ஷ ஸ்தானத்திலும் அது தங்குமிடமான வெண்மணிப்பாறையை ஆதிசேஷனுடைய ஸ்தானத்திலும் கொள்க. (80)

Srivatsam

श्रीरङ्गेशाय इह शर्म निर्मिमीतामाताम्राधरपद्पाणिविद्रुमो नः ।
कावेरीलहरिकरोपलाल्यमानो गम्भीराद्भुत इव तर्णकोऽर्णवस्य ॥८१॥

ஸ்ரீரங்கேசய இஹ சர்ம நிர்மிமீதாம் ஆதாம்ராதர பதபாணிவித்ருமோ ந:,
காவேரீலஹரிகரோபலால்யமாந: கம்பீராத்புத இவ தர்ணகோர்ணவஸ்ய. ... (81)

| | | | |
|---|---|---|---|
| ஆதாம்ர | – நன்குசிவந்த | கம்பீர அத்புத: | – கம்பீரமாய் ஆச்சரியமான |
| அதர | – திருவதரமென்ன | அர்ணவ தர்ணக: இவ ஸ்தித: | – கடல் குட்டிபோன்றிருக்கின்ற |
| பத | – திருவடிகளென்ன | ஸ்ரீரங்கேசய: | – பெரிய பெருமாள் |
| பாணி | – திருக்கைகளென்ன (இவையாகிற) | ந: | – நமக்கு |
| வித்ரும: | – பவழங்களையுடையத்தாய் | இஹ | – இங்கே |
| காவேரீ | – திருக்காவேரியின் | சர்ம | – ஸௌக்யத்தை |
| லஹரி கர | – அலைகளாகிற கைகளாலே | நிர்மிமீதாம் | – செய்தருளவேணும். |
| உபலால்யமாந: | – சீராட்டப்படுகின்றதாய் | | |

* * * கீழ்ச்லோகத்தில் பெரியபெருமாளுக்கு மூன்று உபமாநங்களிட்டுப் பேசினார்; அவற்றுள் முதலுபமாநம் கடல்; கடல்தன்னை உபமாநமாகச் சொல்வதிற்காட்டிலும் கடல்குட்டியை உபமாநமாகச் சொல்வது மிகப்பொருந்துமென்று திருவுள்ளம் பற்றி அருளிச்செய்வதாம் இந்த ச்லோகம்.

கடல்குட்டியாவது கடல் ப்ரஸவித்த குட்டி; இது ஒரு சமத்காரமான உல்லேகம். கடலில் இருக்கும் பவழங்கள் கடல்குட்டியினிடத்தும் இருக்குமே; நன்றாகச் சிவந்த திருவதரம் திருவடி திருக்கை ஆகிய இவையே பவழங்களாம். (இவ்வவயவங்கள் அதுந்தகட்டு மிகச்சிவந்திருக்குமாதலால் 'ஆதாம்ர' எனப்பட்டது).

http://acharya.org

**காவேரீஸம்பரிகரோபலால்யமாந:** = குழந்தையானது தாயின் கையினாலே சீராட்டி வளர்க்கப்படும்; இங்கே கடற்குழந்தையாகச் சொல்லப்படுகிற ஸ்ரீரங்கநாதனும் "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப்பொன்னி திரக்கையா லடிவருடப்பள்ளிகொள்ளுங் கருமணியை" என்கிறபடியே திருக்காவிரியின் அலைகளாகிற கைகளாலே உபசரிக்கப்படுகின்றான். காவேரியானவள் கடற்குழந்தைக்குத் தாய்முறையாவதும் அறிக. (ஸரித்பதியாகிய கடலுக்குக் காவேரி பத்நியாம். கடல்குட்டிக்கு மாதாவாகிறாள்.)

குழந்தை படுத்தவண்ணமாகவே யிருப்பது இயல்வாதலால் அதனையுந் திருவுள்ளம்பற்றி "ஸ்ரீரங்கேசய:" என்றார். இந்த ஸ்வாரஸ்யத்தை உணராமல் சிலர் "ஸ்ரீரங்கேச்வர:" என்று பாடங் கொள்வது தகாதென்க.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகனும் இந்த ச்லோகத்தைத் திருவுள்ளம்பற்றியே அபீதிஸ்தவத்தில் *ஜலதிடிம்படம்பஸ்ப்ருச:* என்றருளிச் செய்தார். (81)

सिञ्चेदिमं च जनमिन्दिरया तटित्वान् भूषामणिद्युतिभिरिन्द्रधनुर्दधानः ।
श्रीरङ्गधामनि दयारसनिर्भरत्वादद्रौ शयालुरिव शीतलकालमेघः ॥८२॥

ஸிஞ்சேதிமஞ்ச ஜநமிந்திரயா தடித்வாந் பூஷாமணித்யுதிபிரிந்த்ரதநுர் ததாந:,
ஸ்ரீரங்கதாமநி தயாரஸநிர்ப்பரத்வாத் அத்ரௌ சயாலுரிவ சீதலகாளமேக:. (82)

Srivatsam

| | | | |
|---|---|---|---|
| இந்திரயா தடித்வாந் | பிராட்டியாகிற மின்னலை யுடைத்தாய் | ஸ்ரீரங்கதாமநி | திருவரங்கம் பெரியகோயிலாகிற |
| பூஷாமணித்யுதிபி: | திருவாபரணங்களி லிழைத்த ரத்னங்களின் கிரணங்களாகிற | அத்ரௌ | — மலையில் |
| | | சயாலு: | — படுத்துக்கொண்டிருப்பதான |
| இந்த்ர தநு: | — இந்திரன்வில்லை | சீதல காலமேக: இவ | குளிர்ந்த கருமுகில்போன்றுள்ள ஸ்ரீரங்கநாதன் |
| ததாந: | —வஹித்துக்கொண்டிருப்பதாய் | | |
| தயாரஸ நிர்ப்பரத்வாத் | க்ருபையாகிற தீர்த்தத்தின் பூர்த்தியினால் | இமம் ஜநம் ச | — அடியேனையும் |
| | | ஸிஞ்சேத் | — அபிஷேகம் பண்ணியருள்க. |

* * *—பெரியபெருமாளைக் கடல்குட்டியாக உருவகப்படுத்திப்பேசினார் கீழ் ச்லோகத்தில். கடல்குட்டியைக் காண்பதனால் கண்கள் மாத்திரமேயன்றோ குளிரும்; அவ்வளவோடு த்ருப்திபெற முடியுமோ? எல்லா அவயவங்களும் குளிரவேணுமென்று பாரித்திருப்பவரிறே இவ்வாசிரியர். ஆகவே, பெரியபெருமாளை சீதல காளமேகமாகப் பேசவேணுமென்று திருவுள்ளம்பற்றி அங்ஙனே ஸாவயவரூபகவிந்யாஸம் பண்ணுவதாம் இந்த ச்லோகம்.

காளமேகமானது மின்னலோடும் இந்திரதநுஸ்ஸோடும் கூடியிருக்கும்; ஜலத்தினால் பூர்ண கர்ப்பங் கொண்டு அசையமாட்டாமல் மலையுச்சியிலே படுத்திருக்கும்; இத்தன்மைகள் ஸ்ரீரங்கநாதனுக்கும் ஒக்குமென்று அடைவே நிரூபிக்கிறார். மின்னற்கொடி போன்ற பிராட்டி உறையப் பெற்றிருப்பதும், திருவாபரணங்களிலிழைத்த பலவகை ரத்னங்களின் புகராகிற இந்த்ர தநுஸ்ஸையுடைத்தாயிருப்பதும், கருணாரஸம் நிரம்பியிருப்பதனால் ஸ்தாவரப்ரதிஷ்டையாக ஸ்ரீரங்கமந்திரத்தே போந்து சயனித்திருப்பதும் இந்த ஸ்ரீரங்கநாதகாளமேகத்தின் தன்மைகளாம். இப்படிப்பட்ட காளமேகம் அடியேன் மீதும் கருணாரஸத்தைக் கனக்க வர்ஷித்துக் குளிரச் செய்தருள்க வென்றதாயிற்று.

http://acharya.org

[இமஞ்ச ஜநம் ஸிஞ்சேத்] மேட்டு நிலம் பள்ளநிலம் என்னும் வாசிபாராதே வர்ஷிக்குமிறே மேகம்; அடியேனிடத்திலுள்ள தாழ்வுகளைக் கணிசியாதே அருள்புரிய வேணுமென்கை. இது சகாரத்தினால் தேறுங்கருத்து. (82)

आमौलिरत्नमकरात्पुनरा च पद्भ्यां धामक्रमोन्नमदुदारमनोहराङ्गम् ।
श्रीरङ्गशेषशयनं नयनैः पिबामः पश्यन्मनःप्रवणमोघमिवामृतस्य ॥८३॥

ஆமௌலிரத்நமகராத் புநரா ச பத்ப்யாம் தாமக்ரமோந்நமதுதாரமநோஹராங்கம்,
ஸ்ரீரங்கசேஷசயநம் நயநை: பிபாம: பச்யந்மந:ப்ரவணமோகமிவாம்ருதஸ்ய. (83)

| | | | |
|---|---|---|---|
| ஆமௌலி ரத்ந மகராத் | திருமுடியிலழுத்தின ரத்நமயமான மகரம் முதற்கொண்டு | ஸ்ரீரங்க சேஷ சயநம் | திருவரங்கத்தில் அரவணை மேற் பள்ளிகொண்டருளும் பெரியபெருமாளை, |
| ஆ ச பத்ப்யாம் | — திருவடிவரையில் | பச்யத் மந: ப்ரவணம் | ஸேவிப்பவர்களின் மனத்திலே வந்து தேங்குகின்ற |
| தாம க்ரம உந்நமத் உதார மநோஹர அங்கம் | தேஜோவிசேஷத்தாலே உயர்ந்து உதாரமாய் ரமணீயமான அவயவங்களையுடையரான | அம்ருதஸ்ய ஓகம் இவ | அமுதவெள்ளத்தைப்போலே |
| | | நயநை: | — கண்களாலே |
| | | பிபாம: | — பருகுகின்றோம். |

* * *—பெரிய பெருமாளை அமுத வெள்ளமாக அநுபவிக்கிறார் இதில். இவ்வம்ருத ப்ரவாஹத்தைக் கண்களால் பருகுவோமென்கிறார். திருமுடி தொடங்கித் திருவடியளவுள்ள ஒவ்வோரவயவத்திலும் தேஜ:புஞ்ஜம் புறவெள்ள மிடுகையாலே எல்லா அவயவங்களும் சிறப்புற்றோங்கி விளங்குகின்றன வென்கிறார் பூர்வார்த்தத்தால்.

[பச்யந்மந:ப்ரவணம்] உலகத்திலுள்ள ப்ரவாஹங்களிற் காட்டிலும் விலக்ஷணமிறே இவ்வமுதவெள்ளம்; ஸேவிப்பவருடைய நெஞ்சிலேவந்து பாயும் அமுதமாமிது; "அணியரங்கனென்னமுதினைக்கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றவாறு.

இதில் முதல் பாதத்தில் 'நிகராத்' என்றும் பாடங் காண்கிறதாம். கிரீடத்திலுள்ள ரத்நஸமூஹம் முதற்கொண்டு என்று பொருளாம். மேல் தொண்ணூற்றிரண்டாம் ச்லோகத்தில் "மாணிக்ய மகரீலஸத் ச்ருங்கம்" என்றிருப்பதோடு பொருந்தின 'மகராத்' என்ற பாடத்தில், திருவபிஷேகத்தில் ரத்நம் மகரவடிவாக இழைக்கப்பட்டிருக்கிற தென்கை. 'தூராய்' என்கிற திருவாபரணத்தைச் சொல்லுகிறதென் பாருமுண்டு. (83)

अरविन्दितमङ्घ्रिपाणिवक्त्रैरपि तापिञ्छितमञ्चिताङ्गकान्त्या ।
अधरेण च बन्धुजीवितं श्रीः नियतं नन्दनयेत रङ्गचन्द्रम् ॥८४॥

அரவிந்திதமங்க்ரிபாணிவக்த்ரை: அபி தாபிஞ்சிதமஞ்சிதாங்ககாந்த்யா,
அதரேண ச பந்துஜீவிதம் ஸ்ரீ: நியதம் நந்தநயேத ரங்கசந்த்ரம். (84)

Srivatsam

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| அங்க்ரி பாணி வக்த்ரை: | திருவடிகள் திருக்கைகள் திருமுகம் ஆகிய இவற்றால் | அதரேண | — திருவதரத்தினால் |
| *அரவிந்திதம் | — தாமரை பூத்திருக்கப்பெற்றும் | பந்துஜீவிதம் ச | பந்துஜீவ புஷ்பம் பூத்திருக்கப்பெற்று மிராநின்ற |
| ருஞ்சித அங்க காந்த்யா | சிறந்த திருமேனி யொளியினால் | ரங்கசந்த்ரம் | — பெரிய பெருமாளை |
| தாபிஞ்சிதம் அபி | பச்சிலை மரங்கள் பொருந்தப்பெற்றும் | ஸ்ரீ: | — பெரிய பிராட்டியார் |
| | | நந்தநோபத நியதம் | நந்தவனமாகக் கொண்டு விஹரிப்பர் போலும். |

* * *பெரிய பெருமாளை அம்ருத ப்ரவாஹமாக அநுபவித்தார் கீழ்ச்லோகத்தில். நந்தவனமாக அநுபவிக்கிறாரிதில். நந்தவனத்தில் நல்ல தாமரைமலர்களும் பச்சிலைமரங்களும் பந்துஜீவ [உச்சித்திலக] புஷ்பங்களும் நிரம்பியிருக்கும்; அப்படி இங்குண்டோவென்ன? அவை இங்கும் குறையற்றன வென்கிறார். திருவடிகள், திருமுகம் இவைகளே தாமரைமலர்களாம்; பச்சைமாமலைபோல் மேனியின் புகர் பச்சிலைமரங்களாம்; பழுப்பேறின திருவதரம் பந்துஜீவபுஷ்பமாம். ஆக இவ்வகையாலே நந்தவனமென்னப் பொருத்தமுடைய பெரிய பெருமாள் பெரிய பிராட்டியாருடைய திருவிளையாட்டுக்குப் பாங்கு என்றாராயிற்று. 'நியதம்' என்கிற அவ்யயம் உத்ப்ரேக்ஷாஸூசகம்.

अन्योन्यरञ्जकरुचोऽनुपमानशोभाः दिव्यस्रगम्बरपरिष्करणाङ्गरागाः ।
संस्पर्शतः पुलकिता इव चिन्मयत्वाद्रङ्गेन्दुकान्तिमधिकामुपबृंहयन्ति ॥८५॥

Srivatsam

அந்யோந்யரஞ்ஜகருசோநுபமாநசோபா: திவ்யஸ்ரகம்பரபரிஷ்கரணாங்கராகா:,
ஸம்ஸ்பர்சத: புலகிதா இவ சிந்மயத்வாத் ரங்கேந்துகாந்திமதிகாமுபப்ரும்ஹயந்தி. (85)

| | | | |
|---|---|---|---|
| அந்யோந்ய ரஞ்ஜக ருச: | ஒன்றுக்கொன்று சோபையை விளைக்கின்ற காந்தியையுடையவைகளாய் | சித்—மயத்வாத் | ஸ்வயம் சேதநஸ்வரூபமாகையாலே |
| அநுபமாந சோபா: | ஒப்பற்ற ஒளியையுடையவைகளான | ஸம்ஸ்பர்சத: | — திருமேனி ஸம்பந்தத்தினால் |
| திவ்ய ஸ்ரக் | — வைஜயந்தீ மாலையென்ன | புலகிதா: இவ | மயிர்கூச் செறியப் பெற்றவை போன்று |
| அம்பர | — பீதாம்பரமென்ன | அதிகாம் | — அதிகமான |
| பரிஷ்கரண | — திருவாபரணங்களென்ன | ரங்கேந்து காந்திம் | பெரிய பெருமாளுடைய சோபையை |
| அங்கராகா: | சாத்துப்படியென்ன இவைகள் | உபப்ரும்ஹயந்தி | பின்னையும் அதிகப்படுத்துகின்றன. |

* * *—பெரியபெருமானுக்கு இயற்கையாகவே அளவற்ற காந்தி இருந்தாலும், வனமாலை திருப்பீதாம்பரம் திருவாபரணம் முதலியவற்றால் இன்னமும் அதிகமாகச் செய்யப்படுகிறது அந்தத்திருமேனியின் திவ்யதேஜஸ்ஸு என்கிறார்.

[அந்யோந்யரஞ்ஜகருச:] பீதாம்பரத்தின் சோபையினால் வனமாலைக்கு சோபாவிசேஷம்; வநமாலையின் சோபையினால் பீதாம்பரத்துக்கு சோபாவிசேஷம் என்றிப்படி ஒவ்வொன்றும் பரஸ்பர சோபாதிசய ஹேதுவாயிருக்கிறபடி. *ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை:, சிந்மயைஸ் ஸ்வப்ரகாசைச்ச அந்யோந்யருசிரஞ்ஜகை:* என்கிற பௌஷ்கரப்ரமாணத்தைத் திருவுள்ளம்பற்றி இந்தச்லோக மருளிச்செய்யப்படுகிறது. அங்குள்ள விசேஷணங்களே பெரும்பாலுமிங்குள்ளன.



http://acharya.org

[சிந்மயத்வாத் ஸம்ஸ்பர்சத: புலகிதா இவ] கீழெடுத்த பிரமாணத்தின்படியே திருப்பீதாம்பரம் முதலியவை யெல்லாம் சைதந்யசாலிகளாகையாலே பெரியபெருமாளுடைய திருமேனியோடுண்டான ஸம்ஸர்க்கத்தினால் ரோமாஞ்சிதங்களாயினவோ! என்னும்படியா யிருக்கும். அதாவதென்னென்னில்; இத்திருமேனியிலுள்ள பீதாம்பர வநமாலாதி வஸ்துக்களே வேறோரிடத்தில் இருக்குமாகில் இத்தனை புகர் பெறமாட்டா; இத்திருமேனி யோட்டைச் சேர்த்தியினாலாயிற்று அவற்றுக்குப் புகர் விஞ்சிற்று என்கை.

[ஸங்கேந்து காந்திமதிகாமுபப்ரும்ஹயந்தி.] பெரிய பெருமாளுடைய திருமேனியின் ஸ்பர்சத்தாலே இவற்றுக்குப் புகர் விஞ்சுகிறது; இவற்றின் சேர்த்தியாலே திருமேனிக்குப் புகர் விஞ்சுகிறது என்றதாயிற்று. இத்திருமேனிக்கு இவைவேணும்; இவற்றுக்கும் இத்திருமேனியே அமையும் என்றபடி. (85)

द्रुतकनकजगिरिपरिमिलदुदधिप्रचलितलहरिवदहमहमिकया ।
स्नपयति जनमिममपहरति तमः फणिशयमरतकमणिकिरणगणः ॥८६॥

த்ருதகநகஜகிரிபரிமிலதுததி ப்ரசலிதலஹரிவதஹமஹமிகயா,
ஸ்நபயதி ஜநமிமமபஹரதி தம: பணிசயமரதகமணிகிரணகண:. (86)

| | | | |
|---|---|---|---|
| பணிசய | அரவணைமேற் பள்ளி கொள்ளும் பெரிய பெருமானாகிற | ப்ரசலித | — பரம்பின |
| மரதகமணி | — மரதகப் பச்சையினுடைய | லஹரிவத் | — அலைகள்போன்று |
| கிரணகண: | — காந்திஸமூஹமானது | அஹமஹமிகயா | — முற்கோலி வந்து |
| த்ருத | — (காய்ந்து) உருகின | இமம் ஜநம் | — அடியேனை |
| கனகஜகிரி | — பொன்மலையோடு | ஸ்நபயதி | — ஸ்நாநஞ் செய்விக்கின்றது; |
| பரிமிலத் | — கூடாநின்ற | தம: | — அகவிருளை |
| உததி | — ஸமுத்திரத்தில் நின்றும் | அபஹரதி | — அகற்றுகின்றது. |

* * *—"முடிவில்லதோரெழில் நீலமேனி ஐயோ! நிறைகொண்டதென்னெஞ்சினையே" என்ற திருப்பாணாழ்வார் பாசுரம் நினைவுக்கு வருகின்றது. அந்த நீலமேனியிலீடுபட்டு ஆச்சரியமாக அருளிச்செய்கிறார்.

"பணிசய மரதகமணி கிரணகண:" என்றதற்கு—அநந்தசாயியான பெரியபெருமாளுடைய மரதகப்பச்சையின் கிரண ஸமூஹமென்று சிலர் பொருள்கொள்வர்; அங்ஙனன்று: 'பணிசய ஏவ மரதகமணி:' என்றாய் அநந்தசாயியான பெரியபெருமானாகிற மரதகமணியின் காந்திஸமூஹமென்று பொருளாகக்கடவது. "வள்ளலே மதுசூதனா என்மரதகமலையே!" என்றும் "விளக்கொளியை மரதகத்தை" என்றும் ஆழ்வார்கள் பலவிடங்களிலும் எம்பெருமானை மரதகமணியாகவே அருளிச்செய்வது காண்க. ஆக, ஸ்ரீரங்கநாதனாகிற மரதகமணியின் காந்திஸமூஹமானது எங்ஙனே சொல்லலாம்படியிருக்கிறதென்னில், [த்ருதகநகஜகிரி பரிமிலதுததி ப்ரசலித லஹரிவத்] உருகிப் பெருகுகின்றதொரு பொன்மலையோடே சேர்ந்த ஸமுத்ரத்தின் அலைவரிசையோ! என்னலாம்படியிருக்கின்றது. பொன்னரைநாண் முதலிய திவ்யாபரணங்கள், அரையிலுடுத்த [illegible], பீதகவாடை ஆகிய இவற்றின் பொன்னிறமான ஒளியோடு கலசிய நீலமேனி

கிறத்திற்கு இவ்வுபமானம் மிகப்பொருந்தும். த்ருதகநகஜுகிரீஸ்தாநத்தில் பீதாம்பராதிகளும், உததிஸ்தாநத்தில் திவ்யாங்கவிக்ரஹமும் லஹரீஸ்தாநத்தில் கிரணஸமூஹமும் கொள்ளத்தக்கன. இப்படிப்பட்ட விலக்ஷணமான புகர்வெள்ளங்களானவை ஒன்றின் முன் ஒன்றாகப் போட்டிபோட்டுக்கொண்டு அடியேன்மீது பாய்கின்றன; அவை விருசீயும் அகற்றுகின்றன என்றாராயிற்று. அதாவது இத்திவ்யாங்கவிக்ரஹசோபையிலே அடியேனீடுபட்டு ஞானவொளி நிரம்பப்பெற்றேனென்கை. ... (86)

भोगीन्द्रनिःश्वसितसौरभवर्धितं श्रीनित्यानुषक्तपरमेश्वरभावगन्धि
सौरभ्यमाप्लुतदिशावधि रङ्गनेतुरानन्दसंपदि निमज्जयते मनांसि ॥८७॥

போகீந்த்ரநி:ச்வஸித ஸௌரபவர்த்திதம் ஸ்ரீ நித்யாநுஷக்தபரமேச்வரபாவகந்தி,
ஸௌரப்யமாப்லுததிசாவதி ரங்கநேது: ஆநந்தஸம்பதி நிமஜ்ஜயதே மநாம்ஸி. (87)

| | | | |
|---|---|---|---|
| போகீந்த்ர | (பள்ளி மெத்தையான) திருவனந்தாழ்வானுடைய | ஆப்லுத திசா அவதி | திசைகளின் எல்லைகளை வியாபித்ததான |
| நி: ச்வஸித | — மூச்சுக் காற்றினுடைய | ரங்கநேது: ஸௌரப்யம் | பெரிய பெருமாளுடைய பரிமளம் |
| ஸௌரப | — பரிமளத்தாலே | மநாம்ஸி | (ஸேவிப்பவர்களது) உள்ளத்தை |
| வர்த்திதம் | — வளர்த்தப்பட்டதாய், | ஆநந்தஸம்பதி | — ஆனந்தச் செல்வத்தில் |
| ஸ்ரீ நித்ய அநுஷக்த | பிராட்டியின் நித்ய ஸம்ச்லேஷத்தாலுண்டான | நிமஜ்ஜயதே | — மூழ்குவிக்கின்றது. |
| பரமேச்வரபாவ | — ஸர்வேச்வரத்வத்தினால் | | |
| கந்தி | —பரிமளித்துக்கொண்டிருப்பதாய் | | |

* * *—கீழ்ச்லோகத்தில் 'ஸ்நபயதி' என்று ஸ்நாநம் ப்ரஸ்துதமாயிற்று; ஸ்நாநமானதும் சாந்தணிதல் அபேக்ஷிதமாகுமிறே; பெரியபெருமாளுடைய திவ்யகந்தமே தம்மைக் கமழ்விக்கின்றதென்கிறாரிதில். காந்தி ஸமுத்ரத்திலே மூழ்கினமை சொன்னார் கீழ்ச்லோகத்தில். ஆநந்த ஸாகரத்தில் மூழ்குகின்றமை சொல்லுகிறாரிதில்.

*ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:* என்கிறபடியே எம்பெருமானுடைய திருமேனியானது பரிமளமயமாயிருக்கும். அப்படிப்பட்ட திருமேனியின் பரிமளத்திற்கு இன்னமும் புஷ்டி உண்டாகும் படியை இரண்டு விசேஷணங்களா லருளிச்செய்கிறார். [போகீந்த்ர நி:ச்வஸித ஸௌரபவர்த்திதம்] எம்பெருமானோடு பரமஸாம்யாபந்நனாயிருக்கும் திருவனந்தாழ்வானுடைய மூச்சுக்காற்றின் பரிமளம் சிறந்தது; அதுவும் இத்திருமேனி நறுமணத்தோடே கூடியதனால் அபிவ்ருத்தியாயிற்றென்கை. ஸ்ரீநித்யாநுஷக்த பரமேச்வர பாவகந்தி.] 'கந்தத்வாராம்' என்று ச்ருதிப்ரஸித்தையான பிராட்டியின் நித்யஸம்பந்தத்தினால் பரிமளப்ராசுர்ய முண்டாகக் சொல்லவேணுமோ? *அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா* இத்யாதிப்படியே பிராட்டியின் நித்யயோகத்தினால் எம்பெருமானுக்குப் பரமேச்வரத்வம் பொலிகின்றது; பரமேச்வரத்வப்ரயுக்தமான பரிமளம் எம்பெருமானுக்குள்ளது; பரமேசவரத்வமில்லையாகில் பரிமளமில்லை; பிராட்டியின் நித்யயோகமில்லையாகில் பரமேச்வரத்வமில்லை என்கிற இம்முகத்தாலே பிராட்டியின் ஸம்பந்தம் பெரிய பெருமாளுடைய பரிமளத்திற்கு அபிவர்த்தகமாகிறதென்று திருவுள்ளம். [ஆப்லுததிசாவதி] பரப்ரஹ்மத்தினுடைய பரிமளமாகையாலே ஒரு மூலையடியே விச்ராந்தமாகாமல் திசைகள் தோறும் பரவுகின்றதென்கிறார். (87)

रङ्गभर्तुरपि लोचनचर्चां साहसावलिषु लेखयमानम् ।
पुष्पहास इति नाम दुहानं सौकुमार्यमतिवाङ्मनसं नः ॥८८॥

ரங்கபர்த்துரபி லோசநசர்ச்சாம் ஸாஹஸாவளிஷு லேகயமாநம்,
புஷ்பஹாஸ இதி நாம துஹாநம் ஸௌகுமார்யமதிவாங்மநஸம் ந: (88)

| | | | |
|---|---|---|---|
| லோசநசர்ச்சாம் அபி | (தன்மேல்) கண்கள் படுவதையும் | துஹாநம் | — விளைவிப்பதுமான |
| ஸாஹஸ ஆவலிஷு | ஸாஹஸகாரியங்களின் வரிசைகளிலே | ரங்கபர்த்து: ஸௌகுமார்யம் | பெரிய பெருமாளது ஸௌகுமார்யமானது |
| லேகயமாநம் | —எழுதும்படி செய்யாநிற்பதும், | ந: அதிவாங் மாநஸம் | நம்முடையவாக்குக்கும் சிந்தைக்கும் விஷய மன்று. |
| புஷ்பஹாஸ: இதி நாம | 'புஷ்பஹாஸ:' என்கிற திருநாமத்தை | | |

* * *—கீழ்ச்லோகத்தில் பெரியபெருமாளுடைய திருமேனியின் பரிமளத்தைப் பேசினார்; அதன் பிறகு அத்திருமேனியின் ஸௌகுமார்யத்தைப்பற்றிப் பேசநினைத்தார்; வாக்குக்கும் சிந்தைக்கும் விஷயமன்றிக்கே பரமவிலக்ஷணமாயிருக்கின்ற ஸௌகுமார்ய குணம் நெஞ்சால் நினைப்பரிதாயிருக்க அதனை எங்ஙனே வாய்கொண்டு பேசப்போகிறேனென்கிறார். பேசமுடியாதென்று சொல்லிக்கொண்டே சிறிது பேசிவிடுகிற வழக்கமுண்டே; அப்படியே சிறிது பேசுகிறார் [லோசநசர்ச்சாமபி ஸாஹஸாவளிஷு லேகயமாநம்] ஸேவார்த்திகள் கண்ணால் உறைக்கப்பார்த்தாலுங்கூட 'இப்படியும் ஒரு ஸாஹஸமான காரியம் செய்யலாகுமோ' என்ன வேண்டும்படியிருக்குமாம் ஸௌகுமார்யம். பார்ப்பதே ஸாஹஸம். கண்ணால் உற்றுநோக்கினால் திருமேனி வாடிப்போகும்படியான மார்த்தவமென்கை. *சேஷப்ருசா லோகிதை ரங்கமலாநி:* என்ற ஸ்ரீகுணரத்நகோச ஸூக்தியும் காண்க.

'ரங்கபர்த்து:' என்ற பதத்திற்கு ஸௌகுமார்ய பதத்தில் அந்வயம். மூலத்திலுள்ளபடியே அவ்யவஹிதமாக அந்வயித்தும் பொருள் கொள்ளலாம். அதாவது பெரியபெருமாள் தாம் தம்திருக்கண்களாலே தம்மை நோக்கினாலும் வாடிப்போம்படியான மென்மை என்றபடி.

[புஷ்பஹாஸஇதி நாம துஹாநம்] ஸஹஸ்ரநாமத்தில் எம்பெருமானுக்குப் 'புஷ்பஹாஸ:' என்றொரு திருநாமமுண்டு. [புஷ்பஹாஸ: ப்ரஜாகர:] அந்தத் திருநாமமுண்டானதற்கு அடி இந்த ஸௌகுமார்யமே யென்கிறார். பூப்போலே ஸுகுமாரமான திருமேனியையுடையவன் என்பது அதன் தேர்ந்தகருத்து. இப்படிப்பட்ட ஸௌகுமார்யமில்லாவிடில் அந்தத்திருநாமம் அன்வர்த்தமாகாதிறே. (88)

एकैकस्मिन्परमवयवेऽनन्तसौन्दर्यमग्नं सर्वं द्रक्ष्ये कथमिति मुधा मामथा मन्दचक्षुः ।
त्वां सौभ्रात्रव्यतिकरकरं रङ्गराजाङ्गकानां तल्लावण्यं परिणमयिता विश्वचारीणवृत्ति ॥८९॥

ஏகைகஸ்மிந் பரமவயவே(அ)நந்தஸௌந்தர்யமக்நம்
ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதா மாமதா மந்தசக்ஷு:,
த்வாம் ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் ரங்கராஜாங்ககாநாம்
தல்லாவண்யம் பரிணமயிதா விச்வசாரீணவ்ருத்தி. (89)

Srivatsam

http://acharya.org

| | |
|---|---|
| ஹே மக்தசக்ஷு: | — ஓ மூடமான கண்ணே!, |
| ஏகைகஸ்மிந் | — 'இவ்வொரு |
| அவயவே பரம் | — அவயவத்திலே |
| அநந்த | — எல்லையற்றதான |
| ஸௌந்தர்ய | — அழகிலே |
| மக்நம் | — முழுகியிருக்கிற |
| (அஹம்) | — நான் |
| ஸர்வம் | — எல்லா அவயவத்தையும் |
| கதம் | — எப்படி |
| த்ரக்ஷ்யே | — அநுபவிக்கப்போகிறேன்?' |
| இதி | — என்று |
| முதா | — வீணே |
| மா மதா: | — [illegible]; |
| ரங்கராஜ அங்ககாநாம் | பெரிய பெருமாளுடைய அவயவங்களுக்கு |
| ஸம்ப்ராத்ர வ்யதிகரகரம் | கட்டின்தொடர்பை விளைவிக்கின்ற |
| தத் லாவண்யம் | — அந்த ஸமுதாயசோபையானது |
| த்வாம் | — உன்னை |
| விச்வபாரீண வ்ருத்தி | எல்லா அவயவங்களையும் பூர்த்தியாக அநுபவித்தவனாக |
| பரிணமயிதா | — நிறைவேற்றிவிடும். |

* * *—வடிவழகில் இரண்டுவகையுண்டு; ஸௌந்தர்யமென்பது ஒன்று, லாவண்யமென்பது ஒன்று. தனித்தனி ஒவ்வோரவயவத்தின் அழகு ஸௌந்தர்யமெனப்படும்; எல்லா அவயவங்களினுடையவும் ஸமுதாயத்தில் தோன்றுமழகு லாவண்யமெனப்படும். (இதற்கு நீரோட்டமென்றும் பெயருண்டு) ஆக இவ்விரண்டு வகையான அழகும் பெரியபெருமாள் பக்கலிலே குறையற்றதென்னுமிடத்தை ஒரு ஸாத்காரமாக அருளிச்செய்கிறாரிதில்.

பட்டர் தம்முடைய திருக்கண்களை விளித்து உபதேசிப்பதாக அமைந்தது இந்த ச்லோகம். கம்பராமாயணத்தில் (பாலகாண்டம் உலாவியற்படலம் 12.) "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன, தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைக்கண்டாருமஃதே, வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்? ஊழ்கொண்ட சமயத்தன்னானுருவு கண்டாரை யொத்தார்." என்று சொல்லப்பட்டுள்ளபடியே, எம்பெருமானுடைய ஓரவயவத்திலே கண்வைத்தால் மறுபடியும் கண்ணை அதில் நின்றும் பேர்த்து வேறோரவயவத்தில் செலுத்தப்போகாமல் ஒரோன்றிலேயே கண் பதிந்து போகும்படியிருக்கும். ஆகவே பெரிய பெருமாளுடைய எல்லா அவயவங்களையும் முழுக்க அநுபவிக்க வேணுமென்னும் விருப்பமுடைய தமது கண்கள் 'ஐயோ! ஸ்ரீரங்கநாதனுடைய ஒவ்வொரு அவயவத்தின் அழகே என்னைக்கொள்ளை கொண்டுபோகிறதே!, ஒன்றைவிட்டு வேறொன்றிலே செல்லமுடியவில்லையே! எல்லா அவயவங்களையும் நான் எப்படி அநுபவிப்பேன்?' என்று வியாகுலப்பட்டனவாகக் கொண்டு, அக்கண்களுக்குத் தேறுதல் கூறுகிறார்—கண்ணே! இப்படி நீ வியாகுலப்படவேண்டா; பெரிய பெருமாளுடைய ஒவ்வொரு அவயவமும் உன்னைத் தன்னிடத்து ஆழங்காற்படுத்திப் பக்கநோக்கறியவொட்டாமே செய்துவிடுமென்பது உண்மையே; ப்ரத்யங்க சோபை அப்படி செய்துவிட்டாலும் லாவண்யமென்கிற ஸமுதாய சோபையென்பதொன்றுண்டே, அது உன் நினைவைத் தலைக்கட்டிவைக்கும்; அது எல்லா அவயவங்களையும் தொடர்ந்ததொரு ஸூத்ரம் போன்றிருப்பதால் ஒரு அவயவத்தில் நின்றும் மற்றோரவயவத்திற்கு மெல்லமெல்ல உன்னைக்கொண்டுபோவதாகி க்ரமேண ஸகலாவயவங்களையும் பூர்ணமாக அநுபவிப்பிக்கும். ஆகையாலே ஒரு குறையுமிராது; இதனையறியாமல் மூடத்தனமாய் நீ ஏன் வருந்துகிறாய்? வருந்தாதே என்று தேற்றும் முகத்தால், தாம் அந்த லாவண்யத்தையே வழிகாட்டியாகக் கொண்டு பெரிய பெருமாளுடைய ஸர்வாவயவங்களையும் அநுபவிக்க இழிகின்றமையும் வெளியிட்டருளினாராயிற்று.

Srivatsam

http://acharya.org

திருப்பாணாழ்வார் முதலானோர் அமலனாதிபிரான் முதலான திவ்யப்ரபந்தங்களில் பெரியபெருமாளுடைய ஒவ்வொரு அவயவத்திலும் தனித்தனி ஆழ்ந்து, பேர்க்கவும் போராத சிந்தையராயிருந்தும் ஒரு அவயவத்தையும் விடாதே எல்லா அவயவங்களையும் அநுபவித்துத் தீர்த்தது இந்த லாவண்யத்தை அண்டைகொண்டே போலும்.

[ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் லாவண்யம்] ஸஹோதரர்கள் பலரிருந்தால் அவர்கட்குப் பரஸ்பரம் பிணக்கமின்றியே ஸ்நேஹமேயிருந்தால் அது ஸௌப்ராத்ர மெனப்படும். இங்கு அவயவங்களை ப்ராதாக்களாகக் கொள்க; ஒவ்வொரு அவயவமும் 'என்னை விட்டு அப்பால் நகராதே, என்னைவிட்டு அப்பால் செல்லாதே' என்று கண்ணைக் கொள்ளைகொள்வதனால் இவை பரஸ்பரம் ஸ்நேஹரஹிதமாய்ப் பிணக்கமுற்றிருந்தன; அந்தப்பிணக்கத்தை நீக்கி அன்பை வளர்த்ததாம் லாவண்யம். எல்லா அவயவங்களோடும் கலந்து பரிமாறப் பாங்குசெய்ததிறே. (89)

वपुर्मन्दारस्य प्रथमकुसुमोल्लाससमयः क्ष्मालक्ष्मीभृङ्गीसकलकरणोन्मादनमधु ।
विकासस्सौन्दर्यस्रजि रसिकताशीधुचुलको युवत्वं रङ्गेन्दोस्सुरभयति नित्यं सुभगताम् ॥९०॥

வபுர்மந்தாரஸ்ய ப்ரதமகுஸுமோல்லாஸஸமய:
க்ஷமாலக்ஷ்மீப்ருங்கீஸகலகரணோந்மாதநமது,
விகாஸஸ் ஸௌந்தர்யஸ்ரஜி ரஸிகதாசீதுசுலக:
யுவத்வம் ரங்கேந்தோஸ் ஸுரபயதி நித்யம் ஸுபகதாம். (90)

| | | | |
|---|---|---|---|
| வபு: மந்தாரஸ்ய | திருமேனியாகிற கல்பவ்ருக்ஷத்திற்கு | ஸௌந்தர்யஸ்ரஜி | அழகாகிற பூமாலையிலே உண்டான |
| ப்ரதமகுஸும உல்லாஸஸமய: | முதல்புஷ்பம் புஷ்பிக்கும் பருவமாயும், | விகாஸ: | - விகாஸம் போன்றதாயும் |
| க்ஷமா | - பூமிப்பிராட்டியென்ன | ரஸிகதா சீது சுலக: | ரஸிக்யமாகிற மதுவை அடைக்கிவைத்துக் கொண்டிருப்பதாயுமுள்ள |
| லக்ஷ்மீ | - திருமகளென்ன (இவர்களாகிற) | | |
| ப்ருங்கீ | - பேடை வண்டுகளுக்கு | ரங்கேந்தோ: நித்யம் யுவத்வம் | பெரியபெருமாளுடையநித்ய யௌவனமானது |
| ஸகலகரண | - எல்லா இந்திரியங்களையும் | ஸுபகதாம் | - ஸௌபாக்யத்தை |
| உந்மாதக | - உந்மத்தமாக்கவல்ல | ஸுரபயதி | - பரிமளிப்பிக்கின்றது. |
| மது | - தேன் போன்றதாயும், | | |

***—பெரிய பெருமாளுடைய யௌவநாவஸ்தையை வருணிக்கிறார். புராண புருஷராயிருக்கிற பெருமாளுக்குத் திருமேனி தளர்ந்திருக்குமே. கீழ்ச்லோகத்திற் கூறியபடி சௌந்தர்ய லாவண்யங்கள் சிறந்திருக்கும்படி யெங்ஙனே? என்று ஒரு சங்கை உண்டாக, யௌவநம்வந்து தலைகாட்டுவதாகிற யௌவநப்ராதுர்ப்பாவஸமயமே எம்பெருமானிடத்தில் எப்போதுமுள்ளது என்கிறார் [வபுர்மந்தாரஸ்ய ப்ரதமகுஸுமோல்லாஸஸமய:] பெரிய பெருமாளுடைய யௌவநப்ராதுர்ப்பாவநிலைமை இங்ஙனே சொல்லலாம்படி யிருக்கிற தென்கிறார். திருமேனியாகிறவொரு கல்பவ்ருக்ஷத்திற்கு முதல் முதலாக புஷ்பம் புஷ்பிக்கும் ஸமயம்போலும். ப்ரதமகுஸுமோல்லாஸ ஸமயத்தில் கல்ப வ்ருக்ஷம் எங்ஙனே இயல்பை வாய்ந்து சோபிக்குமோ அங்ஙனே சோபிக்கிறாரென்றபடி.

Srivatsam

http://acharya.org

[க்ஷமாசாலக்ஷ்மீப்ருங்கீஸகலஸரோஜேந்மாதநமது.] முதல் பாதத்தில் புஷ்பம் ப்ரஸ்துதமாயிற்றிறே, புஷ்பந்தான் மதுவை விட்டிராதிறே, பெரிய பெருமாளுடைய யௌவனம் மதுவாகவும் பேசலாயிருக்கிறதென்கிறார். மதுவைபருகுமவை வண்டுகளே. திருமகளும் மண்மகளுமாகிறவண்டுகள் ஸர்வேந்திரியங்களாலும் பருகி உந்மாதமடையும்படியான மதுவோ இந்த யௌவநம்!. நித்யயௌவநவிசிஷ்டமான இந்தத் திருமேனியைப் பிராட்டிமார்கள் அநுபவித்துப் பிச்சேறுகின்றனரென்கை.

[விகாஸஸ் ஸௌந்தர்யஸ்ரஜி] ஸௌந்தர்யமாகிற ஒரு பூமாலை விகஸிக்கும் நிலைமையை ஒக்குமாய்த்து யௌவநாவஸ்தை. [ரஸிகதாசீதுசுளக:] ராஸிக்யமாகிற அமுத வெள்ளம் அடங்கியிருக்கும்படியைச் சொன்னவாறு. ஆசமநம் செய்வதற்குப் பாங்காக உள்ளங்கையை அமைத்துக் கொள்வது சுலகமெனப்படும். கையைப்பரப்பிவிடுகையன்றிக்கே அடக்கமாகச் சுருக்கிக் கொள்வதைச் சொல்வதான இந்த சுலகசப்தத்தை இங்கு ப்ரயோகித்தது மிகவுமழகியது. ராஸிக்யத்தை வெட்ட வெளிச்சமாகப் பரப்பி விடாமல் அடக்கமாகக் காட்டிக்கொள்ளும் நிலைமையிறே யௌவநப்ராதுர்ப்பாவ ஸமயம். இங்ஙனே பட்டர் ஆழ்ந்த கருத்தை யடக்கிப் பதப்ரயோகம் செய்யுமாபோலவேயிறே பெரிய பெருமாளுடைய ராஸிக்யமு மிருக்கிறபடி. இப்படிப்பட்ட யௌவந மில்லையாகில் பெரியபெருமாளுடைய ஸௌபாக்யம் பரிமளிக்க வகையில்லையாதலால் "யுவத்வம் ரங்கேந்தோஸ் ஸௌரபயதி நித்யம் ஸௌபகதாம்" என்று தலைக்கட்டினர். பெருமாளுடைய பெருமைக்கு நறுமண மூட்டுகிறதாய்த்து இந்த யௌவநம். (90)

किरीटचूडरत्नराजिराधिराज्यजल्पिका ।
मुखेन्दुकान्तिरुन्मुखं तरङ्गितेव रङ्गिण ॥९१॥

கிரீடசூடரத்நராஜி: ஆதிராஜ்யஜல்பிகா,
முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:. ... (91)

| | | | |
|---|---|---|---|
| ரங்கிண: | பெரிய பெருமாளுடைய | உந்முகம்(யதாததா) | மேல்முகமாக |
| ஆதிராஜ்ய ஜல்பிகா | ஸர்வேச்வரத்வத்தைத் தெரிவிக்கின்ற | தரங்கிதா | பரம்பின |
| கிரீட சூட ரத்ந ராஜி: | திருவபிஷேகம் திருமுடிப் பட்டை ஆகிய இவற்றிலழுத்தின ரத்ந பங்க்தியானது | முக இந்துகாந்தி: இவ | முகசந்திரனுடைய சோதியோ! |

* * *—இனி இந்த சதகம் முடியத் திருமுடி தொடங்கித் திருவடியிருக வடிவழகிலேயீடுபட்டுப் பேசும் ச்லோகங்களாம். திருமுடிச்சோதியி லாழ்ந்து பேசும் ச்லோகமிது. திருவாய்மொழியில் "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?" (3—1—1.) என்ற ஓரடியையே இந்தச்லோகமாக்கி யருளிச்செய்திருக்கிறு ரென்றுணர்க.

[किरीटश्च चूडा च तयोस्समाहारः; तस्मिन् रत्नराजिः] திருவபிஷேகத்தின் அடியில் சாத்தும் முகப் பட்டைக்கு 'சூடா' என்று பெயர். ×கிரீடத்திலும் திருமுகப் பட்டையிலும் அழுத்தியுள்ள ரத்நங்களின் சோதியை நோக்கினால், திருமுகமாகிற சந்திரனுடைய காந்தி ஸமூஹந்தான் மேல்முகமாகக் கிளர்ந்து முடிச்சோதியாகக் காண்கிறதோ! என்று' உத்ப்ரேக்ஷிக்கிறபடி. 'உண்மையில் திருமுக மண்டலத்திற்கு மேல் திருவபி

http://acharya.org

ஷேகம் கிடையாது, திருமுகச்சோதிதான் திருமுடியாகத் தோற்றுகிறது என்பது இந்த உத்ப்ரேக்ஷையின் உட்கருத்து. ... (91)

शिखारत्नोद्दीप्रं दिशिदिशि च माणिक्यमकरीलसच्छृङ्गं रङ्गप्रभुमणिकिरीटं मनुमहे ।-
समुत्तुङ्गस्फीतं चिदचिदधिराजश्रिय इव प्रियाक्रीडं चूडामणिमपि नितम्बं तमभितः ॥९२॥

சிகாரத்நோத்தீப்ரம் திசிதிசி ச மாணிக்யமகரீ
லஸச்ச்ருங்கம் ரங்கப்ரபுமணிகிரீடம் மநுமஹே,
ஸமுத்துங்கஸ்பீதம் சிதசிததிராஜச்ரிய இவ
ப்ரியாக்ரீடம் சூடாமணிமபி நிதம்பம் தமபித:. (92)

| | | | |
|---|---|---|---|
| திசி திசி ச | - திசைகள் தோறும் | ஸமுத்துங்க ஸ்பீதம் | உச்சதமாயும் பருத்து மிருக்கின்ற |
| சிகாரத்ந | - சூடாமணியினால் | ப்ரிய ஆக்ரீடம் | - இனிய லீலா சைலமாக |
| உத்தீப்ரம் | - மிகவும் விளங்கா நிற்பதாய் | மநுமஹே | - எண்ணுகிறோம்; |
| மாணிக்ய மகரீ லஸத் ச்ருங்கம் | மகரவடிவமான மாணிக்க மணியினால் விளங்குகின்ற நுனியையுடையதுமான | தம் அபித | அந்த கிரீடத்தைச் சுற்றிலும் (இருக்கின்ற) |
| ரங்கப்ரபு மணி கிரீடம் | பெரிய பெருமாளுடைய ரத்ந கிரீடத்தை,— | சூடாமணிம் அபி | திருமுகப் பட்டையிலுள்ள ரத்னத்தையும் |
| சித் அசித் அதி ராஜ ச்ரிய: | ஸகலசேதநா சேதநங்களுக்கும் நியாமகனாயிருக்கையாகிற ஸாம்ராஜ்ய லக்ஷ்மிக்கு | நிதம்பம் | அந்த க்ரீடா பர்வதத்தின் சுற்றுப் பிரதேசமாக |
| | | மநுமஹே | - எண்ணுகிறோம். |

* * *—'எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வ லக்ஷ்மியின் ஸ்வேச்சாவிஹாரார்த்தமாக நிருமித்ததொரு மலையோ இது!' என்னலாம்படியிருக்கிறதாம் திருவபிஷேகம். உபயவிபூதி நாயகத்வத்துக்கு ஸூசகமாகக் கிரீடமணிந்திருக்கிறபடியைப் பேசினவாறு கிரீடத்தை மலையாகப் பேசினதற்குப் பொருத்தமான விஷயங்களை யருளிச்செய்கிறார் சிகாரத்நோத்தீப்ரம் இத்யாதி விசேஷணங்களால்.

[திசிதிசிச சிகாரத்நோத்தீப்ரம்] ரத்னங்கள் கடலில் உண்டாவது போல மலைகளிலு முண்டாவதுண்டிறே; ஆகவே எங்கும் ரத்னவொளி நிரம்பியிருக்கும் மலை. இது திருவபிஷேகத்திற்குச் சொல்லவேணுமோ? [மாணிக்யமகரீலஸத் ச்ருங்கம்] மலையின் கொடுமுடியானது மாணிக்கங்களினால் விளங்காநிற்கும்; திருவபிஷேகமும் மகராகாரமாக அமைந்த மாணிக்கத்தினால் விளங்குகின்ற நுனியையுடைத்தாயிருக்கின்றது. கீழ் (83) "ஆமௌலிரத்ந மகராத்" என்றது இங்கே ஸ்மரிக்கத்தகும். [ஸமுத்துங்கஸ்பீதம்] உயர்த்தியும் செறிப்பு முடைத்தாயிருக்கும் மலை; திருவபிஷேகமும் அங்ஙனே யிரா நின்றது.

ஆக்ரீடமென்று விளையாடுவதற்குரிய தோப்புகள் மலைகள் பொய்கைகள் முதலானவற்றைச் சொல்லுவர்; இங்கு மலையைக் குறிக்கும். [சூடாமணிமபி நிதம்பம் தமபித:] மலையாகில் நிதம்பப்ரதேசமிருக்குமே, இங்கு அது உண்டோவென்ன; திருமுகப் பட்டையின் ரத்னமே கிரீடபர்வதத்திற்கு நிதம்பப்ரதேசமென்றவாறு. நிதம்பந் தான் எனவும் ப்ருந்தமாகவுமாம். நிதம்பமாக் ஆசாந்தம் என்றபடி. (92)

Srivatsam

विहरतु मयि रङ्गिणश्चूलिकाभ्रमरकतिलकोर्ध्वपुण्ड्रोज्ज्वलम् ।
मुखममृततटाकचन्द्राम्बुजस्मयहरशुचिमुग्धमन्दस्मितम् ॥९३॥

விஹரது மயி ரங்கிணச் சூலிகா ப்ரமரகதிலகோர்த்வபுண்ட்ரோஜ்ஜ்வலம்,
முகமம்ருததடாகசந்த்ராம்புஜ ஸ்மயஹரசுசிமுக்தமந்தஸ்மிதம். (93)

| | | | |
|---|---|---|---|
| சூலிகா | - திருக்குழல்கற்றையென்ன | ஸ்மய | - செருக்கை |
| ப்ரமரக | திருநெற்றியில் தொங்கும் திருக்குழலென்ன | ஹர | - போக்கடிக்கின்றதாய் |
| திலக | - திலகாபரணமென்ன | சுசி | - வெண்ணிறமாய் |
| ஊர்த்வ புண்ட்ர | திருமண் காப்பென்ன (இவற்றால்) | முக்த | - அழகியதான |
| உஜ்ஜ்வலம் | - விளங்கா நிற்பதும் | மந்தஸ்மிதம் | - புன்முறுவலையுடையதுமான |
| அம்ருத தடாக | அம்ருதமயமான தடாக மென்ன | ரங்கிண: முகம் | பெரிய பெருமாளுடைய திருமுக மண்டலமானது |
| சந்த்ர | - சந்திரனென்ன | மயி | - என்னிடத்தில் |
| அம்புஜ | தாமரைப்பூவென்ன இவற்றினுடைய | விஹரது | - விஹாரம் செய்க. |

Srivatsam

* * *—பெரிய பெருமாளுடைய திருமுகமண்டலமானது சூளிகா, ப்ரமரகம், திலகம், ஊர்த்வபுண்ட்ரம் இவற்றால் விளங்குகின்றது; அத் திருமுகமண்டலத்தினின்று முண்டாகின்ற புன்முறுவலானது அமுதத்தடாகம், சந்திரன், தாமரைப்பூ ஆகிய இவற்றின் செருக்கையடக்கிப் பரமபோக்யமாய் விளங்குகின்றது. இப்படிப் பட்ட புன்முறுவல் விளங்கப்பெற்ற திருமுகமண்டலமானது அடியேனுடைய நெஞ்சை விட்டு அகலாதே யிருக்கவேணுமென்கிறார்.

'சூளிகா' என்பதற்கு—கேசபாசபந்த ஸந்நிவேசவிசேஷ மென்று ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில் பொருளுரைக்கப்பட்டுள்ளது. 'சூடிகா' என்பதே 'டடயோரபேத:' என்கிறபடியே 'சூலிகா' என்றிருப்பதாகக்கொண்டு திருமுடியைச் சொல்லுகிறதாகக் கொள்வது நன்கு பொருந்தும். *அலகாச் சூர்ணகுந்தலா:, தே லலாடே ப்ரமரகா:* என்கிற அமரகோசத்தின்படியே திருமுகமண்டலத்தில் அலையும் திருக்குழல்கள் ப்ரமரக மெனப்படும்.

[அம்ருததடாகேத்யாதி] அம்ருத தடாகத்திற் காட்டிலும் சந்த்ரமண்டலத்திற் காட்டிலும் தாமரைமலரிற்காட்டிலும் விஞ்சின ஆஹ்லாதஜநகமான புன்முறுவலென்று கருத்து. இப்பொருளில் 'ஸ்மயஹர' என்பது மந்தஸ்மிதத்திற்கு விசேஷணமாகும். இங்ஙனன்றிக்கே 'ஸ்நாதாநுலிப்த:' என்றவிடத்திற் போல விசேஷணோபய பதகர்மதாரய ஸமாஸமாக உரைப்பது பரமரஸமாகும். திருமுகமண்டலம் எப்படிப் பட்டதென்றால், அம்ருததடாகம், சந்திரன், கமலம் இவற்றினும் வீறு பெற்றதாயும் சுசிமுக்த மந்தஸ்மிதத்தையுடைத்தாயுமிருக்கிறது என்றபடி.

"மயி விஹரது" என்றது—இத்திருமுகமண்டலத்திற்கு என்னுள்ளத்திலிருப்பதே பரமபோக்யமாகக்கடவது என்றவாறு ... (93)

http://acharya.org

मुखपुण्डरीकमुपरि त्रिकण्टकं तिलकाश्च केसरसमास्समौक्तिकाः ।
इह रङ्गभर्तुरभियन्मधुव्रतप्रकरश्रियं भ्रमरकाणि बिभ्रति ॥९४॥

முகபுண்டரீகமுபரி த்ரிகண்டகம் திலகாச்ச கேஸரஸமாஸ் ஸமௌக்திகா:
இஹ ரங்கபர்த்துரபியந்மதுவ்ரதப்ரகரச்ரியம் ப்ரமரகாணி பிப்ரதி. (94)

| | | | |
|---|---|---|---|
| ரங்கபர்த்து: | - பெரிய பெருமாளுடைய | இஹ | - இத்திருமுக மண்டலத்தில் |
| த்ரிகண்டகம் | - மூன்று ரேகைகளோடு கூடின | ப்ரமரகாணி | - தொங்குகின்ற திருக்குழல்கள் |
| முக புண்டரீகம் உபரி | முகாரவிந்தத்தின் பேரில் | அபியத் | (முகபுண்டரீகத்தை) சோக்கி வருகின்ற |
| ஸமௌக்திகா: | - முத்துக்களோடு கூடின | மதுவ்ரத ப்ரகர | - வண்டினங்களுடைய |
| திலகா: | - திலகாபரணங்கள் | ச்ரியம் | - சோபையை |
| கேஸரஸமா: | - தாதுகள் போலும்; | பிப்ரதி | - வஹிக்கின்றன. |

* * *—பெரியபெருமாளுடைய திருமுகம் தாமரைப்பூப்போலிருக்கின்றது; தாமரைப்பூவில் தாதுகள் இருக்கும், வண்டுகள் வந்து மொய்க்கும்; அவை இதி லுண்டோ வென்னில், உண்டு; தாதுகள் நீண்டனவாய் நுனியில் சிறிய அரும்பு போன்ற ஆகாரங் கொண்டனவாயிருக்கும். இங்கு திருவபிஷேகத்திற்குச் சேரத் தொங்கவிடப்பட்ட திலகாபரணங்கள் நீண்டனவாய் நுனியில் முத்துக்களை யுடையன வாயிருக்கையாலே கேஸரஸ்தாநீயங்களாகின்றன. "செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல், பங்கிகள் வந்துன் பவளவாய்மொய்ப்ப" என்றாற்போலே திருப்பவளத் திலே வந்து படிகின்ற திருக்குழல்கள் வண்டுகளாக்கும். ப்ரமரகசப்தம் நபும் ஸக லிங்கத்திலும் சில நிகண்டுகளில் ப்ரஸித்தமென்பர். இதில் முதற்பாதத்தின் பொருளை இன்னமும் தெளிவாக வல்லார்வாய்க் கேட்டுணர்க. (பங்கி—திருக்குழல்) (94)

हृदयं प्रसा(ध)दयति रङ्गपतेः मधुरोर्ध्वपुण्ड्रतिलकं ललितम् ।
अलिकार्धचन्द्रदलसंवलितामम‍ृतस्रुतिं यदभिशङ्क्यते ॥९५॥

ஹ்ருதயம் ப்ரஸாதயதி ரங்கபதே மதுரோர்த்வபுண்ட்ரதிலகம் லலிதம்,
அலிகார்த்தசந்த்ரதலஸம்வலிதாம் அம்ருதஸ்ருதிம் யதபிசங்கயதே. (95)

| | | | |
|---|---|---|---|
| யத் | யாதொரு ஊர்த்தவ புண்ட்ர மானது | தத் | - அந்த, |
| அலிக | - திருநெற்றியாகிற | ரங்கபதே; | - பெரிய பெருமாளுடையதாய் |
| அர்த்த சந்த்ர தல | அர்த்த சந்த்ரகண்டத்தில் நின்றும் | லலிதம் | - ருஜுவாய் |
| ஸம்வலிதாம் | - பெருகின | மதுர | - போக்யமாயிருக்கிற |
| அம்ருதஸ்ருதிம் | - அமுதப்பெருக்கை | ஊர்த்தவ புண்ட்ர திலகம் | ஊர்த்வபுண்ட்ர திலகமானது |
| அபிசங்கயதே | சங்கைக்கு விஷயமாக்கு கின்றதோ, | ஹ்ருதயம் | - நெஞ்சை |
| | | ப்ரஸாதயதி | - ப்ரஸந்நமாக்குகிறது. |

* * *—பெரிய பெருமாளுடைய திருநெற்றியில் விளங்கும் இவ்வூர்த்வபுண்ட்ர திலகத்தை யநுபவிக்கிறார். இத்திலகமானது அமுதப்பெருக்கோ! என்று சங்கிக்க

Srivatsan
http://acharya.org

லாம்படியிருக்கின்றது; திருநெற்றியில் அமுதப்பெருக்கு உண்டாவதற்கு ப்ரஸக்தி எதனில்: [அலிகார்த்தசந்த்ர கலாஸம்வலிதாம்] சந்திர மண்டலத்தில் அமுதம் உண்டாகும்; திருநெற்றியோ அர்த்தசந்த்ராகாரமா யிருக்கின்றது; ஆகவே திருநெற்றியாகிற சந்த்ரமண்டலத்தில் நின்றும் பெருகின அமுதப்பெருக்கோ! என்று சங்கிக்க அவகாச முண்டிறே. இப்படிப்பட்ட ஊர்த்வ புண்ட்ர திலகத்தை அநுபவிக்கின்ற என்னுடைய நெஞ்சு தெளிவுபெற்ற தென்றதாயிற்று.

'प्रसादयति' என்றும் பாடமுண்டு. என்னுடைய ஹ்ருதயத்தை அலங்கரிக்கின்றது என்றபடி. ஊர்த்வ புண்ட்ர திலகமானது பெரியபெருமாளுடைய திருநெற்றிக்கு அலங்காரமன்று. என்னுடைய ஹ்ருதயத்திற்கே அலங்காரமென்கை. ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் கர்ணிகா தவ கரீச கிமேஷா......மாநஸஸ்ய மமவா பரிகர்ம* என்றருளிச்செய்தது அநுஸந்தேயம். (95)

सरसीरुहे समयनाम्य मदादुपरि प्रनृत्यदलिपङ्क्तिनिभे ।
स्फुरतो भ्रुवावुपरि लोचनयोः सविलाससलास्यगति रङ्गभृतः ॥९६॥

ஸரஸீருஹே ஸமயநாம்ய மதாத் உபரி ப்ரந்ருத்யதளிபங்க்திநிபே,
ஸ்புரதோ ப்ருவாவுபரி லோசநயோ: ஸவிலாஸ லாஸ்யகதி ரங்கப்ருத:. (96)

Srivatsam

| | | | |
|---|---|---|---|
| ஸரஸீருஹே | — இரண்டு தாமரைப் பூக்களை | ரங்கப்ருத: ப்ருவௌ | பெரியபெருமாளது திருப்புருவங்கள் |
| மதாத் | — செருக்கினால் | லோசநயோ: உபரி | திருக்கண்களின் மேலே |
| ஸமவநாம்ய | — கீழ்ப்படுத்தி | ஸவிலாஸ லாஸ்ய கதி (யதாததா) | விலாஸத்தோடு கூடின நடையழகை யுடைத்தாயிருக்கும் படி |
| உபரி | — மேலே | ஸ்புரத: | — விளங்காநின்றன. |
| ப்ரந்ருத்யத்- | — நர்த்தனம் பண்ணாநின்ற | | |
| அளிபங்க்திநிபே | வண்டுகளின் வரிசைபோன்றிருப்பவைகளான | | |

* * *—பெரியபெருமாளுடைய திருப்புருவட்டங்களை யநுபவிக்கிறார். செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களின்மேல் கரியவண்டுகள் வரிசையாயிருப்பது போன்ற திருப்புருவங்கள் திகழ்வதைப்பார்த்தால் எங்ஙனே சொல்லலாம்படி யிருக்கின்றதென்றால், தாமரை மலரின் மதுவைக் கழுத்தே கட்டளையாகப் பருகி அதனாலுண்டான மதத்தினால் அத்தாமரைமலர்களைக் கீழ்படுத்தி அவற்றின்மேல் நர்த்தநம் செய்கின்ற வண்டுகளோ இவை! என்னலாம்படி யிருக்கின்றதென்கிறார். திருப்புருவங்கள் சித்திரப்பதுமை யிலிருப்பதுபோல் அசையாமலிருப்பதன்றே பெரியபெருமாள் திருமுகமண்டலத்தில்; விலாஸ சேஷ்டிதங்களோடு கூடியிருக்குமாதலால் கூத்தாடுகின்ற வண்டுகளை உவமை கூறினார். "ஸவிலாஸ லாஸ்யகதி" என்பது க்ரியாவிசேஷணம். திருப்புருவங்களின் நிலைமையைச் சொன்னபடி. (96)

स्मरशरनलिनभ्रमान्नेत्रयोः परिसरनमदिक्षुचापच्छवि ।
युगमुदयति रङ्गभर्तुर्भ्रुवोः गुरुकुलमिव शार्ङ्गनृत्तश्रियः ॥९७॥

ஸ்மரசரநளிநப்ரமாந் நேத்ரயோ: பரிஸரநமதிக்ஷுசாபச்சவி,
யுகமுதயதி ரங்கபர்த்துர் ப்ருவோ: குருகுலமிவ சார்ங்கந்ருத்தச்ரிய: (97)

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| நேத்ரயோ: | — திருக்கண்களிலே | ரங்கபர்த்து: ப்ருவோ: யுகம் | பெரியபெருமானது இணைப் புருவங்கள் |
| ஸ்மரசர கலிக ப்ரமாத் | மன்மதபாணமாகிய பூக்களென்கிற ப்ரமத்தினால் | சார்ங்க- | — ஸ்ரீசார்ங்கவில்லினுடைய |
| பரிஸர- | — அவற்றின் ஸமீபத்திலே | ந்ருத்த ச்ரிய: | — நர்த்தநலக்ஷ்மிக்கு |
| கமத்- | — வளைகின்ற | குருகுலம் இவ | — ஆசார்யகுலம்போன்று |
| இக்ஷுசாப- | — கரும்புவில்லினுடைய | உதயதி | — விளங்குகின்றன. |
| ச்சவி | காந்திபோன்ற காந்தியை யுடைத்தான | | |

* * *—மீண்டும் திருப்புருவங்களையே அநுபவிக்கிறார். திருவாய்மொழியில் *ஏழையராவியில் இருப்புருவங்களை அநுபவிக்குமிடத்து "மன்னியசீர் மதனன் கருப்புச் சிலைகொல்!, மதனன் தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான் புருவமவையே" என்ற அருளிச்செயலை அடியொற்றி அருளிச்செய்வதாம் இந்த ச்லோகம். கரும்புத்தடியை வில்லாகக்கொண்டவன் மன்மதன்; மன்மதனுடைய பஞ்சபாணங்களில் தாமரைமலரும் ஒன்று; திருக்கண்கள் தாமரைமலர்போன்றிருத்தலால் 'இவை மன்மதனுடைய அம்புகள்' என்றெண்ணி அவனது கரும்புவில்லானது ஸமீபத்தில் வளைந்துகிடக்கிறதோ! என்னலாம்படியிருக்கிறதாம்.

நாச்சியார்திருமொழியில் "தன்கைச்சார்ங்க மதுவேபோல் புருவவட்டமழகிய" என்றருளிச்செய்ததைத் திருவுள்ளம்பற்றி "குருகுலமிவ சார்ங்க ந்ருத்தச்ரிய:" என்கிறார் உத்தரார்த்தத்தில். தனது திருக்கையிலுள்ள சாரங்கமென்னும் வில்லானது விலக்ஷணமான நர்த்தன முடையதென்பது ப்ரஸித்தம்; அந்த நர்த்தனம் எங்கு அப்யஸிக்கப்பட்டது தெரியுமோ? இத்திருப்புருவவட்டங்களிடத்தில் தான் அப்யஸிக்கப்பட்டது; இவையே அதற்கு ஆசார்யகுலம் என்கிறார். (97)

कृपया परया करिष्यमाणे सकलाङ्गं किल सर्वतोऽक्षि नेत्रे ।
प्रथमं श्रवसी समास्तृणाते इति दैर्घ्येण विदन्ति रङ्गनेतुः ॥९८॥

க்ருபயா பரயா கரிஷ்யமாணே ஸகலாங்கம் கில ஸர்வதோக்ஷி நேத்ரே,
ப்ரதமம் ச்ரவஸீ ஸமாஸ்த்ருணாதே இதி தைர்க்யேண விதந்தி ரங்கநேது:. (98)

| | | | |
|---|---|---|---|
| பரயா க்ருபயா | — சிறந்த க்ருபையினாலே | ப்ரதமம் | — முந்துறமுன்னம் |
| ஸகல அங்கம் | — எல்லா அவயவங்களையும் | ச்ரவஸீ | — திருச்செவிகளை |
| ஸர்வத: | — ஸகலாம்சத்தாலும் | ஸமாஸ்த்ருணாதே | — அளாவுகின்றன |
| அக்ஷி | — கண்ணாக | இதி | — என்று |
| கரிஷ்யமாணே | — பண்ணப்போகிறவைகளான | தைர்க்யேண | — நீட்சியினால் |
| ரங்கநேது: நேத்ரே | பெரியபெருமானது திருக்கண்கள் | விதந்தி | — அறிகின்றனர். |

* * * திருப்புருவங்களை யநுபவித்தபின் திருக்கண்களை யநுபவிக்கப்புகுந்து அவற்றின் சீர்மையை ஆச்சரியமாக வருணிக்கிறார். அமலனாதிபிரானில் "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்" என்றவிடத்து, அழகிய மணவாளப்பெருமாள் நாயனாருடைய வியாக்கியானத்தில் இந்த ச்லோகத்தின்

Srivatsam
http://acharya.org

கருத்து விவரிக்கப்பட்டுள்ளது; அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமாயிருக்கையாலே அவற்றை இங்கு உதாஹரிப்போம்:—

"பெரியபெருமாளுடைய திருக்கண்களானவை திருச்செவியளவுஞ் செல்ல நீண்டிருக்கிறபடிக்கு ஒரு நினைவுண்டென்கிறார் பட்டர். அதாவது-பெரியபெருமாளுடைய திருக்கண்களானவை, பூவுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப்போலே நித்யஸூரிகளுக்கு முகங்கொடுத்துக் கொண்டிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனுக்கும் கண்களிரண்டாய், ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் பண்ணி குஹாதிகள் விதுராதிகள் தொடக்கமானார் சிலர்க்கு அல்பகாலம் முகங்கொடுத்து விஷயீகரித்து வந்தாப்போலே வெறுங்கையோடே போனவர்களுக்கும் கண்ணிரண்டாய், ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது எழுந்திரேனென்று கோயிலிலே அர்ச்சாரூபியாய் அவ்வவர் நிகர்ஷங்களைப்பாராதே முகங்கொடுத்துக்கொண்டு கிடக்கிற பெரியபெருமாளுக்கும் கண் இரண்டாயிருக்கவோ? இவருடைய க்ருபையைப்பார்த்தால் உடம்பெல்லாம் கண்ணாக வேண்டாவோவென்று பார்த்து,—எல்லா மண்டலங்களும் தங்களுக்கே ஆகவேணுமென்றிருக்கும் ராஜாக்கள் முற்படத்தங்களுக்கு ப்ரத்யாஸந்நரான வன்னியரை அழியச்செய்யுமாபோலே பெரியபெருமாளுடைய அவயவாந்தரங்களுடைய நாமே யாகவேணுமென்று, பார்ச்வஸ்தங்களாயிருக்கின்ற திருச்செவிகளாகையாலே அவற்றை வென்று அவ்வருகே போவதாக முற்பட்டு அவற்றுடனே அலையெறிகிறாப்போலே யாய்த்துத் திருக்கண்கள் செவிகளளவும் நீண்டிருக்கிறபடி."

உள்ளுள்ள பரமக்ருபையை வெளியிடுவன திருக்கண்களேயாம்; பரமபதநாதனுடைய க்ருபை அதிகமா? விபவாவதாரங்களான ராமக்ருஷ்ணாதிகளின் க்ருபை அதிகமா? அர்ச்சாரூபியான பெரியபெருமாளுடைய க்ருபை அதிகமா? என்று ஆராயப் புகுந்தால், நிஷ்பந்நாதிகாரிகளான நித்யமுக்தர்களுக்கே காட்சி தருகின்ற பரமபதநாதனுடைய க்ருபை அவ்வளவு சிறந்ததன்று; ஸ்வல்பகாலம் இந்நிலவுலகத்தில் அவதரித்திருந்து மஹாத்மாக்களை விஷயீகரித்துத் தன்னடிச்சோதிக் கெழுந்தருளின ராமக்ருஷ்ணாதி விபவமூர்த்திகளின் க்ருபை பரமபதநாதனுடைய க்ருபையிற் காட்டிலும் சிறந்தது; 'இக்கொடிய ஸம்ஸாரம் வேரற்றாலன்றி உபயகாவேரீ மத்யத்தைவிட்டு எழுந்திருப்பதில்லை' என்று ஸங்கல்பித்துக்கொண்டு 'ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சக பராதீநாகிலாத்மஸ்திதி:' என்கிறபடியே மிகவுமெளியராய் ஸ்தாவர ப்ரதிஷ்டையாய்க் கிடக்கும் பெரிய பெருமாளுடைய க்ருபை மிகவும் சிறந்தது; ஆக, அதம மத்யம உத்தமர்களான இம்மூர்த்திகளுக்கு க்ருபையில் வாசியிருப்பதுபோல் க்ருபாஸூசகங்களான திருக்கண்களிலும் வாசி அவசியமிருக்கவேண்டும். பரமபதநாதனுக்கும் இரண்டு கண்கள், ராமக்ருஷ்ணாதிகளுக்கும் இரண்டு கண்கள், பெரிய பெருமாளுக்கும் இரண்டு கண்கள் என்று இங்ஙனே வாசியற்றுத் துல்யமாயிருப்பது க்ருபையின் பெருமைக்குப் பொருந்தாது; பெரிய பெருமாளுக்கு இரண்டு திருக்கண்களிருந்தால் ராமக்ருஷ்ணாதிகளுக்கு ஒரு கண்ணே இருந்திருக்கவேண்டும்; அதிலும் பாதிதான் பரமபதநாதனுக்கிருக்கவேண்டும். மூவர்க்கும் இரண்டே கண்களாயிருப்பது தகாது தகாது; பெரியபெருமாளுடைய ஒப்பற்ற பரமக்ருபைக்குத் தகுதியாக எப்படியிருக்கவேணுமென்றால் திருமேனிமுழுதும் திருக்கண்ணாகவே யிருக்கவேண்டும்—என்றிப்படி திருக்கண்களுக்குக் கருத்து உண்டாகி 'எல்லா அவயவ ஸ்தானங்களையும் நாம் ஆக்ர

http://acharya.org

மித்து விடவேண்டும்' என்று அறுதியிட்டு முந்துறமுன்னம் அருகிலுள்ள திருச்செவிகளின் ஸ்தானத்தை ஆக்ரமிக்க முயல்வதாகத் தோன்றுகின்றது அவற்றின் நீட்சியைப் பார்க்குமளவில்—என்றதாயிற்று.

நேத்ரே—ப்ரதமா த்விவசநம்; 'க்ருஷ்ணாமலமணே' என்பது இதற்கு விசேஷணம். 'அஹ்நி' என்பது ஸகலாங்கபதத்துக்கு விதேயவிசேஷணம். (98)

श्रवोनासारोधात्तदवधिकडोलायिततटे विशालस्फीतायद्रुचिरशिशिराताम्रधवले ।
मिथो षट्स्पर्धस्फुरितशफरद्वन्द्वलिते क्रियास्तां श्रीरङ्गप्रणयिनयनाब्जे मयि दयाम् ॥९९॥

ச்ரவோநாஸாரோதாத் ததவதிகடோலாயிததடே
விசாலஸ்பீதாயத்ருசிரசிசிராதாம்ரதவளே,
மிதோபத்தஸ்பர்த்தஸ்புரிதசபரத்வந்த்வலலிதே
க்ரியாஸ்தாம் ஸ்ரீரங்கப்ரணயிநயநாப்ஜே மயி தயாம். (99)

| | | | |
|---|---|---|---|
| ச்ரவோநாஸா ரோதாத் | திருச்செவி திருமூக்கு இவற்றின் தகைவினால் | மித: பத்த ஸ்பர்த்த- | பரஸ்பரம் சண்டையிடுகிற |
| தத்அவதிக டோலாயிததடே | அவ்விரண்டு அவயவங்களை வரைச்சுழலமிடாநின்றவைகளாய் | ஸ்புரித- | துடிக்கின்ற |
| விசால | – விசாலங்களாய் | சபர த்வந்த்வ- | இரண்டு கெண்டை மீன்கள் போலே |
| ஸ்பீத | – ப்ருஹத்துக்களாய் | லலிதே | – மனோஹரங்களான |
| ஆயத் | – நீண்டவைகளாய் | ஸ்ரீரங்க ப்ரணயி நயந அப்ஜே | பெரியபெருமானது திருக்கண் தாமரைகள் |
| ருசிர | – அழகியவைகளாய் | மயி | – அடியேன்பால் |
| சிசிர | – குளிர்ந்தவைகளாய் | தயாம் | – திருவருளை |
| ஆதாம்ர தவளே | சிறிது சிவந்து வெளுத்தவைகளாய் | க்ரியாஸ்தாம் | – செய்யக்கடவன. |

* * *—பெரியபெருமாளுடைய புடைபரந்து மிளிர்ந்து நீண்ட திருக்கண்கள் பாவியேனையும் கடாக்ஷித்தருள வேணுமென்கிறார். இத்திருக்கண்கள் எங்ஙனே யிருக்கின்றனவென்றால், [ச்ரவோநாஸாரோதாத் ததவதிகடோலாயிததடே.] இத்திருக்கண்களானவை ஒரு எல்லையிலே நில்லாமல் எங்கும் பரம்பவேணுமென்று பாரிப்புடையனவாயினும் ஒருபக்கத்தில் திருமூக்கும் மற்றொரு பக்கத்தில் திருச்செவிகளும் தடையாக நிற்பதனால் அவற்றைத் தாண்டி அவ்வருகே செல்லமாட்டாமல் அவற்றினிடையே சுழலவிட்டு உலாவுகின்றனவாம்; அவ்விரண்டு அவயவங்களையும் மீறி அப்பால் செல்லவேணுமென்னும் கருத்து கண்களுக்கு உண்டென்பது "டோலாயிததடே" என்பதில் தோன்றும். ஊஞ்சலானது போக்கிலே ஒருப்பட்டிருக்கிறபடி. இந்தப்பக்கமாகப் போவோமென்று ஒரு பக்கத்தில் வந்தால் திருமூக்கு தடைசெய்கின்றது; அதனால் திரும்பி அந்தப்பக்கமாய்ப் போகப்பார்த்தால் திருச்செவி தடைசெய்கின்றது; அதனால் மறுபடியும் இந்தப்பக்கமாய்த் திரும்புகின்றது. ஆக இப்படியே போக்குவரத்து ஓயாதிருக்கிறதாயிற்று.

[விசாலஸ்ரீதேத்யாதி.] "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாயகண்கள்" என்ற திருப்பாணாழ்வார் பாசுரத்தின் அநுஸந்தானம் உள்ளுச்செல்லுகிறதென்க. திருக்கண்களின் இயற்கையாய்ப் பெரும்பான்மையான நிறம் கைல்யமாதலால் அது இங்குச்சொல்லப்படவில்லை. சிறிது சிவந்தும் சிறிது வெளுத்தும் மிருக்கையாகிற நிறச்சிறப்பு இங்குச்சொல்லப் பட்டது.

[மிதோபத்தஸ்பர்த்தேத்யாதி] திருமூக்கின் இரண்டருகிலும் திருக்கண்கள் செருக்கிமிளிர்வதை நோக்குங்கால் இரண்டு கெண்டைமீன்கள் தம்மிலே பொருமை கொண்டு சண்டையிடுவன போன்றுள்ளன வென்கிறார்.

இப்படிப்பட்ட திருக்கண்தாமரைகள் அடியேன்மீது இரங்கியருளவேணு மென்றாராயிற்று. (99)

करुणामृतकूलमुद्वहैषा प्रणमत्स्वागतिकी प्रसन्नशीता ।
मयि रङ्गधनोपकर्णिकाऽक्ष्णोः सरितोर्वीक्षणवीचिसन्ततिः स्तात् ॥१००॥ 100

கருணாம்ருதகூலமுத்வஹைஷா ப்ரணமத்ஸ்வாகதிகீ ப்ரஸந்நசீதா,
மயி ரங்கதநோபகர்ணிகாக்ஷ்ணோ: ஸரிதோர் வீக்ஷணவீசிஸந்ததிஸ் ஸ்தாத். (100)

Srivatsam

| | |
|---|---|
| ஹே ரங்கதந! | திருவரங்கமா நகர்க்குச் செல்வம் போன்றுள்ள பெரியபெருமாளே! |
| கருணா அம்ருத கூல முத்வஹா | கருணையாகிய அமுதம் நிரம்பியதாய் |
| ப்ரணமத் ஸ்வாகதிகீ | வந்து பணிகின்றவர்களை ஆதரவோடு ஏற்றுக் கொள்ளுமதாய் |
| ப்ரஸந்ந சீதா | தெளிவும் குளிர்ச்சியும் பொருந்தியதாய் |
| உபகர்ணிகா | திருச்செவியளவும் வியாபிக்குமதாய் |
| ஏஷா | ஆகவிப்படி விலக்ஷணமாயிருக்கின்ற |
| அக்ஷ்ணோ: ஸரிதோ: வீக்ஷண வீசி ஸந்ததி: | திருக்கண்களாகிற நதிகளின் கடாக்ஷங்களாகிற அலை வரிசையானது |
| மயி ஸ்தாத் | — அடியேன்மீது ஆகவேணும். |

* * *—பெரியபெருமாளுடைய இரண்டு திருக்கண்களும் இரண்டு பெருக்காறுகளாம்; அவற்றில் நின்றும் உண்டாகின்ற கடாக்ஷபாதங்கள் அலைவரிசைகளாம்; அவை அடியேன் மீது பாயவேணும் என்கிறார். அந்த அலைவரிசை எப்படிப்பட்டதென்னில் திருவருளாகிற அமுதப்புனலை நிரம்பக்கொண்டிருக்கின்றது; அடிபணிய வருமவர்களை வாருங்கள்! வாருங்கள்!!, என்று ஆதரித்து அழைக்கின்றது; கலக்கமொன்று மின்றியே தெளிந்து குளிர்ந்திருக்கின்றது. [உபகர்ணிகா] காசியில் கங்காநதியில் பல பல தீர்த்த கட்டங்களுண்டு; 'மணிகர்ணிகாகாட், என்று ஒன்றுக்குப் பெயர்; அப்படியே இதற்கு 'உபகர்ணிகா' என்று பெயரிடலாம் போலுமென்கிறார். கர்ணமூல ஸமீபத்திலே உலாவுவதென்றவாறு.

ஸ்வாகதிகீ ='நல்வரவா?' என்று கேட்பது என்கை. (100)

विलसति नासा कल्पकवल्ली मुग्धेव रङ्गनिलयस्य ।
स्मितमपि तत्प्रसूनकुसुमं चुबुककपोलं च पल्लवोल्लसितम् ॥१०१॥

விலஸதி நாஸா கல்பகவல்லீ, முக்தேவ ரங்கநிலயஸ்ய,
ஸ்மிதமபி தந்நவகுஸுமம் சுபுககபோலஞ்ச பல்லவோல்லஸிதம். (101)

| | |
|---|---|
| ரங்கநிலயஸ்ய — பெரிய பெருமாளுடைய | தந் நவகுஸுமம் இவ — அக்கற்பகக் கொடியின் புதிய மலர் போலவும் |
| நாஸா — திருமூக்கானது | சுபுக கபோலம் — மோவாயும் கபோலங்களும் |
| முக்தா — அழகிய | பல்லவ உல்லஸிதம் இவ ச — தளிர்வடிப்புப் போலவும் |
| கல்பகவல்லீ இவ — கற்பகக்கொடிபோன்று | விலஸதி — விளங்குகின்றது. |
| விலஸதி — விளங்குகின்றது. | |
| ஸ்மிதம் அபி — புன்முறுவலோவென்றால் | |

* * *—திருமூக்கு, மந்தஸ்மிதம், மோவாய், கபோலம் ஆகிய இந்நான்கையும் சேர்த்து அநுபவிக்கிறாரிதில் "சட்டிய வெண்ணெயுண்டான் திருமூக்கு—மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ!" என்று ஆழ்வாரருளிச்செய்த அடியொற்றிப் பெரியபெருமாளுடைய திருமூக்கைக் கற்பகக்கொடியாக வருணித்தார் பூர்வார்த்தத்தில். [ஸ்மிதமபி தந் நவகுஸுமம்] புன்முறுவலை நோக்குங்கால் அக்கற்பகக்கொடியில் அப்போதலர்ந்த செவ்விப்பூவோ இது! என்னலாம்படியிருக்கும். [சுபுககபோலஞ்ச பல்லவோல்லஸிதம்.] மோவாயையும் கபோலங்களையும் நோக்குங்கால் அக்கற்பகக்கொடி தளிர்வடித்தனவோ! என்னலாம்படியிருக்கும்; கீழ் (68) "க்ஷிதிகமல நிவாஸா" என்னும் ச்லோகத்தில் ஸ்ரீரங்கநாதனை ஒரு கல்பவ்ருக்ஷமாக நிரூபித்தருளினார். அதில் கொடியும் தளிரும் மலரும் நிரம்பியிருக்கும்படியை இந்த ச்லோகத்தினால் நிரூபித்தாராயிற்று. ப்ராண்யங்கமாகையாலே 'சுபுககபோலம்' என்று ஏகவத்பாவம். (101)

नयनशफरविद्धौ कर्णपाशावरुद्धौ रुष इव लुठतोऽर्चिर्मञ्जरीरुद्गिरन्तौ ।
परिमिलदलकालीशैवलांसवेलाम् अनु मणिमकरोद्धौ रङ्गधुर्यामृताब्धेः ॥१०२॥

நயநசபரவித்தௌ கர்ணபாசாவருத்தௌ
ருஷ இவ லுடதோர்ச்சிர்மஞ்ஜரீருத்கிரந்தௌ,
பரிமிலதலகாலீசைவலாம்ஸவேலாம்
அநுமணிமகரோத்தௌ ரங்கதுர்யாம்ருதாப்தே:. (102)

| | |
|---|---|
| ரங்கதுர்ய அம்ருத அப்தே: — பெரிய பெருமாளாகிற அமுதக் கடலினுடைய | ருஷ: — (கீழ்ச்சொன்ன இரண்டு காரியங்களினாலுமுண்டான) கோபத்தினால் |
| பரிமலத் அலக ஆலீ சைவலாம் — சுற்றிலும் தொங்குகின்ற திருக்குழல்களாகிற வேலம் பாசியை யுடைத்தான | அர்ச்சிஸ் மஞ்ஜரீ: — பூங்கொத்துக்கள்போலிருக்கிற தேஜஸ்ஸுகளை |
| அம்ஸ வேலாம் அநு — திருத்தோள்களாகிற கரையினருகில் | உத்கிரந்தௌ இவ (ஸந்தௌ) — கக்குகின்றனபோலிருப்பவைகளான |
| நயந சபர வித்தௌ — திருக்கண்களாகிற மீன்களாலே அடிக்கப்பட்டனவாய் | மணி மகர உத்தௌ — சிறந்த ரத்ன மகர குண்டலங்கள் |
| கர்ண பாச அவருத்தௌ — திருச்செவிகளாகிற வலைக் கயிற்றினால் பிடிக்கப்பட்டனவாய் | லுடத: — தளதளவென்று விளங்குகின்றன. |

Srivatsam
http://acharya.org

* * *—தோளளவும் தளதளவென்று திருச்செவிகளில் தொங்குகின்ற திருமகரக் குழைகளை அநுபவிக்கிறார் இதில். ரூபகாலங்காரமே இதில் நிரம்பியிருக்கும். திருக் காதணிகள் சுறாமீன் வடிவாக அமைந்திருக்கும்படியே. அவ்வணிகளை இரண்டு சுறாமீன் களாகவே திருவுள்ளம் பற்றுகிறார். மீன்கள் கடற்கரையிலே புரளும். இவையும் கடற்கரையிலே புரள்கின்றனவென்கிறார். இங்குக்கடலாவது ஏது? கரையாவது ஏது? என்னில்; பெரிய பெருமாளே ஒரு அமுதக்கடல்; திருத்தோள்கள் அக்கடலின் கரை. கரையில் கறுத்த பாசிகள் அடர்ந்திருப்பது போல் இங்கும் "களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று" என்றாற்போலே திருக்குழல்கள் படிந்திருப்பதனால் திருத்தோள்களைக் கரையென்றது மிகப்பொருந்தும். உலகத்தில் எவர்க்கும் ஒரு ரோஷம் உண்டானால் கோபாக்கினியை வெளிப்படுத்துவது இயல்பு. இக்கர்ண பூஷணங்களாகிற சுறாமீன்களும் ரோஷத்தினால் தேஜோமஞ்ஜரி களை வெளிப்படுத்தினபோலிருக்கின்றதாம்; தளதளவென்று பிரகாசிப்பது. இவற் றுக்கு ரோஷமுண்டாகவேண்டிய காரணமேதென்னில்; இவற்றுக்கு இரண்டு வருத் தங்கள் நேர்ந்தனவென்கிறார் [நயநசபரவித்ரெள கர்ணபாசாவருத்தெள] என்று அதா வது—திருக்கண்களாகிற இரண்டு மீன்களாலே இவை அடிபட்டனவாம்; அன்றியும் திருச்செவிகளாகிற பாசத்தினால் பிடிபட்டனவாம். இங்ஙனேயானால் ஏன் கோபமுண் டாகாது? ஒருமீனை மற்றொரு மீன் அடித்து வெல்லுவதுண்டாகையால் கர்ணபூஷணங் களாகிற மீனைத் திருக்கண்களாகிற மீன்கள் புடைத்து விட்டன; ஓடிப்போக வொண் ணதபடி திருச்செவிகளாகிற வலைக்கயிறுகள் ஆக்ரமித்துக்கொண்டன; இவ்விரண் டாலும் கோபம் அதிகரித்ததனால் "அர்ச்சிர்மஞ்ஜரீ ருத்கிரந்தெள" என்னும்படி யாயிற்று. இதன் கருத்தாவது—மகர குண்டலங்களானவை கர்ணாந்த விச்ராந்தங் களான திருக்கண்களில் அழகுக்கும் ப்ரகாசகங்களாய்த் திருச்செவிகளிலே பொருந்தி ஜ்வலிக்கின்றன வெனகை.

* மணிமகரோத்கெள = உத்கசப்தம் ச்ரேஷ்டவாசகம். (102)

**अधरमधुराम्भोजं तत्कर्णपाशमृणालिकावलयमभि मामास्तां रङ्गेन्दुवक्त्रसरश्चिरम् ।**
**नयनशफरं नासाशैवालवल्लरि कर्णिकामकरमलकश्रेणीपर्यन्तनीलवनावलि ॥१०३॥**

அதரமதுராம்போஜம் தத்கர்ணபாசம்ருணாளிகா—
வலயமபி மாமாஸ்தாம் ரங்கேந்துவக்த்ரஸரச் சிரம்,
நயநசபரம் நாஸாசைவாலவல்லரி கர்ணிகா—
மகரம் அலகச்ரேணீபர்யந்தநீலவநாவளி. (103)

| | | | |
|---|---|---|---|
| அதர | — திருப்பவளமாகிற | சபரம் | — மீன்களையுடைத்தாயும் |
| மதுர அம்போஜம் | போக்யமான தாமரைப்பூவை யுடைத்தாயும் | நாஸா | — திருமூக்காகிற |
| கர்ணபாச | — திருச்செவிமடல்களாகிற | சைவால வல்லரி | — பாசிக்கொடியையுடைத்தாயும் |
| ம்ருணாளிகா வலயம் | தாமரைக்கொடி வளையல்களை யுடைத்தாயும் | கர்ணிகாமகரம் | கர்ண பூஷணங்களாகிற மகரங்களை யுடைத்தாயும் |
| நயந | — திருக்கண்களாகிற | அலகச்ரேணீ | — திருக்குழல்கற்றையாகிற |



Srivatsam
http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| பர்யந்த லீலவந ஆவலி | அருகிலிருக்கக் கூடிய கறுத்த சோலைகளையுடைத்தாயு மிருக்கிற | சிரம் | — நெடுநாளளவும் |
| தத் | — பரமவிலக்ஷணமான | மாம் அபி | — என்னை நோக்கி |
| ரங்கேந்த்ர வக்த்ர ஸரஃ | பெரிய பெருமாளுடைய திருமுக மண்டலமாகிற தடாகமானது | ஆஸ்தாம் | — இருக்கவேணும். |

* * —பெரிய பெருமாளுடைய திருமுகமண்டலத்தை ஒரு தடாகமாக அநுபவிக்கிறார். தடாகத்திலுள்ள வஸ்துக்கள் இங்குண்டோவென்ன, உண்டென்று நிரூபிக்கிறார் பலவிசேஷணங்களினால். பெரிய பெருமாளுடைய திருப்பவளமே தேன் நிறைந்த தாமரைப்பூ; பாசம்போன்ற திருச்செவிகள் தாமரைக் கொடிவளையங்கள்; திருக்கண்கள் மீன்கள்; திருமூக்கு வேலம்பாசிக்கொடி; கர்ணபூஷணங்கள் மகரங்கள்; தடாகத்தின் அருகே சோலைகள் இருக்குமே; திருக்குழல் கற்றையே அது; ஆக இவ்வகைகளாலே ஒரு தடாகமென்ன வமைந்த திருமுக மண்டலமானது எப்போதும் அடியேன் பக்கலிலேயே பக்ஷபாதங் கொண்டிருக்கவேணு மென்றாராயிற்று. (103)

रमयतु स मां कण्ठः श्रीरङ्गनेतुरुदञ्चितक्रमुकतरुणग्रीवाकम्बुप्रलम्बमलिम्लुचः ।
प्रणयविलगल्लक्ष्मीविश्वम्भराकरकन्दलीकनकवलयक्रीडासंक्रान्तरेख इवोल्लसन् ॥१०४॥

ரமயது ஸ மாம் கண்ட: ஸ்ரீரங்கநேதுருதஞ்சித-
க்ரமுகதருணக்ரீவாகம்புப்ரலம்பமலிம்லுச:,
ப்ரணயவிலகல்லக்ஷ்மீவிச்வம்பராகரகந்தலீ-
கநகவலயக்ரீடாஸங்க்ராந்தரேக இவோல்லஸந். (104)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கநேது: | — பெரிய பெருமாளுடைய,— | கர கந்தலீ- | வாழைத்தண்டு போன்ற திருக்கைகளிலுள்ள |
| உதஞ்சித— க்ரமுக தருண க்ரீவா கம்பு ப்ரலம்ப மலிம்லுச: | செழித்து வளர்ந்த பாக்கு மரத்தினுடைய இளங்கழுத்தென்ன, சங்கென்ன இவற்றின் அழகைக் கொள்ளை கொண்டதாயும், | கநக வலய- | — பொன்வளைகளில் நின்றும் |
| ப்ரணய— | — அன்போடு | க்ரீடா ஸங்க்ராந்த ரேக: இவ | விளையாட்டாக வந்து சேர்ந்த ரேகைகளையுடையது போல் |
| விலகத்- | ஆலிங்கனஞ்செய்துகொள்ளுகிற | உல்லஸந் | — விளங்குகின்றதாயுமிருக்கிற |
| லக்ஷ்மீ- | — திருமகளென்ன | ஸ: கண்ட: | விலக்ஷணமான திருக்கழுத்தானது |
| விச்வம்பரா- | நிலமகளென்ன இவர்களுடைய | மாம் | — அடியேனை |
| | | ரமயது | — மகிழ்விக்கவேணும். |

* * —இவிரண்டு ச்லோகங்களில் அமுதக்கடலின் அநுபவமும் பொய்கையின் அநுபவமும் நிகழ்ந்தது; கடலில் தோன்றிய சங்கின் அநுபவமும் பொய்கைக்கரைகளில் விளங்கும் பாக்கு மரத்தின் அநுபவமும் நிகழ்கின்றது இந்த ச்லோகத்தில். கழுத்தில் மூன்று ரேகைகளிருப்பது உத்தமலக்ஷணமாக வருணிக்கப்படும். அதற்குப் பாக்குமரத்தின் [illegible] கழுத்தையும் சங்கத்தையும் உவமை கூறுவது கவிஸம்ப்ரதாயம்; [illegible] உபமானங்களாம். [illegible] இங்குத் திருவுள்ளம் பற்றுகிறார் பூர்வார்த்தத்தில்.

[ப்ரணயவிலஸத்இத்யாதி] பெரிய பெருமாளுடைய திருக்கழுத்தில் இயற்கையாகவே ரேகைகள் இருந்தாலும் புத்திசமத்காரத்தாலே ஹேதூத்ப்ரேக்ஷை பண்ணுகிறார். திருமடந்தை மண்மடந்தைகளோடு கூடி நிரந்தராச்லேஷரஸம் அநுபவிக்கும் போது அப்பிராட்டிமாருடைய திருக்கைகளி லணியப்பட்டுள்ள பொன் வளைகள் திருக்கழுத்திலே உறுத்தி அதன அடையாளமாகத் தான் இந்த ரேகைகள் உண்டாயினவோ! என்னலாம்படி யிருக்கின்றதென்கிறார். (104)

अधिष्ठानस्तम्भौ भुवनपृथुयन्त्रस्य कमलाकरेणोरालाने अरिकरिघटोन्माथमुसलौ ।
फणीन्द्रस्फीतस्रग्व्यतिकरितसन्दिग्धविभवौ भुजौ मे भूयास्तामभयमपि रङ्गप्रणयिनः ॥१०५॥

அதிஷ்டாநஸ்தம்பௌ புவநப்ருதுயந்த்ரஸ்ய, கமலா
கரேணோராலாநே அரிகரிகடோந்மாதமுஸலௌ,
பணீந்த்ரஸ்பீதஸ்ரக்வ்யதிகரிதஸந்திக்தவிபவௌ,
புஜௌ மே பூயாஸ்தாமபயமபி ரங்கப்ரணயிந:. (105)

| | | | |
|---|---|---|---|
| புவந ப்ருது யந்த்ரஸ்ய | உலகமாகிற ஒரு பெரிய யந்திரத்திற்கு | ஸ்பீத ஸ்ரக்- | – பருத்த புஷ்பமாலையென்ன (இவற்றினுடைய) |
| அதிஷ்டாந ஸ்தம்பௌ | ஆதாரத் தூண்களாயிருப்பவையும் | வ்யதிகரித- | – சேர்க்கையை யுடையவைகளும் (இவற்றுள் புஜங்கள் எவை என்று) |
| கமலா கரேணோ: | பிராட்டியாகிற யானைப் பேடைக்கு | ஸந்திக்த- | – ஸந்தேஹிக்கத்தக்க |
| ஆலாநே | – கட்டுத்தறியாயுள்ளவையும் | விபவௌ | பெருமையை உடையவைகளுமான |
| அரி கரி கடா உந்மாத முஸலௌ | சத்துருக்களாகிற யானைக்கூட்டங்களை முடிப்பதில் உலக்கையா யுள்ளவையும் | ரங்கப்ரணயிந: புஜௌ | பெரிய பெருமானது புஜங்களானவை |
| | | மே | – அடியேனுக்கு |
| பணீந்த்ர- | ஆதிசேஷனுடைய திருமேனியென்ன | அபயம் அபி பூயாஸ்தாம் | அபயமளிக்கக்கடவன. |

* * *—பெரிய பெருமாளுடைய மஹா புஜங்களைப் பற்றி நாம் அச்சங்கெட்டு வாழக்கடவோ மென்கிறார். இந்த புஜங்கள் எங்ஙனே சொல்லலாம்படியிருக்கின்றனவென்றால், [புவநப்ருதுயந்த்ரஸ்ய அதிஷ்டாநஸ்தம்பௌ] சேதநா சேதநாத்மகமான ஸகல லோகங்களாகிற ஒரு பெரிய யந்த்ரத்தைத் தாங்குவதற்கு அமைந்த தூண்களோ இவை என்னலாம். *பாஹுச் சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மந:* என்னக் கடவதிறே. [கமலாகரேணோ: ஆலாநே.] பிராட்டியாகிற யானைப் பேடையைப் புறம்போகவொண்ணுமே கட்டிவைப்பதற்குரிய கட்டுத்தறி யென்னலாம். திருக்கையாகிற தாமரையை விட்டுப் பிரியாளிறே தாமரையாள். "ஆலாநாவரிகரி" என்றே பாடம் வழங்கிவருகின்றது; அப்பாடத்தின்படி 'ஆலாநௌ' என்று பதவிபாகமாகும், அமர கோசம் முதலிய நிகண்டுகளில் ஆலாநசப்தம் நபும்ஸக லிங்கமாகவே படிக்கப்பட்டிருப்பதால் 'ஆலாநே' என்கிற முன்னோர் பாடமே இங்குக் கொள்ளப்பட்டது ஏகாராந்தத்விவசந மாகையாலே ப்ரக்ருதிபாவ மென்றுணர்க.

[அரி கரிகடோந்மாத முஸலௌ] இரண்டு திருக்கைகளும் இரண்டு உலக்கைகளென்னலாம். பிராட்டியின் நித்யாநுபவத்திற்கு இடையூறாக வரும் ராவணாதி ராக்ஷ

Srivatsam
http://acharya.org

ஸர்களாகிற சத்ருஸமூஹங்களைத் தொலைக்கவல்ல உலக்கைகளென்கிறார். [பணீந்த்ரே சயாநி] திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொண்டிருப்பதனாலும், பெரிய திருத்துழாயலங்கல் அணிந்துகொண்டிருப்பதனாலும், அத்திருவனந்தாழ்வானுடைய திருமேனி போலவும் திருமாலை போலவும் வடிவுபூண்டு விளங்குகின்ற திருக்கைகளைக் கண்டால் 'இன்னது திருக்கை, இன்னது திருமாலை இன்னது ஆதிசேஷனுடல்' என்று நிச்சயித்தறிய வொண்ணாமே ஸம்சயிக்க வேண்டியிருக்குமிறே. இரண்டுருண்டு நீண்டு மெத்தென்றிருக்கும் தன்மையை வர்ணித்தபடி. "பாஹூ ம் புஜகபோகாபம்" என்ற ஸ்ரீராமாயண ச்லோகமுங் காண்க.

இப்படிப்பட்ட புஜங்களை நோக்கியிறே 'அஞ்சேலென்று கை கவியாய்' என்னப்ராப்தம். (105)

प्रतिजलधितो वेलाशय्यां विभीषणकौतुकात् पुनरिव पुरस्कर्तुं श्रीरङ्गिणः फणिपुङ्गवे ।
समुपदधतः कञ्चित्कञ्चित्प्रसारयतो भुजद्वयमपि सदा दानश्रद्धालु दीर्घमुपास्महे ॥ १०६ ॥

ப்ரதிஜலதிதோ வேலாசய்யாம் விபீஷணகௌதுகாத்
புநரிவ புரஸ்கர்த்தும் ஸ்ரீரங்கிண: பணிபுங்கவே,
ஸமுபதததஃ கஞ்சித் கஞ்சித் ப்ரஸாரயதோ புஜ-
த்வயமபி ஸதா தாநச்ரத்தாளு தீர்க்கமுபாஸ்மஹே. (106)

| | | | |
|---|---|---|---|
| ப்ரதி ஜல திதஃ | – கடலுக்கு எதிர் முகமாக | கஞ்சித் | – மற்றொரு திருக்கையை |
| வேலாசய்யாம் | கடற்கரையில் பள்ளிகொண்டதை | ப்ரஸாரயதஃ | நீட்டிக் கொண்டிருப்பவருமான |
| விபீஷண கௌதுகாத் | விபீஷணாழ்வானுடைய குதூஹலத்தினால் | ஸ்ரீரங்கிண: | – பெரிய பெருமாளுடைய |
| புந: | – மறுபடியும் | தீர்க்கம் | – நீண்டதும் |
| புரஸ்கர்த்தும் இவ | ஆதரித்து அங்கீகரிப்பதற்குப் போலே, | ஸதா தாந ச்ரத்தாளு | எப்போதும் தானம் பண்ணுவதில்கருத்துடையதுமான |
| பணி புங்கவே | – திருவனந்தாழ்வான்மீது | புஜத்வயம் அபி | – இரண்டு திருக்கையையும் |
| கஞ்சித் (புஜம்) | – ஒரு திருக்கையை | உபாஸ்மஹே | – சிந்திக்கிறோம். |
| ஸமுபதததஃ | தலையணையாகவைத்துக் கொண்டவரும் | | |

***—பெரிய பெருமாள் ஒரு திருக்கையைத் தலையணையாக மடுத்துக்கொண்டும் மற்றொரு திருக்கையை நீட்டிக்கொண்டும் சயனித்தருளும் நிலைமையைக் கண்டால் முன்பு ராமாவதாரத்திலே கடலைக் கடந்து இலங்கைக்கெழுந்தருளவேண்டின காலத்துக் கடலரசனை நோக்கிக் கரையிலே சரணாகதி தோற்ற சயனித்தருளின நிலைமை நினைவுக்கு வருகையாலே. ஸ்ரீவிபீஷணாழ்வானுடைய ஆசைக்கிசைந்து அந்த நிலைமை தன்னையே மீண்டும் காவிரிக்கரையிலே அபிநயித்துக் காட்டியருள்வதாக உல்லேகிக்கலாம்படியிருக்கிறதென்கிறார்.

இதில் இரண்டாம் பாதத்தில் 'புரஸ்கர்த்தும்' என்று அவ்யயமாக வன்றிக்கே 'புரஸ்கர்த்து:' என்று ஷஷ்டிவிபக்தியான பாடமும் முன்டு; "புரஸ்கர்த்துரிவ

ஸ்திதஸ்ய ஸ்ரீரங்கிண:" என்று அந்வயம், "அலம்புரிந்த நெடுந்தடக்கை" என்ற அருளிச்செயலைத் திருவுள்ளம் பற்றி, 'ஸதா தாநசீரத்தாஞு தீர்க்கம்" எனப்பட்டது.

[விபீஷணகௌதுகாத்] "மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசை நோக்கி மலர்கண் வைத்த, என்னுடைய திருவரங்கன்" என்றதை இங்கு அநுஸந்திப்பது. ... ... ... (106)

**कुसुमभरालसौ स्फटिकवेदिशयौ विटपावमरतरोः परं परिहसत् पृथु रङ्गभुजः ।**
**बहुमणिमुद्रिकाकनककङ्कणदोर्वलयैः किसलयि दोर्द्वयं फणिनि निर्भरसुप्तमिमः ॥ १०७॥**

குஸுமபராலஸௌ ஸ்படிகவேதிசயௌ விடபௌ
அமரதரோ: பரம் பரிஹஸத் ப்ருதுரங்கபுஜ:,
பஹுமணிமுத்ரிகாகநகக்கங்கணதோர்வலயை:
கிஸலயி தோர்த்வயம் பணிநி நிர்ப்பரஸுப்தமிம:, (107)

| | |
|---|---|
| பஹு- | — அனேகங்களான |
| மணி முத்ரிகா- | — ரத்ன மோதிரங்களென்ன |
| கநக- | — பொன்மயமான |
| கங்கண- | — கைவளைகளென்ன |
| தோர்வலயை: | — தோள்வளைகளென்ன |
| (ஆகிய இவற்றாலே) | |
| கிஸலயி | — பல்லவங்களையுடையதாயும், |
| பணிநி | — திருவனந்தாழ்வான்மீது |
| நிர்ப்பர ஸுப்தம் | நிர்விசாரமாகக் கண்வளர்ந்தருள்வதும், |
| (இப்படி யிருப்பதனாலே) | |

| | |
|---|---|
| குஸுமபர அலஸௌ | புஷ்பங்கள் நிறைந்திருப்பதால் தளைந்தவைகளாய் |
| ஸ்படிக வேதி சயௌ | ஸ்படிகக்கல் மயமான திண்ணையிலே படுத்திருப்பவைகளான |
| அமரதரோ: விடபௌ | கல்பவ்ருக்ஷத்தின் இரண்டு கிளைகளை |
| பரம் | — மிகவும் |
| பரிஹஸத் | — பரிஹஸிப்பதும் |
| ப்ருது | — பருத்ததுமான |
| ரங்கபுஜ: தோர்த்வயம் | பெரியபெருமாளுடைய புஜத்வயத்தை |
| இம: | — ஆச்ரயிக்கிறோம். |

* * *—கீழ் ச்லோகத்தில் *புஜத்வயமபி ஸதா தாந சீரத்தாஞு* என்றதற்கு விவரணமாயிருக்கு மிந்தச்லோகம். அரங்கமா நகரிலமர்ந்த கல்பவ்ருக்ஷமாகிய அரங்க நாதனுடைய திருக்கைகள் விண்ணுலகத்திலுள்ள கல்பவ்ருக்ஷத்தின் கிளைகளைப் பரிஹஸித்து அவற்றினும் வீறுபெற்றிருக்கின்றன வென்கிறார். [குஸுமபராலஸௌ] மரக்கிளைகள் புஷ்ப பாரத்தாலே தழைத்திருக்கும்; இங்கே குஸுமத்தைச் சொன்னது பல்லவங்களுக்கும் உபலக்ஷணமாகும். பெரிய பெருமாளுடைய திருக்கைகளும் **[பஹுமணிமுத்ரிகா கநககங்கண தோர்வலயை: கிஸலயி]** திவ்யாபரணங்களினால் விளங்கப் பெற்றிருப்பது பல்லவங்களும் புஷ்பங்களும் தோன்றப்பெற்றிருப்பவை போலும். வரதராஜஸ்தவத்தில் "பாரிஜாதவிடபாநபிதோ யா" என்ற ச்லோகத்தை இங்கே அநுஸந்திப்பது.

[ஸ்படிகவேதிசயௌ] கல்பவ்ருக்ஷமானது தேவலோகத்ததாகையாலே அங்கே ஸ்படிகமய சிலாதலங்களுக்குக் குறையில்லையே; அந்த வ்ருக்ஷத்தின் கிளைகள் தழைந்து ஸ்படிகமணிமயமானதொரு வேதிகையிலே சாய்ந்துகிடக்கும்: பெரிய பெரு

http://acharya.org

மானுடைய புஜத்வயமும் [பணிநி நிர்ப்பரஸுப்தம்] திருவனந்தாழ்வானுடைய திருமேனியாகிற ஸ்படிகவேதிகையிலே சாய்ந்துகிடக்கிறது. இப்படிப்பட்ட திருக்கைகளைப் பற்றுகிறேனென்றாராயிற்று.

[ரங்கபுஜ:] இது ஆறும் வேற்றுமை; ரங்கம், புநக்தி பாலயதீதி ரங்கபுக்—தஸ்ய. [நிர்ப்பரஸுப்தம்] ஸேநாபதியாழ்வான் திருவாழியாழ்வான் தொடக்கமானார் பக்கலிலே ஜகந்நிர்வாஹ பாரத்தை வைத்திருக்கையாலே தான் நிர்ப்பரனாகக் கண்வளர்ந்தருளக்குறையில்லையிறே. த்ருஷ்டாந்தத்திலே "குஸுமபராலஸை" என்று சொல்லிவைத்து தார்ஷ்டாந்திகத்திலே நிர்ப்பரஸுப்தம் என்று சொன்ன சமத்காரம் நோக்கத்தக்கது. பொறுக்கமுடியாதபடி விஞ்சினபாரத்தை வஹிப்பதனால் சிரமுண்டாகி சயனிப்பது அங்கு. ஒரு காரியப்பாடில்லாமையாலே கண்வளர்ந்தருள்வது இங்கு. (107)

**मद्रक्षाव्रतकौतुके सुकटके विक्रान्तिकर्णेजपे शार्ङ्गज्याकिणकर्कशिम्नि सुमनस्स्रङ्मोहने मार्दवे।**
**दोर्द्वन्द्वं बहुशः प्रलोभ्य कमलालीलोपधानं भवत्तच्चित्रालकमुद्रितं विजयते श्रीरङ्गसंसङ्गिनः ॥१०८॥**

மத்ரக்ஷாவ்ரதகௌதுகே ஸுகடகே விக்ராந்திகர்ணேஜபே
சார்ங்கஜ்யாகிணகர்க்கசிம்நி ஸுமநஸ் ஸ்ரங்மோஹநே மார்த்தவே,
தோர்த்வந்த்வம் பஹுச: ப்ரலோப்ய கமலாலீலோபதாநம் பவத்
தச்சித்ராலகமுத்ரிதம் விஜயதே ஸ்ரீரங்கஸம்ஸங்கிந:. ... (108)

| | | | |
|---|---|---|---|
| மத்ரக்ஷாவ்ரத கௌதுகே | என்னைக் காத்தருளும் விரதத்திற்குக் கட்டின கங்கண ஸூத்ரமாயுள்ள | ப்ரலோப்ய | — ஆசைப்படச்செய்து |
| ஸுகடகே | — அழகிய வளையிலும், | கமலா- | — பெரிய பிராட்டியார்க்கு |
| விக்ராந்தி கர்ணே ஜபே | பராக்ரம ஸூசகமான | லீலா உபதாநம் பவத் | லீலார்த்தமான தலையணையாக ஆகின்றதும் |
| சார்ங்க ஜ்யாகிண கர்க்கசிம்நி | சார்ங்கவில்லின் தழும்பினாலுண்டான வன்மையிலும், | தச்சித்ர அலக முத்ரிதம் | அந்தப்பிராட்டியின் விசித்திரமான கூந்தல்களினால் அடையாள மிடப்பெற்றதுமான |
| ஸுமந: ஸ்ரக் மோஹநே | 'புஷ்பமாலையோ இது' என்று மயங்குவதற் குறுப்பான | ஸ்ரீரங்க ஸம்ஸங்கிந: தோர்த்வந்த்வம் | பெரிய பெருமானது திருக்கை யிணையானது |
| மார்த்தவே | — ஸௌகுமார்யத்திலும் | | |
| பஹுச: | — பெரும்பாலும் | விஜயதே | — சிறந்து விளங்குகின்றது. |

* * * — மீண்டும் பெரியபெருமானுடைய திருக்கைகளிலே ஈடுபடுகிறார். பர்யாயேண பிராட்டிக்குத் தலையணையாகின்றது இந்த புஜத்வயமும் என்கிறார் இத்திருக்கைகளானவை ஒன்று அம்சங்களினால் பிராட்டியைத் தன்னிடத்தில் ஈடுபடுத்திக் கொண்டன வென்கிறார் பூர்வார்த்தத்தில். [மத்ரக்ஷாவ்ரதகௌதுகே ஸுகடகே] திருக்கையிலணிந்துள்ள கடகத்தைப் பிராட்டிக்குக் காட்டி 'நம் குழந்தையைக் காப்பதற்குக் கட்டின காப்புக்காண் இது' என்கிறாராம் பெரிய பெருமாள். 'நம்குழந்தையினிடத்திலே இவர்க்கு இவ்வளவு பரிவு உண்டாவதே!' என்று உகந்து அகலமாட்டாளிறே பிராட்டி. பட்டர்தாம் ஸ்ரீரங்கராஜ கமலாபத லாலிதரிறே. கௌதுகமென்று கங்கண ஸூத்ரத்துக்குப் பெயர்.

http://acharya.org

[விக்ராந்திகர்ணோஜுபே சார்ங்கஜ்யாகிணகர்க்கசிம்நி] "தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவாம் அங்கை" என்கிறபடியே பராக்ரமப்ரகர்ஷத்துக்கு ஸூசகமாயிருக்கின்ற காணித்தழும்பைக் காட்டியும் பிராட்டியை உகப்பிக்கின்றாராம் பெரிய பெருமாள். வீரவாசி தோற்றும்படியாலே சொரசொரப்புக் கண்ட தில்லையாகில் பிராட்டி தானை தன்னோடொத்த பெண்களோடே அணைந்ததாக நினைப்பாளேயன்றி ஆண்புலியோடே அணையப் பெற்றதாக நினையாளிறே, "தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்... வைதேஹி பர்த்தாரம் பரிஷஸ்வஜே" என்று வீரவாசிகண்டு உகந்து அணையுமவளிறே பிராட்டி. [ஸௌமநஸ ஸ்ரங்மோஹநே மார்த்தவே] "புஷ்பஹாஸ இதிநாம துஹாதம் ஸௌகுமார்யமதிவாங்மநஸம் ந:" என்று கீழே அருளிச்செய்தபடியே மனமொழிகளுக் கெட்டாத ஸௌகுமார்யத்தையுங்காட்டி உகப்பிக்கிறாரென்கிறது. 'இது திருக்கையல்ல; புஷ்பமாலையே' என்று மயங்குவதற்குறுப்பான ஸௌகுமார்யத்திலும் பிராட்டியை ஈடுபடுத்தி என்கை. இப்படிப்பட்ட மூன்று ஹேதுக்களாலே பிராட்டியை உகப்பித்து அவளுக்குத் தலையணையாக அமைந்தவைவாம் திருக்கைகள். "கமலாலீலோபதாநம்பவத்" என்றவிடத்துக்குச் சேர. "ஆவிவாஹ ஸமயாத் க்ருஹே வநே சைசவே தத நு யௌவநே புந:, ஸ்வாபஹேதுரநுபாச்ரிதோந்யயா ராமபாஹூருபதாந மேஷதே" என்ற உத்தரராமசரித ச்லோகார்த்தம் நினைவுக்கு வரும்.

"கமலாம் லீலோபதாநம்பவத்" என்ற இரண்டு பதமான பாடமும் மிகப்பொருந்தும். "கமலாம் ப்ரலோப்ய, தச்சித்ராலக முத்ரிதம் லீலோபதாநம்பவத்" என்று அந்வயமாகும். (108)

भवार्तानां वक्त्रामृतसरसि मार्गं दिशदिव स्वयं वक्त्रेणेदं वरदमिति संदर्शितमिव ।
कराम्भोजं पङ्केरुहवनरुषा पाटलमिव श्रयामि श्रीरङ्गेशयितुरुपधानीकृतमहम् ॥ १०९ ॥

பவார்த்தாநாம் வக்த்ராம்ருதஸரஸி மார்க்கம் திசதிவ
ஸ்வயம் வக்த்ரேணேதம் வரதமிதி ஸந்தர்சிதமிவ,
கராம்போஜம் பங்கேருஹவநருஷா பாடலமிவ
ச்ரயாமி ஸ்ரீரங்கேசயிதுருபதாநீக்ருதமஹம். (109)

பவ ஆர்த்தாநாம் — ஸம்ஸாரத்தில் அடிக் கொதித்தவர்களுக்கு
வக்த்ர அம்ருத ஸரஸி — திருமுகமாகிற அமுதத்தடாகத்தில் (போய்ச் சேர்வதற்கு)
மார்க்கம் — வழியை
திசத் இவ (ஸ்திதம்) — உபதேசிப்பது போன்றுள்ளதும்,
இதம் — 'இந்தத் திருக்கையானது'
வரதம் இதி — வரங்களை யெல்லாம் அளிக்க வல்லது என்று
வக்த்ரேண — திருமுகத்தினால்
ஸ்வயம் — தானே
ஸந்தர்சிதம் இவ — காட்டப்பட்டது போன்றுள்ளதும்,
பங்கேருஹ வந ருஷா இவ — தாமரைக் காட்டினிடத்தில் சீற்றத்தினாலே போல
பாடலம் — சிவந்திருப்பதும்
உபதாநீக்ருதம் — தலையணையாகச் செய்துகொள்ளப்பட்டதுமான
ஸ்ரீரங்கேசயிது: கர அம்போஜம் — பெரிய பெருமானது தாமரைக்கையை
அஹம் ச்ரயாமி — அடியேன் பற்றுகிறேன்.

* * *—கீழ் நான்கு ச்லோகங்களிலே பெரிய பெருமானுடைய இரண்டு திருக்கைகளையும் சேர அநுபவித்தார்: இதில் தலையணையாக அமைக்கப்பட்டுள்ள ஒரு வலத்

http://acharya.org

திருக்கையை மாத்திரம் அநுபவிக்கிறார். திருக்கையைத் தலையணையாக மடுக்கும் போது திருமுகமண்டலத்தைத் தொட்டுக் கொண்டு கிடக்கையாலே அந்த ஸந்நிவேசத்திற்கு இரண்டு உத்ப்ரேக்ஷைகளிடுகிறார். [பவார்த்தாநாம் வக்த்ராம்ருதஸரஸீமார்க்கம் திசதிவ] உலகத்தில் தாபத்திலே தபிக்கப்பட்டவர்கள் ஒரு பொய்கையைத் தேடித் திரிவர்கள்; ஸம்ஸாரத்திலே தபிக்கப்பட்டவர்களுக்கு ஸாமாந்யமான ஒரு பொய்கையினால் பயனில்லையே? அம்ருதஸரஸ்ஸிலே அவகாஹித்தாலன்றி அந்தத் தாபம் தீராதே: "இதோ; திருமுகமாகிற அம்ருத தடாகம் விளங்காநின்றது: இது தன்னிலே அவகாஹித்து உங்களுடைய ஸம்ஸார தாபங்களைத் தீர்த்துக்கொள்ளுங்கள்" என்று வக்த்ராம்ருதஸரஸ்ஸுக்கு வழிகாட்டியாயிருக்கின்றது போலும் இந்தத் திருக்கை. உலகில் கோடைகாலத்தில் தாபாதுரர்களான வழிப்போக்கர்கள் தெளியுமாறு இன்ன திசையிலே நல்ல பொய்கையுள்ளதென்று காட்டுதற்காகக் கைவிரல்குறியிட்ட தூண்களை நாட்டிவைத்துக் காட்டுவர்களாய்த்து தார்மிகரான அரசர்கள்; அப்படியே இங்குங் காட்டுகிறபடி.

[ஸ்வயம் வக்த்ரேணேதம் வரதமிதி ஸந்தர்சிதமிவ.] திரு முகத்திலே திருக்கை படிந்திருக்கிறபடிக்கு உத்ப்ரேக்ஷித்தது கீழ்; அந்தத் திருக்கையைத் திருமுகம் நோக்கிக் கொண்டிருக்கிறபடிக்கு உத்ப்ரேக்ஷையாகிறது இது; அதாவது—தலையணையாக அமைத்துக் கொள்ளப்பட்ட தக்ஷிணபுஜத்திலே த்ருஷ்டிபாதம் பண்ணுகின்ற முகமானது கடாக்ஷமாகிற இங்கிதத்தாலே "இந்தக்கையே வரமளிக்கும் கை" என்று தெரிவியா நின்றது போலும். நாட்டியம் நடிப்பவர்கள் விரலாலும் முகத்தாலுமிறே உட்கருத்தை விளக்கிக் காட்டுவது. அங்ஙனே இரண்டுமாயிற்றிங்கு. பட்டர்போல்வாரான ரஸிகசிகாமணிகளுக்கன்றி மற்றையோர்க்கு நிலமன்றிறே இவ்வபிப்ராய விசேஷ விஜ்ஞாநம்.

[பங்கேருஹவநருஷா பாடலமிவ] திருக்கை சிவந்திருப்பது ஒரு காரணத்தாலன்றிறே; தாமரைப்பூபோலே இயற்கையாகவே சிவந்திருக்கச் செய்தேயும் மதிமத்காராதிசயத்தாலே ஹேதூத்ப்ரேக்ஷை பண்ணுகிறபடி. கோபமுள்ள விடத்திலே சிவப்பு உண்டாகக்காண்கிறோம்; திருக்கைத்தலத்திற்குத் தாமரைக் காட்டிலே சீற்றமுண்டாகி அந்தச் சீற்றத்தினலே சிவப்பு உண்டாயிற்றுப் போலுமென்கிறார். திருக்கைக்குத் தாமரைக்காட்டிலே சீற்றமேதென்னில்; "கட்டுரைக்கில் தாமரை நின்கண் பாதம் கை யொவ்வா", என்னும்படி நாம் அதன் செருக்கையடக்கி வெற்றி பெற்றிருக்கும்போது அது வெள்கி நீரினுள்ளேயிருந்து அழிந்துபோக வேண்டியிருக்க அது செய்யாதே இன்னமும் வெளியில் தலைகாட்டுவதே! என்ற சீற்றமாயிற்று. அன்றியே, தாமரைக்காட்டை வெல்லவேணுமென்னும் விருப்பத்தினலுண்டான கோபமென்றுங் கூறுவர். (109)

किरीटं श्रीरङ्गेशयितुरुपधानीकृतभुजः विधीशाधीशत्वावटन इति संस्पृश्य वदति ।
निरीहाणां मुख्यं शरणमिति बाहुस्तदितरः स्फुटं ब्रूते पादाम्बुजयुगलमाजानुनिहितः ॥ ११० ॥

கிரீடம் ஸ்ரீரங்கேசயிதுருபதாநீக்ருதபுஜ:
விதீசாதீசத்வாவடந இதி ஸம்ஸ்ப்ருச்ய வததி,
நிரீஹாணாம் முக்யம் சரணமிதி பாஹுஸ்ததிதர:
ஸ்புடம் ப்ரூதே பாதாம்புஜயுகளமாஜாநுநிஹித: (110)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீரங்கேசவிது:- | பெரிய பெருமாளுடைய | ஆஜாநு | — முழந்தாள் வரையில் |
| உபதாரீக்ருத புஜ: | தலையணையாகச் செய்து கொள்ளப்பட்ட திருக்கையானது | நிஹித: | —(நீட்டி) வைக்கப்பட்டுள்ள |
| | | இதர: பாஹு:- | மற்றொரு திருக்கையானது |
| கிரீடம் | — திருவபிஷேகத்தை | பாத அம்புஜ யுகளம் | திருவடித்தாமரை யிணையை |
| ஸம்ஸ்ப்ருச்ய | — தொட்டு | ஸம்ஸ்ப்ருச்ய | — தொட்டுக்காட்டி |
| விதி சிவ அதிசத்வாத்டதே இதி வததி | "ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தலைவரானகையாலே (இவர்க்கு இத்திருவபிஷேகம்) பொருந்தியிருக்கிறது" என்று சொல்லா நின்றது; | நிஹீநாநாம் | — "தாழ்ந்தவர்களுக்கு |
| | | முக்யம் சரணம் இதி | (இத்திருவடிகளே) முக்கியமான புகல்" என்றும் |
| | | ஸ்புடம் ப்ருதே | — சொல்லா நின்றது போலும். |

* * *—ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே மீண்டும் இரண்டு திருக்கைகளையும் சேர வநுபவிக்கிறாரிதில். *அங்கைரந்தர் நிஹிதவசநைஸ் ஸூசிதஸ் ஸம்யகர்த்த:* என்றாப்போலே மௌநநியமங் கொண்டவர்களும் அங்கவிந்யாஸ விசேஷமாத்ரத்தாலே அபிப்ராய ஸூசநம் பண்ணுவதுண்டிறே; அதுபோலே இவ்விரண்டு திருக்கைகளும் ஊமைகளாய்க்கொண்டே சேஷ்டையினாலேயே வக்தவ்யாம்சத்தை விளங்கச் சொல்லுகின்றனவென்கிறார். தலையணையாக அமைத்துக்கொள்ளப்பட்டவொரு திருக்கையானது திருவபிஷேகத்தைத் தொட்டுக்கொண்டிருக்கு மிருப்பினாலே "ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தலைவரான பெரியபெருமாளொருவர்க்கே இத்திருவபிஷேகம் பொருந்தும்," என்று தெரிவிக்கின்றது போலும். இனி, திருமுழந்தாளளவும் நீட்டிவைக்கப்பட்டிருக்கின்ற மற்றொரு இடத்திருக்கையானது திருவடியைத் தொட்டுக்கொண்டிருக்கு மிருப்பினாலே "இத்திருவடியிணையே தாழ்ந்தார்க்குத் தக்க புகலிடம்" என்று தெரிவிக்கின்றது போலும். வலத்திருக்கையானது பரத்வத்தைக் கோட்சொல்லித் தருகின்றது. இடத்திருக்கையானது ஸௌலப்யத்தைக் கோட்சொல்லித் தருகின்றது என்றாராயிற்று.

நான்காம் பாதத்திலுள்ள 'ஸ்புடம்' என்னும் அவ்யயம் ஆலங்காரிக ஸமயத்தின்படி உத்ப்ரேக்ஷாலிங்கமென்று கொள்ளலாகும். (110)

मलयजशशिलिप्तं मालतीदामतल्पं सुमणिसरवितानं कौस्तुभस्वस्तिदीपम् ।
दनुजवृषविषाणोल्लेखचित्रं च लक्ष्मीललितगृहमुपासे रङ्गसर्वंसहोरः ॥ १११ ॥

மலயஜசசிலிப்தம் மாலதீதாமதல்பம்
ஸுமணிஸரவிதாநம் கௌஸ்துபஸ்வஸ்திதீபம்,
தநுஜவ்ருஷவிஷாணோல்லேகசித்ரஞ்ச லக்ஷ்மீ-
லலிதக்ருஹமுபாஸே ரங்கஸர்வம்ஸஹோர:... (111)

| | | | |
|---|---|---|---|
| மலயஜ சசி லிப்தம் | சந்தனத்தாலும் பச்சைக்கருப்பூரத்தாலும் பூசப்பட்டதாய் | கௌஸ்துப ஸ்வஸ்தி தீபம் | கௌஸ்துபமணியாகிற மங்கள தீபத்தை யுடையதாய் |
| மாலதீ தாம தல்பம் | முல்லை மாலையைப் படுக்கையாகவுடையதாய் | தநுஜ வ்ருஷ | அஸுரர்களாகிற எருதுகளினுடைய |
| ஸுமணி ஸர விதாநம் | சிறந்த ரத்நங்களினாலாகிய ஸரங்களை மேற்கட்டியாகவுடையதாய் | விஷாண | — கொம்புகளினாலுண்டான |
| | | உல்லேக | — ரேகைகளை |

http://acharya.org

| | | | |
|---|---|---|---|
| சித்ரம் ச | சித்திரமாக வுடைத்தாயு மிருக்கிற | லக்ஷ்மீ லலித க்ருஹம் உபாஸே | பிராட்டியின் விலாஸ மந்திரமாக அநுஸந்திக்கிறேன். |
| ரங்கபர்வம் ஸஹ உர: | பெரிய பெருமாளுடைய திருமார்பை | | |

• • •—திருக்கைகளில் நின்றும் திருமார்பிலே இழிந்து அநுபவிக்கிறார். பெரிய பெருமாளுடைய திருமார்பைப் பெரியபிராட்டியாருடைய கேளீக்ருஹமாகப் பொருந்தப் பேசுகிறார் கீழ்ச்லோகத்தில் திருவடியானது நிஹீநாநாம் முக்க்யம் சரண மென்னப் பட்டது; இதில் திருமார்பு நரீணாமுத்தமாயா: முக்க்யம் சரண மென்னப்படுகிறது. சரண சப்தம் க்ருஹத்துக்கும் வாசகமிறே. லக்ஷ்மீ லலிதக்ருஹமிறே திருமார்பு.

[மலயஜசசிலிப்தம்] கேளீக்ருஹமானது சந்தந கர்ப்பூராதிகள் பூசப்பெற்று நறுமணம் கமழும்; திருமார்பும் அங்ஙனே யிராநின்றது. [மாலதீதாமதல்பம்] கேளீக்ருஹத்திலே நல்ல புஷ்பசயநம் விரிக்கப்பட்டிருக்கும்; இதுதனக்கும் குறையில்லையிறே திருமார்பில். "தோளிணைமேலும் நன்மார்பின் மேலும்... புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" இறே. [ஸுமணிஸரவிதாநம்] கேளீக்ருஹமானது விலையுயர்ந்த ரத்நஸரங்கள் தொங்கவிடப்பெற்று அலங்க்ருதமாயிருக்கும்; *கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லதோரெழில் நீலமேனியிலே இவற்றுக்கும்குறையில்லையிறே. [கௌஸ்துபஸ்வஸ்திதீபம்] "குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்" என்றும் "தூமணிமாடத்துச்சுற்றும் விளக்கெரியத்......துயிலணைமேல் கண்வளரும்" என்றும் "மன்னு மணிவிளக்கைமாட்டி மழைக்கண்ணார் பன்னுவிசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல்" என்றும் சொல்லுமாபோலே கேளீக்ருஹமானது மங்களதீபம் விளங்கப்பெற்றிருக்கும்: *குருமாமணிப்பூண் குலாவித்திகழும் திருமார்பாகையாலே ஸ்ரீகௌஸ்துப மணியேயாயிற்று இங்கு மங்களதீபம்.

[தநுஜவ்ருஷ விஷாணோல்லேக சித்ரஞ்ச.] கேளீக்ருஹத்தில் ஆலேக்ய சித்தரங்கள் அமைந்திருக்கும்; அஸுரர்களாகிற காளைகளோடே போர்செய்யும்போது அவற்றின் கொம்புபோன்ற நகங்கள் திருமார்பிலே பொறி அதனாலுண்டான ரேகா சித்ரங்கள் நிரம்பியிருக்குமிங்கு. கேளீக்ருஹங்களிலே வ்ருஷபங்களின் கொம்புகளை மாட்டி அழகு பெறுத்துவதும் பலவகைச்சித்திரங்களெழுதி வைப்பதும் வழக்கமாகையாலே லக்ஷ்மீலலிதக்ருஹபக்ஷத்தில் வ்ருஷவிஷாணை:உல்லேகைச் ச சித்ரம் என்று வ்யுத்பத்தி கொள்ளலாம், திருமார்புபக்ஷத்தில் दनुजा एव वृषाः, तेषां (नखरूपैः) विषाणैः (जनिताः) ये उल्लेखाः तैः चित्रम् என்றாகக்கடவது. அல்லது. அஸுராவேசங்கொண்ட விருஷபங்களினுடைய கொம்புகளாலுண்டான ரேகைகளினால் சித்திர மெழுதப்பெற்றிருக்கின்றது திருமார்பு என்றுங் கொள்ளலாம். நப்பின்னைப்பிராட்டியை மணஞ்செய்து கொள்ளும் பொருட்டு அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் வலியடக்கி வென்ற வரலாறு ப்ரஸித்தம்.

அன்றியும், கண்ணபிரானைக் கொல்லுமாறு கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருது வடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு கண்ணபிரானது திருவயிற்றின்மேல் கண்வைத்துக்

கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, பிரான் அவ்வெருதைக் கொன்றுமுடித்த வரலாறும் உண்டு. ஆகவே, த்ருஜஸ்நுஷவிஷாணோல்லேக சித்ரத்வம் எம்பெருமானுடைய திருமார்புக்கு விபவாவதார த்ருஷ்டியாலுண்டு, "கோவலனாய் வெண்ணெயுண்ட வாயனென் னுள்ளம் கவர்ந்தானை" அணியாரங்களையிருப்பது.

ஆக இவ்வகையாலே பெரியபிராட்டியாருடைய சயநக்ருஹமென்னப் பொருந்தின பெரியபெருமாள் திருமார்பை உபாஸிக்கிறேனென்றாராயிற்று. *(111)*

**हारस्फारितफेनमंशुलहरीमालर्द्धि मुक्ताफलश्रेणीशीकरदुर्दिनं तत इतो व्याकीर्णरत्नोत्करम्**
**आविःकौस्तुभलक्ष्मि रङ्गवसतेर्निस्सीमभूमाद्भुतं वक्षो मन्दरमथ्यमानजलधिश्लाघं विलोकेमहि ॥ ११२ ॥**

ஹாரஸ்பாரிதபேநமம்சுலஹரீமாலர்த்தி முக்தாபல—
ச்ரேணீசீகரதுர்த்திநம் ததஇதோ வ்யாகீர்ணரத்நோத்கரம்,
ஆவி: கௌஸ்துபலக்ஷ்மி ரங்கவஸதேர் நிஸ்ஸீமபூமாத்புதம்,
வக்ஷோ மந்தரமத்யமாநஜலதிச்லாகம் விலோகேமஹி. **(112)**

| | | | |
|---|---|---|---|
| ஹாரஸ்பாரித பேநம் | முக்தாஹாரங்களைப்பெருத்த நுரைகளாக வுடைத்தாயும் | ஆவி: கௌஸ்துப லக்ஷ்மி | கௌஸ்துபமணியும் திருமாமகளும் தோன்றப் பெற்றதாயும் |
| அம்சு லஹரீ மாலா ருத்தி | காந்திகளாகிற அலை வரிசைகளின் ஸம்ருத்தியை யுடைத்தாயும் | நிஸ்ஸீம பூம அத்புதம் | அளவிறந்த பெருமையினாலே ஆச்சரியமாயிருக்கிற |
| முக்தாபல ச்ரேணீ சீகர துர்த்திநம் | முத்து வரிசைகளாகிற ஜல பிந்துக்களாலே அடர்ந்ததாயும் | ரங்கவஸதே: வக்ஷ: | பெரியபெருமாளுடைய திருமார்பை |
| இதஸ் தத: | — இங்குமங்கும் | மந்தர மத்யமாந ஜலதி ச்லாகம் | மந்தர மலையினால் கடையப்படுகின்ற கடலினோடொத்த பெருமையை யுடையதாக |
| வ்யாகீர்ண ரத்ந உத்கரம் | சிதறியிருக்கிற ரத்நஸமூஹங்களை யுடைத்தாயும் | விலோகேமஹி | — ஸேவிக்கக் கடவோம். |

* * *—பேரருளாளனுடைய திருமார்பிலே யீடுபட்ட ஆழ்வான் (வரதராஜஸ்தவத்தில்) அருளிச்செய்த *மத்யமாநசலபேநிலஸிந்து* என்ற ச்லோகத்தைப்பெரும்பாலும் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்வதாம் இந்த ச்லோகம். மந்தரமலையை மத்தாக நாட்டிக் கடைந்த திருப்பாற்கடல் போன்றுள்ளது பெரியபெருமாளுடைய திருமார்பு என்கிறார்.

[ஹாரஸ்பாரித பேநம்] கடல் கடையுங்காலத்தில் நுரைகள் நிரம்பியிருக்கும்; திருமார்பிலோ வென்னில், வெண்முத்து வடங்களே நுரைகளாம். [அம்சு லஹரீ மாலர்த்தி] கடலானது அலைகள் மோதப்பெறும்; திருமார்பிலே காந்திவெள்ளம் அலையெறிகின்றது. [முக்தாபலச்ரேணீ சீகரதுர்த்திநம்] கடலில் நீர்த்திவலைகள் வியாபித்திருக்கும்; திருமார்பில் முத்துக்களே நீர்த்திவலைகள். [துர்த்திநம்] "மேகச்சந்நேஹ்நி துர்திநம்" என்ற அமரகோசத்தின்படியே மேகங்கள் வியாபித்திருக்கப்பெற்ற தினம் துர்த்திந மெனப்படும்; அந்த முழுப்பொருளும் இங்கு விவக்ஷிதமன்று; வியாபிக்கப் பட்டது' என்னுமளவே இங்கு விவக்ஷிதமான பொருள். [தத இதோ வ்யாகீர்ண

http://acharya.org

ரத்நோத்கரம் இங்கு ரூபகாபேக்ஷையில்லை; எங்குப்பார்த்தாலும் ரத்நங்கள் விளங்கா நிற்குந்தன்மை கடலுக்கும் திரு மார்புக்கும் ஸாதாரணமிறே.

[ஆவி:கௌஸ்துபலக்ஷ்மி] கடல் கடையும்போதிறே ஸ்ரீகௌஸ்துபமணியும் ஸ்ரீமஹாலக்ஷ்மியும் ஆவிர்ப்பவித்தது; அந்த கௌஸ்துப லக்ஷ்மிகளின் தோற்றம் திரு மார்பிலும் குறையற்றதிறே: "குருமாமணிப்பூண் குலாவித்திகழும் திருமார்பு." "அகல கில்லேனிறையுமென்றலர்மேல்மங்கை யுறைமார்பு."

நிஸ்ஸீமபூமாத்புதம் நிஸ்ஸீமேந பூம்நா அத்புதம்=பூம சப்தத்துக்கு இரண்டு பொருளுண்டு; வடிவிலுலாகும் பெருமையும் குணத்திலுலாகும் பெருமையும். கடலின் விஸ்தாரம் எல்லையற்ற தாகையாலே முந்தின பொருள் அதற்குச்சேரும்; திருமார்பின் வைபவம் வாசாமகோசரமாகையாலே பிந்தின பொருள் இதற்குச் சேரும். 'நிஸ்ஸீம பூம' என்றவளவில் ஒருபதமாகவும் 'அத்புதம்' என்று வேறுபதமாகவும் பிரித்துரைக் கவுமாம். தாத்பர்யமொன்றே.

ஆக இவ்வகைகளாலே, மந்தரமிட்டுக் கடைந்த கடலின் நிலைமையையடைந் திருக்குமதான திருமார்பைக் கண்குளிர ஸேவிக்கக் கடவோமென்றாராயிற்று. (112)

वक्षःस्थल्यां तुलसिकमलाकौस्तुभैर्वैजयन्ती सर्वेशत्वं कथयतितरां रङ्गधाम्नस्तदास्ताम् ।
कूर्मव्याघ्रीनखपरिमिलत्पञ्चहेती यशोदानन्दा मौग्ध्याभरणमधिकं नस्समाधिं धिनोति ॥ ११३ ॥

வக்ஷ:ஸ்ஸ்தல்யாம் துலஸிகமலாகௌஸ்துபைர் வைஜயந்தீ
ஸர்வேசத்வம் கதயதிதராம் ரங்கதாம்நஸ் ததாஸ்தாம்,
கூர்மவ்யாக்ரீநகபரிமிலத்பஞ்சஹேதீ யசோதா-
நந்தா, மௌக்த்யாபரணமதிகம் நஸ் ஸமாதிம் திநோதி. (113)

ரங்கதாம்ந: — பெரிய பெருமாளுடைய
வக்ஷஸ் ஸ்தல்யாம் — திருமார்பிடத்திலே
துளஸி கமலா கௌஸ்துபை: — திருத்துழாய் பெரிய பிராட்டியார் ஸ்ரீகௌஸ்துபம் ஆகிய இவற்றோடு கூடியிருக்கிற
வைஜயந்தீ — வநமாலையானது
ஸர்வேசத்வம் — 'இவர் ஸர்வஸ்மாத் பரர்' என்னுமிடத்தை
கதயதி தராம் — நன்கு விளக்குகின்றது:
தத் ஆஸ்தாம் — அது நிற்க;
மௌக்த்ய ஆபரணம் — இளமைப்பருவத்திற்குரிய திருவாபரணமாக
யசோதா நந்தா — யசோதைப் பிராட்டியினால் சாத்தப்பட்ட
கூர்ம்வ்யாக்ரீநக பரிமிலத் பஞ்சஹேதீ — ஆமை [illegible] புலி நகம் என்ப வற்றோடு கூடிய பஞ்சாயுதாபரணமானது
ந: — நம்முடைய
ஸமாதிம் — சித்தவ்ருத்தியை
அதிகம் திநோதி — மிகவும் மகிழ்விக்கின்றது.

••.—பெரியபெருமாளுடைய திருமார்பில் பரத்வ ஸௌலப்யங்க ளிரண்டையும் அநுபவிக்கிற அழகு காண்மின்.—திருமார்பானது பிராட்டி, ஸ்ரீகௌஸ்துபமணி, வநமாலை முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டிருப்பது போலவே யசோதைப்பிராட்டி சாத்தின அய்ம்பத்தாலி ஆமைத்தாலி முதலிய க்ராம்ய பூஷணங்களாலும் அலங்கரிக் கப்பட்டிருக்கையாலே பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் பொலிகின்றன வென்கிறார். இரண்டும் பொலிந்தாலும் பரத்வ ப்ரகாசத்திலே உபேக்ஷையும் ஸௌலப்ய ப்ரகாசத்திலே ஆதராதிசயமும் தோற்ற அருளிச்செய்திருப்பதில்.

Srivatsam

http://acharya.org

திருத்துழாயலங்கல், திருமார்பகள் துருமாமணிப்பூண் வநமாலை ஆகிய இவ்வாபரணங்கள் பெரியபெருமாளுடைய ஸர்வேச்வரத்வத்தை விளம்பரப்படுத்துகின்றன; ஆயினும் இது கிடக்க; ஆமைதாலம், புலிநகம், பஞ்சாயுதஹாரம் என்றிவைத் திருவாபரணங்கள் யசோதைப்பிராட்டி சாத்தினவை, இன்றைக்கும் திருமார்பிலே திகழாநின்று ஸௌலப்ய காஷ்டையை விளங்கச்செய்கின்றனவாதலால் இதுகொண்டு உகப்போமென்றாராயிற்று.

[கூர்ம...இத்யாதி.] "அக்குவட முடுத்து ஆமைத்தாலிபூண்ட அனந்தசயனன், தக்கமாமணி வண்ணன் வாசுதேவன் தளர்நடை நடவானோ" என்ற பெரியாழ்வாருளிச்செயல் அறிக.

[பஞ்சஹேதி] ஸ்ரீமத் வேதாந்ததேசிக னருளிச்செய்த யாதவாப்யுதயத்தில் [4—9] "ग्रहादिदोषानपहन्तुकामाः गोप्तुस्सुतं गोपतयस्समेताः । सुवर्णसूत्रग्रथिताभिरामां पञ्चायुधी-माभरणं बबन्धुः" என்றுள்ள ச்லோகம் இங்கு அநுஸந்திக்கத்தகும். அவ்விடத்து வியாக்கியானத்திலே "पञ्चायुधाभरणधारणं बालानां ग्रहादिदोषवारणमित्याहुः" என்றது அறியத்தக்கது.

க்ருஷ்ணாவதாரத்தில் சைசவத்திலே சாத்தின திருவாபரணங்கள் அர்ச்சையிலும் திகழுமோவென்னில்; தாதாத்ம்ய பாவநா ப்ரகர்ஷமிருக்கிறபடி. "பெரிய பெருமாளுடைய கொறுட்டையை மோந்துபார்த்தால் இன்றும் வெண்ணெய் மொச்சை நாற்றம் நாறும்" என்று பட்டர் அருளிச்செய்வரென்பது ப்ரஸித்தம். ஆழ்வானும் திருமாலிருஞ்சோலை யழகருடைய திருக்கபோலங்களை அநுபவித்துப் பேசும்போது ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "यशोदाङ्गुल्यग्रोन्नमितचुबुकाघ्राणमुदितौ कपोलावद्यापि स्तनुपरततद्धर्षगमकौ" என்றருளிச் செய்ததும் ஸ்மரிக்கத்தகும்.

[ந:ஸமாதிம் அதிகம் திநோதி] மங்களாசாஸநத்திலே ஊற்ற முடையோமான நாம் அச்சங்கெட்டிருக்கப் பற்றாசு பெற்றோ மென்றவாறு. ... (113)

**कियान् भरो मम जगदण्डमण्डलीत्यतृप्तितः कृशितमिवोदरं विभोः ।**
**विरञ्चिपोचितजगतीपरम्परां परामिव प्रथयति नाभिपङ्कजम् ॥ ११४ ॥**

கியாந் பரோ மம ஜகதண்டமண்டலீதி அத்ருப்தித: க்ருசிதமிவோதரம் விபோ:,
விரஞ்சிபோசிதஜகதீபரம்பராம் பராமிவ ப்ரதயதி நாபிபங்கஜம். (114)

விபோ: — பெரிய பெருமாளுடைய
உதரம் — திருவயிறானது
ஜகத் அண்ட மண்டலீ — "பதினான்கு லோகங்களாகவுள்ள அண்ட ஸமூஹம்
மம — எனக்கு
கியாந் பர: இதி — எவ்வளவு பாரம்" என்கிற
அத்ருப்தித: — மனக்குறையினாலே
க்ருசிதம் இவ — இளைத்தது போலும்;
நாபி பங்கஜம் — திருநாபிக் கமலமானது
பராம் — வேறான
விரஞ்சிப உசித ஜகதீ பரம்பராம் — (நான்முகன்) ரக்ஷணைப் பரிப்புக்குத் தகுதியான லோக ஸமூஹத்தை
ப்ரதயதி இவ — வெளியிடுகின்றது போலும்.

http://acharya.org

* * *—இதில் முன்னடிகளாலே திருவயிற்றையும் பின்னடிகளாலே திருநாபிக் கமலத்தையும் அநுபவித்துப் பேசுகிறார். 'அண்டரண்டபகிரண்டத்தொருமாநிலமெழுமால்வரை முற்றுமுண்ட திருவயிறானது அண்டக்குலங்களுக்கு ஆச்ரயமாயிருக்கச் செய்தேயும் பருத்துக்காட்டாதே மிகச் சிறுத்திருப்பதற்கு ஹே[illegible]த்ப்ரேக்ஷை பண்ணுகிறார். [கியாந் பர இத்யாதி.] உலகத்தில் ஒருவன் எவ்வளவு உட்கொண்டாலும் நெஞ்சில் ஒரு அத்ருப்தி இருந்தக்கால் உண்டது உருக்காட்டாதே மெலிந்து பேசும்படியிருக்கும் என்பது ஸர்வாநுபவஸித்தம். அப்படியே, பெரிய பெருமாளும் உலகமுழுவதையு மமுதுசெய்யப்பெற்றாலும் "முத்திலங்கு காரார் திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டும், ஆராதென்றிருந்தானைக் கண்டது தென்னரங்கத்தே." என்கிறபடியே பெருவயிறு படைத்த நமக்கு இது ஒரு உணவோ? ரக்ஷணத்திலே பரக்கப் பாரித்திருக்கிற நமக்கு இது ஒரு வரவுசெலவோ? என்று அத்ருப்தியே கொண்டிருப்பதால் திருவயிறு மெலிந்துகிடக்கின்றதுபோலு மென்கிறார். வரதராஜஸ்தவத்திலுள்ள *அண்டாநாம் த்வதுதரமாமநந்தி* என்ற ச்லோகத்திற்காட்டிலும் இதுவொரு விலக்ஷணப்ரக்ரியை. உதரம் க்ருசமாயிருக்கை மஹாபுருஷலக்ஷணம்; அதற்கு வேறொரு ஹேதுவை உல்லேகிப்பது கவிபுத்தி சமத்காரம். ப்ரளயகாலத்தில் உள்ளடங்கின அண்டங்களைத் திருவுள்ளம்பற்றி "ஜகதண்டமண்டலீ" என்பட்டது. இங்கு விபோ: என்றது ஸாபிப்ராயம்; பெருவயிற்றாளன் என்று குறிப்பித்தபடி.

Srivatsam

இனி உத்தரார்த்தம் அமைந்த அழகை என் சொல்வோம்!; அவாப்த ஸமஸ்தகாமனென்று புகழ்பெற்ற எம்பெருமானுக்கு ஒரு அத்ருப்தி உண்டாயிற்றென்றால் அதனைப்போக்க வல்லாரார்? அந்தோ! ஒருவரும் போக்கவல்லாரில்லையே! என்று பார்த்துத் திருநாபிக் கமலமானது 'எம்பெருமானுக்குப் பரிபூர்ண த்ருப்தியை நாம் உண்டாக்கி அத்ருப்தியை அகற்றுவோம்: என்று முற்படுகின்றதென்கிறார்.

[ரிரக்ஷிஷேத்யாதி.] எம்பெருமானுடைய அத்ருப்தியாவது— 'ரக்ஷணத்திலே போரப் பாரிப்புடைய நமக்கு ரக்ஷ்யவர்க்கம் போரவில்லையே!' என்கிற அத்ருப்தியேயிதே: மேன்மேலும் மிகுதியாக ரக்ஷ[illegible] கிடைத்துவிட்டால் இந்த அத்ருப்தி தணிந்தொழியுமே; ஆகவே, நாபிக்கமலமானது மேன்மேலும் [illegible]ப் பெருக்கப்படைத்துத்தந்து அந்த அத்ருப்தியை அகற்றப் பாரிக்கின்றது போலுமென்றதாயிற்று. மேல் உத்தரசதகத்திலே "**नाभीपद्मञ्च मानस्समसिव भुवनग्राममन्यं सिसृक्षुस्त्वस्थौ**" (67.) என்ற ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். நாபீபத்ம மிருக்குமிருப்பைப் பார்த்தால் இன்னமும் ஜகத்ஸ்ருஷ்டிபண்ணுகைக்கு ஸஜ்ஜமாயிருப்பது போலே இளமையும் செவ்வியும் மாறாதே நித்யயௌவநம் பூண்டிருக்கும்படியைச் சொன்னவாறு. **रक्षितुमिच्छा-रिरक्षिषा ॥** (114)

**त्रिविधचिदचिद्वृन्दं तुन्दावलम्बि वलित्रयं विगणयदिवैश्वर्यं व्याख्याति रङ्गमहेशितुः।**
**प्रणतवशतां ब्रूते दामोदरत्वकरः किणः तदुभयगुणाकृष्टं पद्मं किलोदरबन्धनम् ॥ ११५॥**

த்ரிவிதசிதசித்ப்ருந்தம் துந்தாவலம்பி வலித்ரயம்
விகணயதிவைச்வர்யம் வ்யாக்யாதி ரங்கமஹேசிது:
ப்ரணதவசதாம் ப்ரூதே தாமோதரத்வகர: கிண:
ததுபயகுணாக்ருஷ்டம் பத்மம் கிலோதரபந்தனம். (115)

http://acharya.org

ரங்கமஹேஹிது: — பெரிய பெருமாளுடைய
உதர அவலம்பி — திருவயிற்றைப் பற்றியிருக்கிற
வலித்ரயம் — த்ரிவலியானது
த்ரிவித சித் அசித் ப்ருந்தம் — மூவகைப்பட்ட சேதநா சேதந ஸமூஹத்தை
விகணயத் இவ — எண்ணுகின்றது போன்று
ஐச்வர்யம் — (ஸகல சேதநாசேதந நியாமகத்வமாகிற) ஐச்வர்யத்தை
வ்யாக்யாதி — வியாக்கியானம் பண்ணுகிறது;
தாமோதரத்வகர: கிண: — தாமோதரனென்னும் திருநாமத்துக்கு அடியான தாம்புத் தழும்பானது
ப்ரணத வசதாம் ப்ரூதே — ஆச்ரிதபாரதீந னென்பதைச் சொல்லாநின்றது;
உதரபந்தநம் — உதரபந்தன மென்கிற ஆபரண விசேஷமானது
தத்உபயகுண ஆக்ருஷ்டம் பட்டம் இவ — மேற்சொன்ன பரத்வ ஸௌலப்ய குணங்களிரண்டுக்குமாகக் கட்டின பட்டம் போலும்.

* * * — திருவயிற்றின் மேலுள்ள த்ரிவலிகளை அநுபவித்துப் பேசுகிறார். ஸௌந்தர்யலாவண்ய நிலயரான பெரியபெருமாளுக்கும் உத்தம புருஷலக்ஷணமான வலித்ரயம் இருக்கக்குறையில்லையிறே. வலித்ரயமாவது மூன்று மடிப்புகள். அவை திருவயிற்றை மூன்று வகுப்பாகப் பிரித்துக்காட்டுவன போன்றிருக்கும். இந்த மூன்று மடிப்புகளும் எம்பெருமானுடைய மூன்று ஐச்வர்யங்களைக் கணக்கிட்டு காட்டுவது போலுமென்கிறார். அவைதாம் எவையென்னில், [த்ரிவிதசிதசித்ப்ருந்தம்] எம்பெருமானுக்கு ஐச்வர்யமாவது ஸகல சேதநாசேதநங்களுக்கும் நியாமகனாயிருக்கையிறே. அந்த சேதநாசேதநங்கள் மூவகைப்பட்டிருக்கும்; நித்யர்களென்றும் முக்தர்களென்றும் பத்தர்களென்றும் சேதநராசிகளின் வகை மூன்று; மிச்ரஸத்வம், ஸத்வசூந்யம், சுத்தஸத்வம் என்று அசேதநவகையும் மூன்று; ஆகவிப்படி மூவகையான சேதநாசேதநராசிகளாகிற ஐச்வர்யத்தை மூன்று வகுப்பாக வகுத்துக்காட்டுவனபோலும் த்ரிவலிகள்.

இப்படி ஸர்வைச்வரியமாகிற பரத்வத்தை வியாக்கியானித்துக் காட்டவல்ல ரேகைகள் இருக்குமிடத்திலேயே ஆச்ரித பாரதந்திரியத்தை வியாக்கியானித்துக் காட்டவல்ல மற்றொரு ரேகையுமுள்ளதென்கிறார் மூன்றாம் பாதத்தாலே. குழந்தைப் பருவமுள்ள கண்ணபிரான், துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஓருரலிலே பிணித்துவிடுவது வழக்கம். கண்ணன் அவ்வுரலையும் இழுத்துக்கொண்டு அங்குமிங்கும் தவழ்ந்து செல்வதும் வழக்கம்; இப்படியாலே திருவயிறு தழும்பேறிக்கிடக்கிறது; இத்தழும்புதான் இங்கே 'கிண:' என்னப்படுகிறது. [தாமோதரத்வகா:] ஸஹஸ்ரநாமத்தில்—"ஹேதுர் தாமோதரஸ் ஸஹ:" என்றவிடத்தில் பாஷ்யத்தில் தாமோதர நாமத்திற்கு மூவகைப்பொருள்களருளிச்செய்துள்ளார் இவ்வாசிரியர் தாமே. "ததஸ் ஸ தாமோதரதாம் ப்ரயயௌ தாமபந்தநாத்—இதி வா" (வி. பு 5-6-20) என்று அங்கு முடிவாக அருளிச்செய்த அர்த்தத்தைத் திருவுள்ளம் பற்றுகிறாரிங்கு. '(யசோதை கட்டின) தாம்பைத் திருவயிற்றிலேஉடையவன்' என்னும் வ்யுத்பத்தி இங்குக்கொள்ளப்பட்டது. தாமோதரனென்னுந் திருநாமத்திற்கு மூலமான* தாம்பே கொண்டார்த்த தழும்பானது 'ஆச்ரிதபரவசன் இவன் என்னுமிடத்தைத் தெரிவிக்கின்றதென்று' தாயிற்று.

[கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்.] கண்ணபிரான் வெண்ணெய் முதலியவற்றைக் களவுசெய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகின்றாளென்று வீட்டிலுள்ள கயிறுகளையெல்லாம் துண்டு துண்டாக அறுத்துவைத்திட்டுப் பின்பு தான் வெண்ணெய் களவு செய்யப் புகுவன்: யசோதை இவனை ஒரு கையிலே பிடித்துக்கொண்டு கயிறு தேடுமளவிலே துண்டு துண்டாகக் கிடைக்கும் கயிறுகளை ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறு வடிவமாக்கி அதுகொண்டு கண்ணனைக் கட்டுவள்; கட்டும்போது தன்னுடம்புக்கு எட்டம் போராதபடி மிகச்சிறிதான அத்தாம்பினால் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய நீர்மையை வெளியிடுதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டிருக்கை முதலிய இவ்வகைகளாலேயே அக்குணங்களை விளங்கச் செய்துகொள்ளவேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்கும் போரமாட்டாத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக்கொண்டானிறே. 'கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ட' என்னாதே 'கட்டுண்ணப்பண்ணிய' என்றதன் உட்கருத்து இதுவிறே. தேசிகனும் யாதவாப்யுதயத்தில் (4—34.) **'ஆநீதமக்ரே......ஸங்கோச சக்த்யா ஸ பபூவ பத்யா:'** என்ற ச்லோகாந்தத்தினால் இவ்வர்த்த விசேஷத்தை வெளியிட்டருளினார்.

இனி நான்காமடியால் திருவுதர பந்தனப் பட்டையத்தை யநுபவிக்கப் புகுகிறார் [**தநுபயகுணாக்ருஷ்டம் பட்டம்கில உதரபந்தநம்**] உலகத்தில் பட்டங்கட்டுவது விஜயோத்கர்ஷத்தை விளங்கச் செய்வதற்கிறே; பெரிய பெருமாள் திருவயிற்றிலணிந்துள்ள பட்டாகாரமான உதரபந்தனமானது கீழ்ச்சொன்ன பரத்வ ஸௌலப்யங்களாகிற குணத்வயத்துக்கும் பட்டங்கட்டினதுபோலுமென்கிறார். 'மேன்மையும் நீர்மையையும் கொண்டிருக்கையாகிற ஸாம்ராஜ்யம் இத்திருவயிற்றுக்கே உள்ளது' என்று பட்டங்கட்டினபடி.

**தநுபயகுணாக்ருஷ்டம்**=(ஸம்ஸ்க்ருதத்தில்) குணமென்று கயிற்றுக்கும் பெயர்; அவ்வர்த்தமும் இங்கே விவக்ஷிதம்; ஒன்றைக்கட்டவேணுமானால் கயிற்றினாலேற கட்டவேணும்; ஒரு கயிற்றுக்குமேல் இரண்டு கயிறுகளுமுண்டானால் பின்னையும் இழுத்துக்கட்டலாமிறே; பரத்வஸௌலப்ய குணங்களாகிற இரண்டு கயிறுகளினாலும் இழுத்துக்கட்டப்பட்ட பட்டமாம் உதரபந்தனம். அமலனாதிபிரானில் நான்காம் பாட்டின் வியாக்கியானத்தில் இந்த ச்லோகத்தை உதாஹரித்தவிடத்து "தநுபய குணாக்ருஷ்டம்" என்று பாடங்காண்கிறது. (115)

**त्रयो देवास्तुल्यास्त्रितयमिदमद्वैतमधिकं त्रिकादस्मात्तत्त्वं परमिति वितर्कान् विघटयन् ।**
**विभोर्नाभीपद्मो विधिशिवनिदानं भगवतस्तदन्यद्भ्रूभङ्गीपरवदिति सिद्धान्तयति नः ॥ ११६ ॥**

த்ரயோ தேவாஸ் துல்யாஸ் த்ரிதயமிதமத்வைதமதிகம்
த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்,
விபோர் நாபீபத்மோ விதிசிவநிதாநம் பகவத:
ததந்யத் ப்ரூபங்கீபரவதிதி ஸித்தாந்தயதி ந:. (116)

த்ரய: தேவா: துல்யா: — 'மும்மூர்த்திகளும் ஸமப்ரதாநர்' (என்றும்)
இதம் த்ரிதயம் அத்வைதம் — 'இம்மூன்று மூர்த்திகளும் ஒன்றே' (என்றும்)
அஸ்மாத் த்ரிகாத் அதிகம் தத்வம் பரம் — 'இந்த மூர்த்தி த்ரயத்திற் காட்டிலும் மேற்பட்டதான துரீயப்ரஹ்மமே பரமானது,
இதி — என்றும் உண்டாகிற
விதர்க்காந் — விப்ரதிபத்திகளை
விகடயந் — போக்கடிப்பதாய்
விதி சிவ நிதாநம் — ப்ரஹ்மருத்ரர்களுக்கு மூலக்கிழங்காயிருக்கிற
பகவத: விபோ: நாபீபத்ம: — பெரிய பெருமாளது திருநாபிக் கமலமானது
தத் அந்யத் — 'அந்த பகவானை யொழிந்த பொருளெல்லாம்
ப்ரு பங்கே பரவத் இதி — (அவனுடைய) புருவ நெறிப்புக்கு வசப்பட்டிருப்பது' என்று
ந: — நமக்கு
ஸித்தாந்தயதி — முடிவு காட்டித் தருகின்றது.

• • •—பெரிய பெருமாளுடைய திருநாபிக்கமலமானது அவருடைய பரத்வத்தையும் ப்ரஹ்மருத்ராதிகளின் அவரத்வத்தையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தருகின்றதென்கிறார். பெரிய திருவந்தாதியில் (72) "முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர். முதல்வா!-நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே புகரிலகு தாமரையின்பூ" என்ற பாசுரத்தையே பெரும்பாலும் அடியொற்றியருளிச்செய்வதாம் இந்தச்லோகம்.

Srivatsam

[த்ரயோ தேவாஸ் துல்யா:] அரி அயன் அரனென்னும் மூன்று தெய்வங்களும் ஏற்றத்தாழ்வின்றியே ஒரு நிகரான பெருமையை யுடையனவாயிருக்கும் என்பது சிலருடைய கொள்கை. [த்ரிதயமிதம் அத்வைதம்] இம்மூன்று தெய்வங்களும் வெவ்வேறல்ல, ஒன்றேயாம் என்பது சிலருடைய கொள்கை. கீழே *த்ரயோ தேவாஸ் துல்யா:* என்றது த்ரிமூர்த்தி ஸாம்யவாதம்; இங்கு *த்ரிதயமிதமத்வைதம்* என்பது த்ரிமூர்த்தி ஐக்யவாதம். வஸ்துக்களுக்குள்ள பரஸ்பரபேதத்தை ஒப்புக்கொண்டு அவற்றுக்கு ஏற்றத்தாழ்வுகளில்லாமை சொல்லுவது ஸாம்யவாதமெனப்படும். வஸ்துக்களுக்கு பேதத்தையே ஒப்புக் கொள்ளாமை ஐக்யவாதமெனப்படும். (கீழ் உதாஹரித்த பெரிய திருவந்தாதிப் பாசுரத்தில் இந்த ஐக்யவாதமதம் எடுத்துரைக்கப்படவில்லையாகிலும் அதனை நிரஸிப்பதும் ஆழ்வார்க்குத் திருவுள்ளமேயென்றுணர்ந்த இவ்வாசிரியர் அதனையும் எடுத்துக் கூறுகின்றாரென்க.

[அதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரம்] இம்மூன்று மூர்த்திகளுக்கும் பரத்வமில்லை; இவற்றிற் காட்டிலும் மேற்பட்டதான துரீய ப்ரஹ்மமே பரதத்துவமென்று உத்தீர்ணவாதம் பண்ணுவர் சிலர். (சதுர்த்தநிலையே தத்துவம் என்பர்.)

[இதி விதர்க்காந் விகடயந் விபோர் நாபீபத்ம: இத்யாதி.] இப்படிப்பட்ட விப்ரதிபத்திகளை யெல்லாம் அடியறுக்கின்றதாம் திருநாபிக்கமலம்; எங்ஙனே யெனனில்; இதுதான் பரஹ்மருத்ரர்களுக்கும் முதற்கிழங்காயிறே யிருப்பது; அப்படியிருக்கையாலே [ததந்யத் ப்ருபங்கேபரவத் இதி நஸ் ஸித்தாந்தயதி] 'எம்பெருமானைத் தவிர்த்து மற்ற உலகமெல்லாம் அவனுடைய புருவநெறிப்புக்குப் பரவசப்பட்டது' என்கிற ஸித்தாந்தத்தை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது. ப்ரஹ்மருத்ரர்களுக்குப் பரத்வமுண்டென்று பூர்வபக்ஷித்து, அவர்களுக்குப் பரத்வமில்லை, பரவத்த்வமே யுள்ளதென்று

http://acharya.org

தலைக்கட்டின அழகைக் காண்மின். பரவத்—பாதந்த்ரம் என்றபடி. நாபிக்கமலத்தி னின்றும் பிரமன் தோன்றினன்: அவனிடத்தினின்று சிவன் முதலானோர் தோன்றினர்; ஆகவே ஸ்ருஷ்டிக்குக் கர்பீபூதரெல்லாரும் ஸ்ருஷ்டிகர்த்தாவுக்குப் பரவசப்பட்டவர்க ளென்பது தெளிபொருளாம். பரதத்வம் நிர்ணயம் பண்ணின மஹர்ஷிகளும் ஆழ் வார்களும் ஆசார்யர்களுமெல்லா மொருபுறமிருக்கட்டும்; மத்யஸ்தமான இந்த நாபியே ப்ரபலமான ப்ரத்யக்ஷப்ரமாணத்திறைல் நமக்குப் பரத்வஸித்தாந்தம் காட்டுகின்றது பாரீர் என்றாராயிற்று. (116)

गर्भे कृत्वा गोप्तुमनन्तं जगदन्तर्मज्जद्भ्रम्या वाञ्छति साम्यं ननु नाभिः ।
उत्क्षिप्यैतत्प्रेक्षितुमुद्यद्भ्रमिभूयं नाभीपद्मो रंहति रङ्गायतनाब्धेः ॥ ११७॥

கர்ப்பே க்ருத்வா கோப்துமநந்தம் ஜகதந்த:
மஜ்ஜத்ப்ரம்யா வாஞ்சதி ஸாம்யம் நநு நாபி:,
உத்க்ஷிப்யைதத் ப்ரேக்ஷிதுமுத்யத்ப்ரமிபூயம்
நாபீபத்மோ ரம்ஹதி ரங்காயதநாப்தே:. (117)

| | | | |
|---|---|---|---|
| ரங்க ஆயதந அப்தே: | கடல்போன்ற பெரிய பெருமானுடைய | வாஞ்சதி நநு | - விரும்புகின்றது போலும்; |
| நாபி: | — திருநாபியானது | நாபீபத்ம: | - நாபிக்கமலமோ வென்றால் |
| அநந்தம் | — அளவிறந்த | ஏதத் | (உள்ளடக்கி யிருந்த) இந்த ஜகத்தை |
| ஜகத் | - உலகத்தை | உத்க்ஷிப்ய | - உயரக் கிளப்பி |
| கர்ப்பே க்ருத்வா | - உள்ளடக்கி | ப்ரேக்ஷிதும் | - பார்ப்பதற்காக |
| கோப்தும் | - ரக்ஷிப்பதற்காக | உத்யத்- | - மேல்முகமாகக் கிளர்கின்ற |
| அந்த: | - உள்ளே | ப்ரமி பூயம் | - சுழியாயிருக்கும் நிலைமையை |
| மஜ்ஜத் ப்ரம்யா | - முழுகுகின்ற சுழியோடே | ரம்ஹதி | - அடைகின்றது போலும். |
| ஸாம்யம் | - ஒப்பை | | |

* * *—திருநாபியையும் திருநாபிக்கமலத்தையும் சேர்த்து அநுபவிக்கிறாரிதில். திருநாபியோ மண்டலாகாரமாய் ஆழ்ந்திருக்கின்றது; திருநாபிக்கமலமோ அப்படியே மண்டலாகாரமாய் மேலோங்கியிருக்கின்றது; இவ்விரண்டின் நிலைமைகளுக்கும் இணங்க உத்ப்ரேக்ஷித்துப் பேசுகிறார். திருநாபிவிஷயமான உத்ப்ரேக்ஷை பூர்வார்த்தத்தில்; நாபி கமல விஷயமான உத்ப்ரேக்ஷை உத்தரார்த்தத்தில்.

[கர்ப்பே க்ருத்வா இத்யாதி.] பிரளயப் பெருவெள்ளம் பெருகுங் காலத்தில் உலகமெல்லாம் அந்தப் பெருவெள்ளத்திலழிந்து போகாமல் எம்பெருமான் அவற்றைத்தனது திருவயிற்றிலடக்கி வைத்துப் பாதுகாத்தருளிப் பிறகு பிரளயங்கழிந்தவாறே வெளியிட்டருளுகிறானென்பது நூற்கொள்கை. இவ்விஷயம் பெரிய திருமொழியில் பதினோராம்பத்தில் "மைந்நின்ற கருங்கடல் வாயுலகின்றி" என்ற திருமொழியில் பாசுரந்தோறும் பாராட்டி விரித்துரைக்கப்பட்டுள்ளது. ஙிழ்க.

பெரிய பெருமானாகிற அமுதக்கடலினுள்ளே இவ்வுலகமெல்லாம் அடக்கப் பட்டு இவற்றை நன்கு பாதுகாப்பதற்காக இவற்றோடு கூடவே சுழியும் உள்ளே புகுந்

தது; அதுதானே திருநாபியென்னலாம்படி யிருக்கின்றதென்கை. இதன் கருத்து என்னென்னில்; திருநாபியானது சுழித்திருக்கையும் ஆழ்ந்திருக்கையும் சொல்லப் பட்டதாம். பெரியபெருமாளாகிற கடலில் ஏற்பட்ட சுழியாம் திருநாபி. அது ஆழ்ந் திருப்பதற்கு ஹேதுவான்லேகம் இங்குள்ளது. கடலில் பெரிய சரக்குகள் உட்புகுந்தால் அங்குச் சுழித்தல் உண்டாகும்; அந்தச் சுழியானது அந்தச் சரக்குகளை வெளிக்கிளம்ப வொட்டாமல் அமுக்கி ரக்ஷிக்குமதாயுமிருக்கும். இங்குப் பெரிய பெருமாளாகிற கடலி னுள்ளே உலகங்களாகிற சரக்குகள் உட்புகும்போது திருநாபியென்கிற சுழி ஏற்பட் டது; அந்தச் சரக்குகளைப் பாதுகாப்பதற்காகவே இந்தச் சுழியும் ஆழ்ந்திருக்கின்றது போலும் என்றவாறு.

[உத்க்ஷிப்யைதத் இத்யாதி.] உள்ளே அமிழ்ந்த சுழிதானே மேலோங்கிக்கிடக் கின்றதோ! என்னலாம்படி யிருக்கின்றதாம் நாபிக்கமலம்; அது மேலேகிளம்புவா னென்னென்னில்; உள்ளே அமிழ்ந்த உலகங்களை உயரத்தூக்கிப் பார்ப்பதற்காக வென்கிறார்.

(117)

मदमिव मधुकैटभस्य रम्भाकरभकरीन्द्रकराभिरूप्यदर्पम् ।
स्फुटमिव परिभूय गर्वगुर्वोः किमुपमिमीमहि रङ्गकुञ्जरोर्वोः ॥ ११८ ॥

மதமிவ மதுகைடபஸ்ய ரம்பாகரபகரீந்த்ர கராபிரூப்ய தர்ப்பம்:
ஸ்புடமிவ பரிபூய கர்வகுர்வோ: கிமுபமிமீமஹி ரங்ககுஞ்ஜரோர்வோ:. (118)

| | | | |
|---|---|---|---|
| மது கைடபஸ்ய | — மதுகைடபர்களினுடைய | பரிபூய | — அடக்கி |
| மதம் இவ | கொழுப்பை யடக்கினது போல | கர்வ குர்வோ: | அந்த மேனுணிப்புத்தோற்றப் பருத்து விளங்குகின்ற |
| ரம்பாகரபகரீந்த்ர கர ஆபிரூப்ய தர்ப்பம் | வாழைத்தண்டு, காபப்ர தேசம், யானைத் துதிக்கை ஆகிய இவற்றின் அழகு செருக்கையும் | ரங்க குஞ்ஜர ஊர்வோ: | பெரிய பெருமானது திருத் துடைகட்கு |
| | | கிம் | — எந்த வஸ்துவை |
| | | உபமிமீமஹி | — உவமை சொல்லக் கடவோம்! |

*.*—பெரியபெருமாளுடைய திருத்துடைகளுக்கு ஒரு உபமானமும் நேர்நிற்க மாட்டாதே; எந்த வஸ்துவை உபமானமாகக் கூறியநுபவிப்போமென்று தடுமாறுகிறார். வாழைத்தண்டு, யானைத்துதிக்கை முதலிய சில வஸ்துக்களை ஸாமாந்யமாகச் சில கவிகள் தொடைகளுக்கு உபமானமாக வர்ணிப்பதுண்டாகிலும் பெரிய பெருமாளுடைய திருத்தொடைகளுக்கு அவை உபமானமாக ப்ராப்தங்களல்ல என்னுமிடத்தை முதற் பாதத்தால் தோற்றுவிக்கிறார். [மதமிவ மதுகைடபஸ்ய] ஆதிஸ்ருஷ்டிகாலத்தில் தோன்றினவர்களாய் மஹாபலிஷ்டர்களான மதுகைடபர்களென்றும் அசுரர்களிருவ ரும் முன்னொருகாலத்தில் நான்முகனிடத்திலிருந்து வேதங்களைக் கொள்ளைகொண்டு கடலில் மூழ்கி மறைந்துவிட, ஞானவொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமை பற்றி உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, பிரமன் முதலானோரை வரும் கண்கெட்டவர்போல யாதொன்றும் செய்யவறியாமல் திகைத்து வருந்துவது கண்டு எம்பெருமான் திருவுள்ளமிரங்கிக் கடலினுட்புகுந்து அவ்வஸுரர்களைத்தேடிக் கண்டுபிடிக்க, அவர்களும் செருக்கி எம்பெருமானை யெதிர்த்துப் பெரும்போர்புரிய, எம்பெருமான் இவர்களைத் துடையாலிறுக்கிக் கொன்றருளினனென்று ப்ரஸித்தமிறே.

Srivatsam

http://acharya.org

பண்டொரு ஸமயவிசேஷத்திலே அவ்வஸுரர்கள் பெற்றிருந்த வரம் பழுதாகாமைக்காகவாயிற்றுத் துடையிடையிலிறுக்கி முடித்தது. ஆழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் திருமாலிருஞ்சோலையழகருடைய திருத்தொடைகளுக்கு விசேஷண மிடும்போது "பிஷ்டதுஷ்டமது கைடப கீடௌ" என்றிட்டது காண்க. அதனையே அடியொற்றி அவர் திருக்குமாரரான இவ்வாசிரியரும் பேசுகிறார். மதுகைடபர்களுடைய செருக்கையடக்கினது போலவே கதலீகாண்ட ப்ரப்ருதிகளின் செருக்கையும் அடக்கியிருக்கின்ற பெரியபெருமாள் திருத்துடைகளுக்கு ஒன்றும் உபமாநமாக நேர்கில்லா என்கிறார்.

மதுகைடபயோ: என்று த்விவசநாந்தமாக இருக்கவேண்டாவோ வென்னில்; "**सर्वो द्वन्द्वो विभाषयैकवद्भवति**" என்பது வையாகரண பரிபாஷையாதலால் ஏகவசநாந்தமாகவே யிருக்கவுங் குறையில்லையென்க.

[**करभ**] கரபமாவது—"**करबन्धादाकनिष्ठं करस्य करभो बहिः**" என்ற அமரகோசத்தின்படி மணிக்கட்டு முதல் சுண்டுவிரலளவு முள்ள கரபஹி:ப்ரதேசம்; இதுவும் வாழைத்தண்டு, துதிக்கை முதலானவைபோல அடிபருத்து நுனி சிறுத்திருக்கையாலே தொடைக்கு த்ருஷ்டாந்தமாக வருணிக்கப்படுவதுண்டு; மதுகைடபர்களுடைய மதத்தை மாய்த்தது போலவே கரபகரீந்த்ரகராபிரூப்யதர்ப்பத்தையும் மாய்த்து அதனாலுண்டான மேன்மையினால் சிறந்து விளங்குகின்றனவாம் பெரியபெருமாளது திருத்தொடைகள்; இவற்றுக்கு ஸர்வதா ஸத்ருசமாகச் சொல்லக்கூடிய வஸ்து ஒன்று மில்லாமையாலே, உபமாநமுகேந அநுபவிக்க ப்ராப்தியில்லையோ! என்செய்வோமென்கிறார். (118)

**कटीकान्तिसंवादिचातुर्यनीवीलसद्रत्नकाञ्चीकलापानुलेपम् ।**
**महाभ्रंलिहन्मेरुमाणिक्यसानूरिवाभाति पीताम्बरं रङ्गबन्धोः ॥११९॥**

கடீகாந்தி ஸம்வாதி சாதுர்ய நீவீ லஸத்ரத்ந காஞ்சீகலாபாநுலேபம்,
மஹாப்ரம்லிஹந்மேருமாணிக்ய ஸாநு: இவாபாதி பீதாம்பரம் ரங்கபந்தோ:. (119)

| | | | |
|---|---|---|---|
| ரங்கபந்தோ: | — பெரிய பெருமாளுடைய | பீதாம்பரம் | — பீதகவாடையானது |
| கடீ காந்தி ஸம்வாதி— | திருவரையின் காந்தியோடு பொருந்தின | மஹாப்ரம் லிஹந் மேரு மாணிக்ய ஸாநு: இவ | பெரிய மேகத்தை உட்கொண்டிருக்கின்ற மேரு மலையின் மாணிக்கத் தாழ்வரை போன்று |
| சாதுர்ய | — சதிரையுடைத்தான | ஆபாதி | — விளங்குகின்றது. |
| நீவீ | — நீவிபந்தனத்தில் | | |
| லஸத் | — விளங்காநின்ற | | |
| ரத்ந காஞ்சீ கலாப அநுலேபம் | ரத்நமயமான மேகலாபரணத்தின் சேர்க்கையை யுடைத்தான | | |

* * *—பெரிய பெருமாளுடைய திருப்பீதாம்பரத்திலே யீடுபடுகிறார். அழகருடைய வடிவழகிலீடுபட்ட நம்மாழ்வார் "படிச் சோதி யாடையொடும் பல்கலனாய், நின்பைம்பொற் கடிச்சோதி கலந்ததுவோ திருமாலே கட்டுரையே" என்றருளிச்செய்த பாசுரத்தைச் சிறிது அடியொற்றியதாம் இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தம்.

Srivatsam

http://acharya.org

* கடியார்பொழி லரங்கத்தம்மா னரைச்சிவந்த ஆடையானது பெரியதொரு காளமேகத்தை உட்கொண்டிராநின்ற யாதொரு மேருமலையின் மாணிக்கத்தாழ்வரை யுண்டோ, அதுபோன்றிருக்கின்றது என்கிருர். பெரியபெருமாளுடைய திருமேனி யானது காளமேகம்; அதைச்சுற்றி விளங்கும் பீதாம்பரமானது—கார்முகிலை உட்கொண்டிருக்கின்ற மேருகிரித்தாழ்வரை. பூர்வார்த்தம் முழுதும் பீதாம்பரத்திற்கு விசேஷணம். கடிகாந்திஸம்வாதியான சாதுர்யத்தை யுடைய யாதொரு நீவியுண்டு, அதிலே விளங்குகின்ற ரத்நமயமான காஞ்சீபூஷணத்தின் வேஷ்டநத்தை யுடைத்தா யிருக்கின்றதாம் பீதாம்பரம். நீவியாவது மேலுத்தரீயக்கட்டு; அதனுடைய சதிர் கடிகாந்தி ஸம்வாதியா யிருக்கையாவது என்னென்னில்; 'நீவீபந்தமென்பது தனியே ஒன்று இல்லை; திருவரையின் ஒளிதான் கிளர்ந்ததாய்க்கொண்டு நீவீபந்தம்போல் ஜ்வலிக்கின்றதென்கை. அதுதன்னிலே மேகலாபரணம் சாத்தி யிருக்கின்றது; ஆக இப்படிப்பட்ட அமைப்பையுடைத்தான பீதாம்பரம் என்கை. ... (119)

भर्मस्थलांशुपरिवेष इवाम्बुराशेस्सन्ध्याम्बुवाहनिकुरम्बमिवाम्बरस्य ।
शम्पाकदम्बकमिवाम्बुमुचो मनो नः पीताम्बरं पिबति रङ्गधुरन्धरस्य ॥ १२० ॥

பர்மஸ்தலாம்சுபரிவேஷ இவாம்புராசேஸ் ஸந்த்யாம்புவாஹநிகுரம்பமிவாம்பரஸ்ய,
சம்பாகதம்பக மிவாம்புமுசோ மநோ ந: பீதாம்பரம் பிபதி ரங்கதுரந்தரஸ்ய. (120)

Srivatsam

| | |
|---|---|
| ரங்க தூர்ந்தரஸ்ய— | பெரிய பெருமாளுடைய |
| பீதாம்பரம் | — திருப்பீதக வாடையானது |
| அம்புராசே: | — ஸமுத்ரத்திற்கு |
| பர்மஸ்தல அம்சு பரிவேஷ: இவ | ஸ்வர்ணமயமான பூமியினுடைய காந்தியின் ஊர்கோள் போலவும் |
| அம்பரஸ்ய | — ஆகாசத்திற்கு |
| ஸந்த்யா அம்பு வாஹ நிகுரம்பம் இவ | ஸந்தியாகாலத்து மேகத்திரள் போலவும் |
| அம்பு முச: | — மேகத்திற்கு |
| சம்பா கதம்பகம் இவ | மின்னல் திரள்போலவும் (இருந்துகொண்டு) |
| ந: | — நம்முடைய |
| மந: | — நெஞ்சை |
| பிபதி | — கவர்கின்றது |

* * *—மீண்டும் பீதாம்பரந் தன்னையே அநுபவிக்கிருர். பெரியபெருமாளுடைய நீலமேனியிலே பீதாம்பரம் திகழ்வதானது ஸமுத்ரத்திலே ஸ்வர்ணமயமானதொரு ஸ்தலவிசேஷத்தின் காந்தியானது பரிவேஷமிட்டாற் போலவும், வானத்திலே ஸந்த்யாகாலத்துச் செக்கர்மாமுகில் ஒளியடித்தாற் போலவும், காளமேகத்திலே மின்னலொளிகலசினாற்போலவும் பரபாகசோபாவஹமாயிருந்துகொண்டு மநோஹரமா யிருக்கின்றதென்கிருர்.

[அம்புராசே: பர்மஸ்தலாம்சு பரிவேஷ இவ] கடல்கள் ஏழுவகைப்பட்டவை யென்றும், அவற்றில் ஏழாவது கடலுக்கு அப்பால் ஸ்வர்ணமயமான பூமியுள்ள தென்றும் நூல்கள் கூறுவதுண்டு; அந்த ஸமுத்ரத்தை இங்குச் சொன்னதாகக் கொள்ளலாம், அன்றியே, கடல் நவரத்தினங்களுக்கும் ஆகரமாகையால், நவரத்னங்களுள் ஒன்ருன ஸ்வர்ணமும் கடலில் உள்ளதாதலால் அந்த ஸ்வர்ணத்தின் காந்தி கலசப் பெற்ற கடலிடம் போலே யிருக்கிறதென்று இங்கு வருணிப்பதாகக் கொள்வாருமுளர்.

http://acharya.org

இந்த ச்லோகத்தில் ஸமுத்ரம் ஆகாசம் காளமேகம் என்ற இம்மூன்றும் பெரிய பெருமாளுடைய ஸ்தாநத்திலும், ஸாவர்ண ஸ்தலகாந்தி அந்திமேகம் மின்னல்திரள் என்ற இம்மூன்றும் பீதாம்பரத்தினுடைய ஸ்தாநத்திலும் கொள்ளப்பட்டது. இப்படிப்பட்ட பீதகவாடையானது நமது நெஞ்சைப் பானம்பண்ணுகின்றது என்றது நெஞ்சைக் கொள்ளைகொள்கின்றதென்றவாறு. அன்றியே, முதல்பாதத்தில் 'பரிவேஷமிவ' என்று பாடமாகில் த்ருஷ்டாந்தங்கள் மூன்றும் த்விதீயாந்தமாய், ஸமுத்ரத்தினுடைய ஸாவர்ணஸ்தல காந்தி பரிவேஷம் போன்றிருப்பதும், காளமேகத்தின் மின்னல்திரள் போன்றிருப்பதுமான பீதாம்பரத்தை நமது நெஞ்சு பூர்ணாநுபவம் பண்ணுகின்றது என்றதாம். முந்தின யோஜனையில் பீதாம்பரம் எழுவாய்; பிந்தின யோஜனையில் மனம் எழுவாய். भर्म—பொன். शम्पा—மின்னல். (120)

वैभुषण्यां कान्तिराङ्गी निमग्ना विष्वद्रीची कापि सोन्मादवृत्तिः ।
जाने जानुद्वन्द्ववार्ताविवर्तो जातः श्रीमद्रङ्गतुङ्गालयस्य ॥१२१॥

வைபூஷண்யாம் காந்திராங்கீ நிமக்நா விஷ்வத்ரீசீ க்வாபி ஸோந்மாதவ்ருத்தி:,
ஜாநே ஜாநுத்வந்த்வ வார்த்தா விவர்த்த: ஜாத: ஸ்ரீமத்ரங்க துங்காலயஸ்ய. (121)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீமத் ரங்க துங்க ஆலயஸ்ய | திருவரங்கமாகிற சிறந்த கோயிலை யுடையரான பெரிய பெருமாளுடைய | க்வாபி | — ஓரிடத்தில் |
| வைபூஷண்யாம் (காந்த்யாம்) | திருவாபரணக் காந்தியில் | ஸோந்மாத வ்ருத்தி: | உந்மாத வியாபாரத் தோடு கூடினதாகி |
| நிமக்நா | — மூழ்கின | ஜாநு த்வந்த்வ வார்த்தா விவர்த்த: | இரண்டு முழந்தாள்களென்கிற சப்தத்தின் பரிணாமமாக |
| ஆங்கீ காந்தி: | — திருமேனி யொளியானது | ஜாத: ஜாநே | — ஆயிற்றுப்போலும் |
| விஷ்வத்ரீசீ | — சுற்றும் வியாபித்ததாய் | | |

* * *—பெரியபெருமாளுடைய திருமுழந்தாள்களை யநுபவிக்கிறார். எம்பெருமானுடைய திருமேனியில் இரண்டுவகையான காந்திவெள்ளம் ப்ரவஹிக்கின்றது; திருவடி திருமார்பு திருமுகம் முதலிய திவ்யாவயவங்களில் நின்றும் ப்ரவஹிக்கின்ற சோபாப்ரவாஹம் ஒன்று; திருவாபரணங்களில் நின்றும் ப்ரவஹிக்கிற சோபாப்ரவாஹம் மற்றொன்று; இவற்றுள் திருவாபரணங்களின் காந்திவெள்ளமானது மீதூர்ந்து பெருகுவதாகையால் அந்த வெள்ளத்திலே திவ்யாவயவ காந்திவெள்ளமானது அமிழ்ந்ததாய்க் கொண்டு புறம்பே பெருகமாட்டாமல் உள்ளுக்குள்ளேயே எங்கும் பரவுகின்றது; அங்ஙனே பரவும்போது பரிமிதமான ஓரிடத்தில் அபரிமிதமான வெள்ளம் பெருக நேர்ந்தால் தன்னில்தான் சுழித்துக்கொண்டு பெருகுமாகையாலே அங்ஙனம் பெருகி நேர்ந்த சுழியே திருமுழந்தாளென்னும்படி யிருக்கின்றது! என்கிறார்.

[ஜா நுத்வந்த்வ வார்த்தா விவர்த்தோ ஜாத: வஸ்துத:] ஜாநுத்வந்த்வமென்பதில்லை. அவயவகாந்திவெள்ளம் ஓரிடத்தில் பரிக்து நிற்கும் நிலைமைக்கே ஜாநு வென்று பெயரிட்டார் போலுமென்கை. [ஜாநே] இது உத்ப்ரேக்ஷாஸூசகம் (121)

श्रीरङ्गराजजङ्घे श्रीभूम्यामर्शहर्षकण्टकिते । तत्केलिनलिनमांसलनालद्वयललितमाचरतः ॥१२२॥

ஸ்ரீரங்கேசய ஜங்கே ஸ்ரீபூம்யாமர்ச ஹர்ஷ கண்டகிதே,
தத்கேளி நளிநமாம்ஸல நாலத்வய லலித மாசாத:. (122)

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ பூமி ஆமர்ச ஹர்ஷ கண்டகிதே | திருமகளும் நிலமகளும் திருவடி வருடும்போதுண்டான ஹர்ஷத்தினால் மயிர்க்கூச் செறியப் பெற்றுள்ள | கேளி நளிந— | லீலார்த்தமான (இரண்டு) தாமரைப் பூக்களினுடைய |
| ஸ்ரீ ~~ரங்கேசய~~ ஜங்கே | பெரிய பெருமாளது திருக்கணைக் கால்கள் | மாம்ஸல | — பெருத்த |
| | | நால த்வய | — இரண்டு காம்புகளின் |
| தத் | — அப்பிராட்டிமாருடைய | லலிதம் | — விலாஸத்தை |
| | | ஆசாத: | — அடைகின்றன. |

* * *—பெரியபெருமாளுடைய திருக்கணைக்கால்களை யநுபவிக்கிறார், "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" என்கிறபடியே திருமகளாலும் நிலமகளாலும் கைவைத்து வருடப்படுகின்ற பெரியபெருமாளுடைய திருக்கணைக்கால்கள் 'அப்பிராட்டிமாருடைய லீலாரவிந்தங்களின் நாளங்களோ இவை' என்னலாம்படி யிருக்கின்றன வென்கிறார். பிராட்டிமாருடைய திருக்கையிலகப்பட்ட திருவடிகள் அவர்களுடைய லீலாரவிந்தங்களென்றும், திருக்கணைக்கால்கள் அத்தாமரைமலர்களின் நாளங்களென்றும் கொள்ளப்பட்டன. நாளங்களாகில் முள் நிரம்பியிருக்குமே, அது இங்குண்டோவென்ன, அதற்குங் குறையில்லையென்கிறார் [ஸ்ரீபூம்யாமர்ச ஹர்ஷ கண்டகிதே] என்று. *செங்கமலத்திருமகளும் புவியும் செம்பொற்றிருவடியிணைவருடும்போது அவர்களது திருக்கைகள் பட்டதனால் மயிர்க்கூச்செறிந்து கண்டகிதமாயிற்றென்கை.

... (122)

वन्दारुवृन्दारकमौलिमालायुञ्जानचेतः कमलाकरेभ्यः ।
संक्रान्तरागाविव पादपद्मौ श्रीरङ्गभर्तुर्मनवै नवै च ॥१२३॥

வந்தாரு ப்ருந்தாரக மௌலிமாலா யுஞ்ஜாநசேத: கமலாகரேப்ய:,
ஸங்க்ராந்தராகாவிவ பாதபத்மௌ ஸ்ரீரங்கபர்த்துர் மநவை நவை ச. (123)

| | | | |
|---|---|---|---|
| வந்தாரு- | — வணங்குகின்ற | ஸங்க்ராந்த ராகௌ இவ (ஸ்திதௌ) | ஊடுருவியிருந்த சிவப்பையுடையன போன்றிருக்கிற |
| ப்ருந்தாரக- | — தேவர்களினுடைய | | |
| மௌலி மாலா- | — கிரீட ஸமூஹமென்ன, | | |
| யுஞ்ஜாந சேத:- | — யோகிகளின் உள்ளமென்ன, | ஸ்ரீரங்க பர்த்து: பாத பத்மௌ | பெரிய பெருமாளது திருவடித் தாமரைகளை |
| கமலா கரேப்ய: | பிராட்டியின் திருக்கைத்தலமென்ன ஆகிய இவற்றினின்றும் | மநவை | — தியானிக்கக் கடவேன்; |
| | | நவை ச | — துதிக்கவுங்கடவேன். |

* * *—பெரியபெருமாளுடைய திருவடிகளை யநுபவிக்கிறார். திருவடிகள் இயற்கையாகவே சிவந்திருந்தாலும் சமத்காராதிசயந் தோற்ற ஹேதூத்ப்ரேக்ஷை பண்ணுகிறார். ராகமென்ற வடசொல் 'சிவப்பு' என்னும் பொருளையும் 'அன்பு' என்னும் பொருளையும் உடையது. ச்லேஷமர்யாதை சொல்லுகிறதாயிற்று இங்கு. வந்து வணங்காநின்ற தேவர்களின் கிரீடஸமூஹங்களில் ரத்நப்ரபைகள் சிவந்திருக்குமாதலால் அந்தச்சிவப்பு திருவடிகளில் வந்தேறிற்றோ?; யோகிகளின் அந்த:கரணத்திலே

Srivatsam
http://acharya.org

இத்திருவடிகள் உறைகின்றவையாதலால் அங்குள்ள ராகம் இவற்றிலே வந்தேறிற்றோ? இவ்விடத்தில் ச்லேஷம்; அநுராகமென்றும் சிவப்பு என்றும் விவக்ஷை. ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "*ஸ்ரீமத்பராங்குச முநீந்த்ர மநோ நிவாஸாத் தஜ்ஜாநுராகரஸ மஜ்ஜநமஞ்ஜஸாப்ய அத்யாப்யநாரத தத்த்திராகயோகம் ஸ்ரீரங்கராஜசரணாம்புஜ முந்நயாம:* என்றருளிச் செய்த ச்லோகத்தை இங்கேத் திருவுள்ளம் பற்றினபடி. வருடுகின்ற திருமகளின் திருக்கைகளிலுள்ள சிவப்புத்தான் இவற்றில் வந்தேறிற்றோ என்றிங்ஙனே உத்ப்ரேக்ஷிக்கலாம்படி மிகச்சிவந்து விளங்குகின்ற பெரியபெருமாளுடைய திருவடித் தாமரைகளைச் சிந்திப்பதும் துதிப்பதும் செய்வேனென்றாயிற்று. யுஞ்ஜாநா:— யோகிகள். ... (123)

यद्वृन्दावनपण्डितं दधिरवैर्यत्ताण्डवं शिक्षितं यल्लक्ष्मीकरसौख्यसाक्षि जलजप्रस्पर्धमानर्द्धि यत् ।
यद्भक्तेष्वजलस्थलजमपि यद्दूत्यप्रसङ्गोत्सुकं तद्विष्णोः परमं पदं वहतु नः श्रीरङ्गिणो मङ्गलम् ॥ १२४॥

யத் ப்ருந்தாவநபண்டிதம் ததிரவைர் யத்தாண்டவம் சிக்ஷிதம்
யல்லக்ஷ்மீகரஸௌக்ய ஸாக்ஷி ஜலஜப்ரஸ்பர்த்தமாநர்த்தி யத்,
யத்பக்தேஷ்வஜலஸ்தலஜ்ஞமபி யத் தூத்யப்ரஸங்கோத்ஸுகம்
தத் விஷ்ணோ: பரமம் பதம் வஹது ந: ஸ்ரீரங்கிணோ மங்களம். (124)

| | |
|---|---|
| ஸ்ரீ ரங்கிண: விஷ்ணோ: | பெரிய பெருமாளுடைய |
| யத் பதம் | — யாதொரு திருவடியானது |
| ப்ருந்தாவந பண்டிதம் | ப்ருந்தாவனத்தில் உலாவிற்றோ; |
| யத் தாண்டவம் | யாதொரு திருவடியின் நர்த்தந விசேஷமானது |
| ததி ரவை: | — தயிர்கடையுமோசைகளினால் |
| சிக்ஷிதம் | — பயில்விக்கப் பட்டதோ; |
| யத் | — யாதொரு திருவடியானது |
| லக்ஷ்மீ கர ஸௌக்ய ஸாக்ஷி | பிராட்டியின் திருக்கைகளுக்கு உண்டாகும் ஸுகத்திற்கு ஸாக்ஷியாயிருக்கின்றதோ, |
| யத் | — யாதொரு திருவடியானது |
| ஜலஜ ப்ரஸ்பர்த்தமாந ருத்தி | தாமரைப் பூவோடு போராடுகின்ற அழகை யுடையதோ, |
| பக்தேஷு | — அடியவர்கள் பக்கல் |
| அஜலஸ்தலஜ்ஞம் | ஏற்றத்தாழ்வு அறியாததோ, |
| யத் | — யாதொரு திருவடியானது |
| தூத்ய ப்ரஸங்க உத்ஸுகம் அபி | தூது செல்லும் வார்த்தையினிலே போதை கொண்டதாயு மிருக்கின்றதோ, |
| தத் | — அப்படிப்பட்ட |
| பரமம் பதம் | — சிறந்த திருவடியானது |
| ந: | — நமக்கு |
| மங்களம் | — க்ஷேமத்தை |
| வஹது | — நிர்வஹிக்கக்கடவது. |

* * *—[யத் ப்ருந்தாவநபண்டிதம்] ஸர்வஜ்ஞனுடைய திருவடியாகையாலே அத்திருவடிதானும் ஜடமன்றிக்கே பாண்டித்யம் பெற்றிருக்கிறது காணும். ப்ருந்தாவந ஸஞ்சாரத்திலே பண்டிதமிறே. ப்ருந்தாவனத்தில் ஸஞ்சாரம் செய்ததென்றவாறு.

[ததிரவை: யத்தாண்டவம் சிக்ஷிதம்] ஒருவரைப் பண்டிதரென்றால் 'இவர் சிக்ஷைபெற்ற இடம் எங்கே?' என்று கேள்வி பிறக்குமிறே: அதற்கு ஸமாதாநம் சொல்லுகிறாப்போலே யிருக்கிறது இந்த வாக்யம். ஆய்ச்சி தயிர்கடையும்போது அதிலோசைக்கிணங்கக் கண்ணபிரான் நாட்டியமாடுவது வழக்கம்; ஆகவே, தயிர்கடையு மோசைகளினால் சிக்ஷை செய்விக்கப்பெற்ற தாண்டவத்தையுடையதென்கை.

Srivatsam
http://acharya.org

ஸ்ரீவேதாந்த தேசிகன் கோபாலவிம்சதியில் (4) "தந்நா நிமந்த ம்ருதங்க முகரேண நிபந்த தாளம் நாதஸ்ய நந்தபவநே நவநீதநாட்யம்" என்றருளிச்செய்தது இங்கு ஸ்மரிக்கத் தகும் "நதிரவை:" என்ற பஹுவசநநிர்த்தேச ஸ்வாரஸ்யத்தால் இத்திருவடி பஹுக்ருதமென்கை. சிக்ஷிதம்—அப்யாசம் செய்விக்கப்பட்ட தென்கை. இத்திருவடி பயின்ற தாண்டவத்திற்கு ஆசார்யன் தயிரோசைபோலும்.

[யத் ஸஜ்ஜாலக்ஷ்மீகர ஸௌக்ய ஸாக்ஷி] விருந்தாவனத்தில் ஸஞ்சரித்ததனாலும் தாண்டவம் பயின்றதனாலும் களைத்த திருவடியின் விடாய்தீரப் பிராட்டி தன் ஸௌகுமார்யமான திருக்கையினால் வருடுவதை அநுஸந்தித்தார் போலும்; "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியிறே. அப்படி பிராட்டி பிடிக்கும்போது அவளது கைகள் படுவதனாலுண்டாகும் இன்பத்தை அநுபவித்த திருவடிகளிறே இவை யெனகிறார். தன்னைப் பிடிப்பதனாலே பிராட்டியின் திருக்கைகளுக்கு ஸௌக்யமளிக்கவல்ல திருவடி என்றும் சிலர் பொருள் கூறுவர்.

[யத் ஜலஜப்ரஸ்பர்த்தமாநர்த்தி] ஸஹஜமான காந்தி, குளிர்ச்சி, பரிமளம், ஸௌகுமார்யம் முதலிய குணங்களில் தாமரைப்பூவை வென்றிருக்கிற திருவடியென்கை. "ஸ்பர்த்தமாந" என்றது சண்டைசெய்கிற என்றபடி. 'ப்ர' என்னும் உபஸர்க்கத்தையும் கூட்டி ப்ரயோகித்ததனால் சண்டைசெய்து வெற்றிபெற்றமையும் விவக்ஷிதமென்னலாம். அந்தோ! இத்திருவடியின் கொடுமையை என்சொல்வோம்!; தாமரையிற் பிறந்த தேவி பிடிக்க ஸௌக்கிய மடைகின்ற தான் அவளுக்குப் பிறப்பிடமான தாமரைப்பூவிலே அன்புபாராட்டவேண்டியிருக்க அது செய்யாதே அத்தோடு சண்டைசெய்கிறதே! என்பது உள்ளுறை.

[யத் பக்தேஷ்வஜலஸ்தலஜ்ஞம்] 'இன்னார் தாழ்ந்தார், இன்னார் உயர்ந்தார்' என்று வாசிபாராதே அனைவர்க்கும் புகலாயிருக்குந் தன்மையைச் சொன்னபடி. பக்தி யென்பது ஒன்று நெஞ்சிலே பிறக்கவேண்டுமத்தனை; அது பிறந்துவிட்டால் மற்றைப்படி ஜந்மவ்ருத்தாதிகளாலுள்ள தாழ்வு அப்ரயோஜகமிறே பகவத் பரிக்ரஹத்திற்கு. "வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன்மகன் அவன்தம்பி ஆனையரவம் மறையாளன் பெற்ற மைந்தனாகிற பதினெட்டு நாடன் பெருங்கூட்டு நடத்து மாப்தனை வழித்துணையாக்கி" என்ற ஆசார்ய ஹ்ருதயஸூக்தியை (ஸூ. 228) இங்கு ஸ்மரிப்பது.

[யத் தூத்யப்ரஸங்கோத்ஸுகமபி.] பட்டர்க்கு ஸ்ரீராமாவதாரத்திலே அளவற்ற பக்ஷபாதமுண்டென்பது ப்ரஸித்தம், சிறியாத்தானென்பவர் பட்டருடைய ரஸோக்திகளைக் கேட்கவிரும்பி ஒருநாள் பட்டர் ஸந்நிதியிலே விடைகொண்டு 'சக்ரவர்த்தி திருமகனார்க்கு எல்லா ஏற்றமுண்டேயாகிலும் ஆச்ரிதர்களுக்காக கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன ஏற்றமில்லையே; அந்த ஏற்றம் கண்ணபிரானுக்கேயன்றோ வுள்ளது;' என்றார். அதை பட்டர் கேட்டருளி 'ஓய்! குணக்கடலாகிய இராமபிரானுக்குத் தூது போதல அநிஷ்டமன்று காணும்; இக்ஷ்வாகு வம்சத்திலே ஸார்வபௌமனைப் பிறந்தானுகையாலே மஹாராஜன் கழுத்திலே ஓலையைக்கட்டித் தூதுபோக விடுவாரைக் கிடையாமையாலே இராமன் தூதுபோகப் பெற்றிலனத்தனை, அந்த அவதாரத்திலே திருவடி [அநுமான்] அங்குமிங்கும் போவது வருவதாய்க்கொண்டு தூதக்ருத்யஞ்

செய்து வார்த்தை சொல்லித்திரிந்த ஏற்றத்தைக்கண்டு 'நாமும் இப்படி ஆச்ரிதர்களுக்காகத் தூதுபோகப்பெற்றிலோமே' என்று திருவுள்ளம் குறைபட்டு அக்குறை தீருகைக்காகவே பின்னை இழிகுலத்திலே வந்து பிறந்து தூதுசென்றான்; க்ஷத்ரியனென்று நினைக்கில் தூதுபோகவிடமாட்டார்களென்று அத்தை மறைத்து வளர்ந்தான் காணும்: அபிஷிக்த க்ஷத்ரியகுலத்திலே பிறந்தால் 'தூதுபோ' என்று ஏவ ஒருவர்க்கும் நா எழாதிறே' என்றருளிச் செய்தாரென்று ப்ரஸித்தம். திருமங்கையாழ்வார் "முன்னோர் தூது வானரத்தின் வாயில்மொழிந்து, அரக்கன் மன்னூர் தன்னை வாளியினால் மாளமுனிந்தவனே, பின்னோர் தூது ஆதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் இன்னார் தூதனென நின்றான்" என்ற பாசுரத்தை யடியொற்றி யருளிச்செய்ததாமிது. இதில் "இன்னார் தூதனெனப்பட்டான்" என்னாமல் இன்னார் தூதனென நின்றான்" என்கையாலே பாண்டவதூதனென்று பேர்பெற்றபின்புதான் எம்பெருமானுக்குத் தரிப்புண்டாயிற்றென்பது விளங்கும்.

இங்கே "தூத்யப்ரஸங்கோத்ஸுகம்" என்று விசேஷணமிடுகிற அழகு வாசாமகோசரம். எம்பெருமான் தனது திருவடியை நோக்கி, 'பாதமே! நீ அமரருடைய சென்னியிலே வீற்றிருக்க விரும்புகிறாயா? அடியவர்கட்காகத் தூதுசெல்லப் புறப்பட விரும்புகிறாயா? என்றால் தூது செல்வதையே பெரும்பேறாக நினைத்து அது தன்னிலே சாலவும் காதல் கிளர்ந்திருக்குமாம். தூது போவதென்கிற வார்த்தை யுண்டாகுமளவிலேயே குளலைக் கூத்தடிக்குமாம் தூது செல்ல அவஸரங்கிடைப்பதெப்போதோ வென்று எதிர்பார்த்திருக்குமாம்.

[தத் விஷ்ணோ: ஸ்ரீரங்கிண: பரமம் பதம் ந: மங்களம் வஹது] இப்படிப்பட்ட பெரிய பெருமாளது சிறந்த திருவடியானது "யோகக்ஷேமம் வஹாம்யஹம்" என்று வாயாலே செய்து கொடுத்த ப்ரதிஜ்ஞையை நம் திறத்திலே நிர்வஹிக்கவேணுமென்கிறார். ... ... ... ... ... (124)

शिञ्जानश्रुतिशिञ्जिनीमणिरवैर्वज्रारविन्दध्वजच्छत्रीकल्पकशङ्खचक्रमुकुरैस्तैस्तैश्च रेखामयैः।
ऐश्वर्येण जयं त्रिविक्रममुखं घुष्यद्भिराम्रेडितं श्रीरङ्गेशयपादपङ्कजयुगं वन्दामहे सुन्दरम् ॥१२५॥

சிஞ்ஜாநச்ருதிசிஞ்ஜிநீமணிரவைர் வஜ்ராரவிந்தத்வஜச்
சத்ரீகல்பகசங்கசக்ரமுகுரைஸ் தைஸ் தைச்ச ரேகாமயை:
ஐச்வர்யேண ஜயம் த்ரிவிக்ரமமுகம் குஷ்யத்பிராம்ரேடிதம்
ஸ்ரீரங்கேசயபாதபங்கஜயுகம் வந்தாமஹே ஸுந்தரம். (125)

| | | | |
|---|---|---|---|
| ஐச்வர்யேண ஸஹ | ஸர்வேச்வரத்வத்தோடு கூட | ரேகாமயை: | — ரேகைவடிவமான |
| த்ரிவிக்ரமமுகம் ஜயம் | மூவடியிட்டளந்தது முதலான விஜயசேஷ்டிதங்களை | தை: தை: | — அப்படிப்பட்ட |
| ஆம்ரேடிதம் (யதாததா) | பலகாலும் | வஜ்ர- | — வஜ்ரமென்ன |
| குஷ்யத்பி: | — ப்ரஸித்தப்படுத்துகிற | அரவிந்த- | — தாமரையென்ன |
| சிஞ்ஜாநச்ருதி சிஞ்ஜிநீமணிரவை: | ஒலிக்கின்ற வேதரூபியான திருவடிச் சதங்கை மணிகளின் ஓசைகளாலும், | த்வஜ- | — கொடியென்ன |
| | | சத்ரீ- | — குடையென்ன |
| | | கல்பக- | - கல்பவ்ருக்ஷமென்ன |
| | | சங்க- | - சங்கமென்ன |
| | | சக்ர- | - சக்ரமென்ன |

முகுரை: { கண்ணுடியென்ன ஆகிய இவற்றாலும்
லாஞ்சநம் — அழகியதான

ஸ்ரீரங்கேசய பாத பங்கஜயுகம் { பெரிய பெருமாளுடைய திருவடித் தாமரையிணையை
வந்தாமஹே - வணங்குகிறோம்.

* * *—மீண்டும் பெரியபெருமாளுடைய திருவடித் தாமரைகளை வணங்குவோமென்கிறார். திருவடிகளுக்குத் திருவாபரணமாகச் சதங்கைகள் சாத்தப்பட்டிருக்கின்றன; அவற்றிலுள்ள கிண்கிணிகள் ஒலிப்பதனாலும், வஜ்ரரேகை அரவிந்தரேகை முதலிய ரேகைகள் திகழ்வதனாலும், திருவடிகள் பரமஸுந்தரமா யிருக்கின்றன வென்கிறார்.

[சிஞ்ஜாநச்ருதி சிஞ்ஜிநீமணிரவை:] வேதங்களினுடைய த்வநிகளே நூபுரங்களின் த்வநிகளாகப் பரிணமித்தனவென்று திருவுள்ளம் பற்றுகிறார். "मौर्वी ज्या शिञ्जिनी गुण:" என்ற அமரகோசத்தின்படி 'சிஞ்ஜிநீ' என்னும் சப்தம் வில்நாணியைச் சொல்லுவதாயினும் மற்றும் பல கோசங்களினால் ஸித்தமான நூபுர மென்னும் பொருளில் இங்கே ப்ரயுக்தமென்றுணர்க. 'சிஞ்ஜாந' என்பதற்கு—'ஒலிக்கின்ற' என்று பொருள். 'शिजि अव्यक्ते शब्दे' என்ற தாதுவில் शिङ्क्ते என்று லட்ரூபம் நிஷ்பந்நமாகி அதிலிருந்து உண்டான ரூபம் [சிஞ்ஜாந] என்பது - 'ऐश्वर्येण (सह) त्रिविक्रममुखं जयम् आम्रेडितं (यथा तथा) घुष्यद्भिः शिञ्जानश्रुतिशिञ्जिनीमणिरवैः' என்று அந்வயிப்பது. எம்பெருமானுடைய ஐச்வர்யத்தையும் உலகளந்தது முதலான வெற்றியையும் பலகாலும் கோஷிக்கின்ற 'त्रीणि पदा विचक्रमे' 'यः पार्थिवानि विममे रजांसि' இத்யாதி வேதவாக்குக்களே நூபுரங்களாகப் பரிணமித்துத் திருவடிகளிலே வந்து சேர்ந்து ஒலிக்கின்றன வென்றபடி. மேல் உத்தர சதகத்தில் த்ரிவிக்ரமாபதாநத்தை அநுபவித்தருளிச்செய்யும் ச்லோகத்தில் * रङ्गेन्द्रवृत्ते तव जयमुखरो डिण्डिमस्तत्र वेदः * என்றது இங்கே அநுஸந்தேயம்.

शङ्खरथाङ्गकल्पक ध्वजारविन्दाङ्कुशवज्रलाञ्छनम्.......त्वच्चरणाम्बुजद्वयम् என்று ஸ்தோத்ர ரத்நத்திலும், "ஒருகாலிற் சங்கு ஒருகாலிற்சக்கரமுள்ளடி பொறித்தமைந்த இருகாலும்" என்று பெரியாழ்வார் திருமொழியிலும் அநுஸந்திப்பது. ஆக இவற்றாலே அழகு பெற்றிருக்கிற பெரியபெருமாளது திருவடித்தாமரை யிணையை வணங்குகிறோமென்றதாயிற்று. (125)

पुनाति भुवनान्यहं बहुमुखीति सर्वाङ्गुलीझलज्झलितजाह्नवीलहरिवृन्दसन्देहदाः ।
दिवा निशि च रङ्गिणश्चरणचारुकल्पद्रुमप्रवालनवमञ्जरीः नखरुचीर्विगाहेमहि ॥ १२६ ॥

புநாதி புவநாந்யஹம் பஹுமுகீதி ஸர்வாங்குலீ
ஜலஜ்ஜலிதஜாஹ்நவீலஹரிப்ருந்தஸந்தேஹதா:,
திவா நிசி ச ரங்கிணச் சரணசாருகல்பத்ரும
ப்ரவாளநவ மஞ்ஜரீர் நகருசீர் விகாஹேமஹி. (126)

| | | | |
|---|---|---|---|
| அஹம் | - '(கங்கையாகிய) நான் | ஸர்வேதஹரா: | ஸர்வேதஹத்தை விளைவிப்பவரான |
| பஹுமுகீ ஸதீ | பலவாருகப் பெருகா நின்று கொண்டு | ரங்கிண: | — பெரியபெருமாளுடைய |
| புவநாநி | - உலகங்களை | சரண- | - திருவடிகளாகிற |
| புநாமி | - பரிசுத்தமாக்கக்கடவேன்' | சாரு- | - அழகிய |
| இதி | - என்று | கல்பத்ரும- | - கல்பவ்ருக்ஷத்தின் |
| ஸர்வ அங்குலீ- | எல்லாத் திருவிரல்களினின்றும் | ப்ரவால | (விரல்களாகிற) பல்லவங்களினுடைய |
| ஜலஜ்ஜலித- | - சளசளவென்று பெருகின | நவ மஞ்ஜரீ: | - புதிய பூங்கொத்துகள்போன்ற |
| ஜாஹ்நவீ- | — கங்கையினுடைய | நக ருசி: | — நகங்களின் காந்திகளில் |
| லஹரீ ப்ருத- | அலைவரிசைகளோ இவை! என்கிற | திவா நிசி ச | - இரவும் பகலும் |
| | | விகாஹேமஹி | ஆழ்ந்து அநுபவிக்கக்கடவோம். |

* * *—பெரியபெருமாளுடைய திருவடிகளிலுள்ள திருவிரல்களையும் திருநகங்களையும் அநுபவிக்கிருர். பட்டர் இந்த ஸ்தவ வ்யாஜத்தாலே ஜ்ஞாநயஜ்ஞமிறே அநுஷ்டிக்கிறது. பூர்வசதகமாகிற ஒரு யஜ்ஞம் ஸமாப்திக்கு உந்முகமாயிராநின்ற திறே. யஜ்ஞஸமாப்தியிலே அவப்ருதஸ்நாநம் பண்ணப்ராப்தமிறே, திருமுடி தொடங்கித் திருவடியிருக அநுபவித்தவிடாய் தீருகைக்காகவும் நதியிலேபடிந்து குடைந்தாடத் தேட்டமாயிருக்குமிறே. "தயரதன் பெற்ற மரதகமணித் தடத்தருகே நிற்குமிவர் இனி வேறொரு துறை தேடிப்போகவேணுமோ? திருவடிகளிலே பெருகுகின்ற விலக்ஷணப்ரவாஹத்திலே குடைந்தாடுவோமென்கிருர்.

ஒவ்வொரு திருவிரலினின்றும் திருநகங்களின் ஒளிவெள்ளம் ப்ரஸரிப்பதை நோக்குங்கால், முன்பு த்ரிவிக்ரமாவதார காலத்தில் திருவடியில் நின்றும் தோன்றின கங்காநதிதான் 'நான் இன்னமும் பலமுகமாகப் பெருகி உலகங்களைப் புனிதமாக்கக் கடவேன்' என்று எல்லாத் திருவிரல்களினின்றும் சளசளவென்று பெருகுகின்றதோ! என்று சங்கிக்கலாம்படி யிருக்கின்றதென்கிருர்.

இன்னமும் எங்ஙனே யிருக்கின்றதென்னில் [சரணசாருகல்பத்ருமப்ரவாலநவமஞ்ஜரீ:] திருவடிகளாகிற கல்பவ்ருக்ஷத்தின் திருவிரல்களாகிற பல்லவங்களினின்றும் கிளர்ந்த பூங்கொத்துக்களென்னலாம்படி யிருக்கின்றது திருநகங்களின் புகர். பெரிய பெருமாளைக் கல்பவ்ருக்ஷமாகக் கொண்டு, திருவடிகளை அதன் பல்லவமாகக் கொண்டு நககாந்திகளை நவமஞ்ஜரியாகக்கொண்டு உரைக்கவுமாம். ஆக இப்படிப்பட்ட நககிரணப்ரவாஹங்களில் பகலுமிரவும் படிந்து குடைந்தாடுவோமென்றுராயிற்று. (126)

**श्रीरङ्गेन्दोः पदकिसलये नीलमञ्जीरमैत्र्या वन्दे वृन्तप्रणयिमधुपव्रातराजीवजैत्रे ।**
**नित्याभ्यर्चानतविधिमुखस्तोमसंशय्यमानैः हेमाम्भोजैर्निबिडनिकटे रामसीतोपनीतैः ॥१२७॥**

ஸ்ரீரங்கேந்தோ: பதகிஸலயே நீலமஞ்ஜீரமைத்ர்யா
வந்தே வ்ருந்தப்ரணயிமதுபவ்ராதராஜீவஜைத்ரே,
நித்யாப்யர்ச்சாநதவிதிமுகஸ்தோமஸம்சய்யமாநை:
ஹேமாம்போஜைர் நிபிடநிகடே ராமஸீதோபநீதை:. (127)

| | | | |
|---|---|---|---|
| நீல மஞ்ஜீர மைத்ர்யா | நீலரத்னமயமான சிலம்புகள் பொருந்தி யிருப்பதனாலே | ராம வீதா உபநீதை; | ஸ்ரீ ராமனாலும் ஸீதையினாலும் ஸமர்ப்பிக்கப்பட்டனவான |
| வ்ருந்த ப்ரணயி மதுபவ்ராத ராஜீவ ஜைத்ரே | பூவடியைப்பற்றி யிருக்கும் வண்டினங்களை யுடைத்தான தாமரைப்பூவை வென்றிருப்பனவும், | ஹேம அம்போஜை. | பொன் தாமரைப் பூக்களினால் |
| நித்ய அப்யர்ச்சா— | நித்யப்படி திருவாராதனத்தில் | நிபிட நிகடே | இடைவெளியற்ற ஸமீப ப்ரதேசத்தை யுடையவைகளுமான |
| நத- | — வணங்கின | | |
| விதி முக ஸ்தோம- | பிரமனுடைய முகங்களின் கூட்டமோ வென்று | ஸ்ரீரங்க இந்தோ: பத கிஸலயே | பெரிய பெருமாளது பல்லவம் போன்ற திருவடிகளை |
| ஸம்சய்யமானை: | - ஸந்தேஹிக்கப் படுகின்றனவாய் | வந்தே | — வணங்குகிறேன். |

* * *—பெரிய பெருமாளுடைய திருவடிகளை வணங்கி இந்த சதகந்தன்னைத் தலைக்கட்டியருளுகிறார். [நீலமஞ்ஜீரமைத்ர்யா வ்ருந்தப்ரணயிமதுப வ்ராதராஜீவ ஜைத்ரே] நீலரத்னமயமான திருச்சிலம்புகளை அணிந்திருக்கையினாலே—அடியில் வண்டுகள் மொய்த்திருக்கப்பெற்ற தாமரைமலரை வென்றிருக்கின்றனவாம் திருவடிகள். தாமரை மலரின் ஸ்தானத்திலே திருவடிகளும் நீலநூபுர ஸ்தானத்திலே வண்டுத்திரள்களும் கொள்ளப்பட்டன. தாமரைக்கு வண்டுகள் ஸஹாயம்; திருவடிக்கு நீலநூபுரம் ஸஹாயம். ஸஹாயத்தோடு கூடின இரண்டும் போர்செய்ததில் திருவடிக்கு வெற்றியுண்டாயிற்றென்கை.

[நித்யாப்யர்ச்சேத்யாதி.] சக்ரவர்த்தி திருமகனாரும் ஜநககுல ஸுந்தரியும் ஸமர்ப்பித்த பொற்றாமரைமலர்கள் 'நித்தியம் திருவடிகளில் வணங்குகின்ற நான்முகனுடைய முககமலஸமூஹங்களோ இவை!' என்கிற ஸந்தேஹத்திற்கு ஆஸ்பதமாயிருக்கின்றன வென்கிறார். "எம்மாண்பினயன் நான்கு நாவினாலு மெடுத்தேத்தி யீரிரண்டு முகமுங் கொண்டு எம்மாடுமெழிற்கண்கனெட்டினோடுந் தொழுதேத்தி யினிதிறைஞ்ச நின்றசெம்பொனம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ்தோன்ற அணியரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளுமம்மான்" (1—3.) என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தாலும் "கல்பாநேவ பஹூந் கமண்டலுகளத்கங்காப்லுதோபூஜயத் ப்ரஹ்மா த்வாம்." என்ற மேல் உத்தரசதக ச்லோகத்தாலும் நான்முகனுடைய நித்யாராதந நிஷ்டை அறியத்தக்கது.

[ராமஸீதோபநீதை: ஹேமாம்போஜை: நிபிடநிகடே] இது 'பதகிஸலயே' என்றதற்கு விசேஷணம்; த்விதீயா த்விவசநம். ஸ்ரீராமபிரானும் பிராட்டியும் நெடுநாள் ஆராதித்த திவ்யமங்கள விக்ரஹமென்று சொல்லிப் போருவதுண்டிறே. *ஸ்வயமுத ஸீதே! ஸ்வேந ஸ்ரீரங்கதாமநி மைதிலீரமணவபுஷா ஸ்வர்ஹணி ஆராதநாந்யஸிஷம்பித:* என்று உத்தரசதகந்தன்னிலு மருளிச் செய்யப்பட்டது. ஸ்ரீராமபிரான் பகவதாராதநம் பண்ணினமைமைய *ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்* என்று ஸ்ரீராமாயணமும் சொல்லிற்றிறே.

Srivatsam
http://acharya.org

ஆக, இப்படிப்பட்ட பெரிய பெருமாளுடைய திருவடிகளை வணங்குகின்றேனென்றாராயிற்று. (127)

பெருமாள்கோவில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
ஸ்ரீரங்கராஜஸ்தவ வ்யாக்யாநத்தில்
பூர்வசதகம் முற்றுப் பெற்றது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

பட்டர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

Srivatsam



Printed at The Forward Printers, 49, Sarangapani Sannathi Street, KUMBAKONAM.

http://acharya.org